## உங்கள் நவீன பம்பாய்
## ஜடைச் சிங்காரத்தின் அழகைப் பூர்த்திசெய்ய

# கலிபோர்னியன் பாப்பி

ரெஜிஸ்டேர்ட் டிரேட் மார்க்

## கூந்தல் தைலம்
## உபயோகியுங்கள்



**இனாம்!** இந்த ஜடைச் சிங்காரத்தையும் பற்றிய தகவல்களைத் தரும் ஆண்டுப் பிரசுரம் நெ. 6க்கு ஒரு அணா தபால் தலையுடன் விளம்பர இலாகா, தபால் பெட்டி நெ. 822, பம்பாய் 1க்கு எழுதுங்கள். இந்த ஆண்டுப் பிரசுரம் தனித்தனியாக தமிழ், ஹிந்தி, வங்காளி, ஆங்கிலம் என்ற பாஷைகளில் கிடைக்கிறது.

இராஸ்மிக் கம். லிட். லண்டனுக்காக இந்தியாவில் தயாரித்தது. CPH. 14-50 TM

# கல்கி பொருளடக்கம்


மலர் 14 இதழ் 16

1954 நவம்பர் 14

ஜய ௵ ஐப்பசி 29




"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



நான் **துஷாருக்கு** மாற்றிக்கொண்டேன்

**ஏனென்ருல்**

- அது அதிகப்படி தெம்பு அளிக்கிறது
- அது உணவை மிக ருசிக்கச் செய்கிறது
- அது புளித்துப் போவதில்லை
- அது கடவைத்தால் புகையாது
- அது மறுமுறையும் உபயோகப் படுகிறது
- அது மிக்க நயமான வனஸ்பதி
- அது சுகாதார முறையில் தயார் செய்த 10, 5, 2 பவுண்ட் டின்க ளில் கிடைக்கிறது.

இன்றே துஷாருக்கு

மாற்றிக்கொள்ளுங்கள்




துங்கபத்ர இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்
கர்நூல்.

ASP-TL 9/34




மலர் 14 | தமிழ்த் திருநாடு தன்னைப்—பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார் | இதழ் 16

# அசோகரும் நேருஜியும்

நிலப் பரப்பிலும் ஜனத் தொகையிலும் உலகத்திலேயே முதல் ஸ்தானம் வகிக்கும் மாபெரும் சீனு தேசத்துக்குச் சென்று திரும்பிய நமது அருமைத் தலைவர் ஜவாஹர்லால் ஜிக்கு, கல்கத்தாவிலும் புது டில்லியிலும் லட்சக்கணக்கான மக்கள் உணர்ச்சி பொங்க அமோக வரவேற்பு அளித்து, கோடிக்கணக்கான பாரத மக்களின் சார்பில் தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்தனர்.

இந்தோ சீனு, சீனு முதலிய வெளிநாடுகளில் தமது திக்விஜயத்தை வெற்றிகர மாக முடித்துக் கொண்டு வந்துள்ள ஜவாஹர்லால்ஜியின் கருத்துக்கள் இந்தியாவில் மாத்திரமல்ல, உலக நாடுகள் எங்கும் நம்பிக்கையை உண்டாக்கியிருக்கின்றன.

எனவே, நேருஜியின் திக்விஜயம் உலக சரித்திர முக்கியத்துவம் வாய்ந்தது, உலகத் தின் எதிர்கால விதியையே நிர்ணயிக்கக் கூடியது என்பதில் சந்தேகம் இல்லை.

இந்தப் பூவுலக சரித்திரத்திலேயே இதுபோன்ற அதிமுக்கிய சம்பவம் இதற்குமுன் ஒரே ஒரு தடவைதான் நிகழ்ந்தது.

உலக மக்களைப் பிரமிக்கச் செய்த, இன்றளவும் யாரும் மறக்க முடியாத அந்த அதிசய சம்பவம் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் நிகழ்ந்தது.

பல போர்களிலும் வெற்றிமேல் வெற்றி பெற்று இந்தியாவின் ஏக சக்ராதிபதியாக விளங்கிய அசோகர், தாம் போர் முறையை அடியோடு கைவிட்டு விட்டதாகத் திடீரென்று பிரகடனம் செய்து, எல்லோரையும் ஆச்சரியத்தில் மூழ்கடித்தார்.

இனி தமது ராஜ்யம் புத்தபிரானின் உபதேசங்களுக்கு இணங்க, சமாதானத்தையும் சாத்துவீகத்தையும் அடிப்படையாகக் கொண்ட தர்ம ராஜ்யமாக விளங்கும் என்று உல கத்துக்குப் பறைசாற்றினுர்.

செயல் முறையிலும் அவ்விதமே அனுஷ்டித்துக் காட்டினுர்.

பல நாடுகளுக்கும் சமாதானத் தூதர்களை அனுப்பி, புத்த முனிவரின் உபதேசங்களை மக்களிடையே பிரசாரம் செய்தார்.

என்றென்றும் அழியாதவாறு அந்த உபதேசங்களைச் சிலாசாசனங்களில் வடித்தார்.

இந்த அற்புதத்தைக் குறித்துப் பிரபல பிரிட்டிஷ் நூலாசிரியரும் தீர்க்கதரிசியுமான எச். ஜி. வெல்ஸ் கூறுவதைப் பார்ப்போம் :

"சரித்திர ஏடுகளில் பதினுயிரக்கணக்கான சக்கரவர்த்திகளின், முடி மன்னர்களின், ராஜாதிராஜாக்களின் பெயர்கள் சாரி சாரியாக வருவதைக் காண்கிறேம். அந்தப் பெயர்க ளுள் அசோக சக்கரவர்த்தியின் பெயர் மாத்திரமே நட்சத்திர ஜோதியாகப் பிரகாசிக்கிறது. வால்காவிலிருந்து (ருஷ்யா) ஜப்பான் வரையிலும் அவரது புகழும் பெருமையும் பரவி யிருக்கின்றன. சீனு, திபேத் முதலிய இடங்களில் இன்றும் அவரை நினைவு கூர்ந்து பாராட்டி வருகிறுர்கள். சரித்திரத்தில் வேறு எந்த மன்னரும் இவ்வளவு அதிக ஜனங்களின் மதிப் பையும் பாராட்டுதலையும் பெற்றதில்லை."

இவ்வாறாக, உலக சரித்திரத்திலேயே தனிப் பெரும் சிறப்பு வாய்ந்த அசோக சக்கர வர்த்தியைப் பற்றி எச். ஜி. வெல்ஸ் குறிப்பிட்டுள்ளார்.

* * * *

இரண்டாயிரம் ஆண்டுகளுக்குப் பிறகு இப்போது அதே போன்ற அதிசய சம்பவம் இந்த உலகில் நிகழ்ந்திருக்கிறது.

இந்தியாவின் ஏக சக்ராதிபதியான அசோகர் புத்த பகவானின் ஜீவகாருண்யக் கொள்கையைச் சமாதானத் தூதர்களின் மூலம் வெளிநாடுகளில் பரப்பினுர்.

பாரத நாட்டின் முடிசூடா மன்னராக விளங்கும் ஜவாஹர்லால்ஜி காந்தி மகானின் சாத்துவீகக் கொள்கையை உலக நாடுகளில் பரப்ப முயன்று வருகிறுர்.

# இது ஜனநாயகமா?




திருத்தணி பஞ்சாயத்துச் சபையைக் கலைக்கப் பிரகாசம் மந்திரி சபை உத்தரவு பிறப்பித்தது.

அந்த மாபெரும் புனித முயற்சியில் பாரதநாடு ஆரம்ப வெற்றியும் பெற்றுள்ளது.

கொரியாவிலும் இந்தோ சீனாவிலும் போர் நின்று சமாதானம் ஏற்பட்டதற்கு இந்தியாவின் முயற்சியே காரணம் என்பதை உலகம் அறியும்.

எனினும் உலக சமாதானமோ அல்லது போராட்டமோ, சீன சர்க்காரின் போக்கையே பெரிதும் பொறுத்திருக்கிறது என்று கூறலாம்.

உதாரணமாக, கொரியா யுத்த சம்பந்தமாக இந்தியாவின் கோரிக்கைக்குச் செவி சாய்க்க மறுத்துச் சீனா பிடிவாதத்துடன் நடந்து கொண்டிருந்தால், அது உலக யுத்தமாக மாறிப் பேராபத்து நேர்ந்திருக்கக் கூடும்.

அதுபோலவே, இந்தோ சீனப் போரையும் சீனா முற்ற விட்டிருந்தால், பயங்கரமான விளைவுகள் ஏற்பட்டிருக்கலாம்.

இந்தியாவின் முயற்சிக்கு இணங்க, அந்த இரண்டு பிரச்னைகளும் சமாதானமாகத் தீருவதில் குடியரசு சீன சர்க்கார் காட்டிய ஆர்வமே, அதன் சமாதான நோக்கத்தை உலகத்துக்கு வெளிப்படுத்தியது; ஜவாஹர்லால்ஜியின் சீன விஜயத்துக்கும் அடிகோலியது.

சீன சர்க்காரின் அழைப்பை ஏற்று, சீனப் பிரதமர் ஸ்ரீ சூ என் லாய் நேரில் கோரியதற்கு இணங்க, அந்த நாட்டுக்குச் சென்ற நேருஜியை, சீன ஜனாதிபதி மாசேதுங், சீனப் பிரதமர் முதல் கோடிக்கணக்கான பொது மக்கள் வரையில் சகலரும் ராஜோபசாரத்துடன் வரவேற்றனர்.

நேருஜியிடத்திலும் பாரத நாட்டினிடத்திலும் தங்களுக்குள்ள நட்பை, அன்பை, மதிப்பை உலகம் அறியப் பிரகடனப் படுத்தினர்.

குடியரசு சீனாவின் தலைநகரான பீகிங்கில் நடந்த லட்சக்கணக்கான சீன மக்கள் அடங்கிய மாபெரும் பொதுக் கூட்டத்தில் பேசிய ஜவாஹர்லால்ஜி, சுதந்திர இந்தியாவும் சுதந்திர சீனாவும் ஆசியா கண்டத்தின் விதியையே மாற்றி யிருக்கின்றன என்று குறிப்பிட்டார்.

மேற்படி இரு பெரிய நாடுகளும் உலகத்தின் எதிர்கால விதியையும் நிச்சயமாக நிர்ணயிக்க முடியும் என்றும் கூறினர்.

* *

**உ**லக அமைதியையும் சர்வ தேச நல்லுறவையும் நிலைநாட்டுவதற்காக ஸ்தாபிக்கப்பட்ட ஐக்கிய நாடுகள் சபையில் சீனா தேசத்துக்கு ஸ்தானம் இராதது, உலகப் பிரச்னைகள் தீருவதற்கு முட்டுக் கட்டையாக இருந்து வருகிறது.

குடியரசு சீன சர்க்கார் ஆக்கிரமிப்பு நோக்கம் கொண்டிருப்பதாக அமெரிக்கா, பிரிட்டன் முதலிய வல்லரசுகள் குற்றம் சாட்டுகின்றன.

ஆனால் அத்தகைய சந்தேகத்துக்கும் பீதிக்கும் இடமில்லை என்று நேருஜி இப்போது உறுதி கூறியிருப்பதன் மூலம் சீனா விஷயத்தில் அமெரிக்காவின் போக்கு மாறலாம்.

இதைத் தவிர, சீனாவுக்கும் ஆசியா நாடுகளுக்கும் இடையே பெரும் பிரச்னை எழுந்திருக்கிறது.

பர்மா, மலேயா, தாய்லந்து, இந்தோனேஷ்யா முதலிய பல நாடுகளிலும் லட்சக்கணக்கான சீன மக்கள் வாழ்கின்றனர்.

அவர்கள் அனுஷ்டிக்கும் கொள்கை மேற்படி நாடுகளின் எதிர்கால விதியைக்கூட அடியோடு மாற்றி விடலாம்.

அதனாலேயே அந்த நாடுகள் சீனாவின் எதிர் கால இலட்சியத்தைச் சந்தேகத்துக்கு இடமின்றி அறிந்து கொள்ள விரும்புகின்றன.

சமீபத்தில் இந்தியாவுக்கு விஜயம் செய்த பர்மா, இந்தோனேஷ்யப் பிரதமர்கள் மேற்படி விஷயத்தை நேருஜியிடம் நேரில் வற்புறுத்திய தாகவும் தெரிகிறது.

அவ் விஷயமாகச் சீனாவின் கொள்கை தெளிவாகி விடுமாயின், தற்போது ஐரோப்பிய வல்லரசுகளின் அடிச்சுவடைப் பின்பற்றி வரும் தாய்லந்து, பிலிப்பைன்ஸ் நாடுகளின் மனம்கூட மாறுவதற்கு இடம் உண்டாகும்.

இவ்வாறாக, ஆசியாவில் உள்ள எல்லா நாடுகளும் சந்தேகம் தெளிந்து சீனாவுடன் நெருங்கிய உறவு கொள்ளும் பட்சத்தில், ஆசியா நாடுகளின் ஒற்றுமைக்கும் அமைதிக்கும் வழி உண்டாகும்.

ஆசியாவின் அமைதி அகில உலக அமைதிக்கே இன்றியமையாதது அல்லவா !

எனவே, நேருஜியின் சீன விஜயம் உலக அமைதிக்கே அஸ்திவாரமாக அமைந்திருக்கிறது என்பதில் சந்தேகமில்லை.

# ஆந்திர சர்க்காரின் அற்பாயுள்

ஆந்திர ராஜ்யத்தில் சென்ற பல மாதங்களாக நித்திய கண்டம் பூர்ண ஆயுசாக வாழ்ந்து வந்த பிரகாசம் மந்திரி சபை சென்ற வாரம் வீழ்ச்சி அடைந்து விட்டது. மேற்படி மந்திரி சபை இந்த ஒரு வருஷ காலமாகப் பதவியில் இருந்து வந்ததுதான் ஆச்சரியமே யன்றி, அது வீழ்ச்சி யடைந்ததைக் குறித்து ஆச்சரியப்படுவதற்கில்லை. பிரகாசம் மந்திரி சபை மீது எதிர்க் கட்சியினர் கொண்டு வந்த நம்பிக்கை யில்லாத் தீர்மானத்துக்குச் சாதகமாக 69 வாக்குகளும் பாதகமாக 68 வாக்குகளும் கிடைத்ததால், அது நிறைவேறியது. வாக்கு எடுக்கப்படும் சமயத்தில் இரண்டு காங்கிரஸ் அங்கத்தினர்கள் வக்கரித்துக் கொண்டு எதிர்க் கட்சியில் சேர்ந்து கொண்டதாலேயே, நம்பிக்கை யில்லாத் தீர்மானம் நிறைவேறி, ஆந்திர மந்திரி சபை வீழ்ச்சி யுற்றது.

இதிலிருந்து ஆந்திர ராஜ்யத்தில் கட்சிகளின் நிலையற்ற தன்மையையும், காங்கிரஸ் அங்கத்தினர்களிடையே இருந்துவரும் பிளவையும் பூசலையும் அறிந்து கொள்ளலாம்.

பிரகாசம் மந்திரி சபை வீழ்ச்சி அடைந்ததற்குக் காரணம் அவர்கள் செய்த தவறு அல்ல, நேர்மையான காரியம்தான் என்பதைக் கவனிப்போர் அதன் வீழ்ச்சியைக் குறித்து அனுதாபப் படாமல், வருந்தாமல் இருக்க முடியாது.

மதுவிலக்கு சம்பந்தமாக ராமமூர்த்தி கமிட்டியார் செய்திருந்த சிபார்சுகளை அமுலுக்குக் கொண்டு வராததைக் கண்டித்தே நம்பிக்கை யில்லாத் தீர்மானம் கொண்டு வந்தனர். மேற்படி சிபார்சுகளைப் பிரகாசம் மந்திரிசபை அமுலுக்குக் கொண்டு வந்திருந்தால், பெரும் தீங்கு நேர்ந்திருக்கும். ஆந்திர ராஜ்யத்தில் ஏற்பட்ட காங்கிரஸ் சர்க்கார் காங்கிரசின் அடிப்படையான கட்டளையை, காந்தி மகானுக்கு உகந்த முக்கியமான கொள்கையைப் புறக்கணித்து விட்டார்கள் என்ற அபவாதத்துக்கு ஆளாக நேர்ந்திருக்கும். ஆந்திர ராஜ்யத்தில் மதுவிலக்குக் கொள்கையைக் கைவிடுவது, அந்த ராஜ்யத்தை மாத்திரமல்ல, மற்ற ராஜ்யங்களையும் பாதிக்கக் கூடிய பெரும் விபரீதமாக முடிந்திருக்கும். எனவே, அவ்விஷயத்தில் பிரகாசம் மந்திரி சபை தங்கள் பதவிகளைப் பாதுகாத்துக் கொள்வதற்காக அவசரப்பட்டு எதுவும் செய்யாமல், இறுதியில் மந்திரி பதவிகளையே தியாகம் செய்தது மிகவும் பாராட்டத் தக்கது என்பதில் சந்தேகமில்லை.

* * *

ஆந்திர ராஜ்யத்தில் தற்போதுள்ள நிலைமையில் எந்தக் கட்சியும் பிற கட்சிகளின் ஆதரவின்றித் தனியாக மந்திரி சபை அமைக்க முடியாது. எனவே கூட்டுமந்திரி சபை ஏற்பட்டாலும், அந்தச் சபையின் நிலையும் நித்திய கண்டமாகத்தான் இருந்து வரும். ஆகையால் அங்கு மறுபடியும் தேர்தலை நடத்தி நிலையான சர்க்காரை அமைக்க முற்படுவதுதான் நேர்மையும் விவேகமும் ஆகும்.

ஆந்திர ராஜ்யத்திலே காங்கிரஸ் வாதிகளான பிரகாசம் கோஷ்டியும் சஞ்சீவி ரெட்டி கோஷ்டியும் பிரிந்து நின்றதாலேயே, அபிப்பிராயபேதமும் பிளவும் அதிகமாகி, காங்கிரசின் பலம் குறைந்தது. எனவே, மேற்படி தவறை ஆந்திர காங்கிரஸ் தலைவர்கள் உணர்ந்து இப்போது முதற் கொண்டே ஒற்றுமையுடன் உழைக்க முற்படுவார்களாயின், தேர்தலில் காங்கிரஸ்வாதிகள் பெரும்பான்மையான ஸ்தானங்களைப் பெறுவது சாத்தியமாகும்; ஆந்திர ராஜ்யத்தில் நிலையான சர்க்கார் ஏற்படுவதற்கு வழி உண்டாகும்.

# திருத்தணி மக்களுக்கு அநீதி

ஆந்திர மாகாணத்தில் ஏறக்குறைய ஒரு வருஷம் ஆட்சி புரிந்த பிரகாசம் சர்க்கார் வீழ்ச்சி யடையப் போகும் தறுவாயில் அவர்களுக்கு அழியாத அபகீர்த்தியைத் தரும் ஒரு காரியத்தைச் செய்துவிட்டுப் போனார்கள்.

திருத்தணிப் பஞ்சாயத்தைக் கலைத்து விடுவதாகப் பிரகாசம் சர்க்கார் போட்ட உத்தரவைத் தான் குறிப்பிடுகிறோம்.

இதுபோன்ற ஒரு அக்கிரமம் இந்தியாவில் வேறு எந்த மாகாணத்திலும் இதுவரையில் நடந்ததில்லை என்று கூறலாம்.

இந்த அநியாயம் திருத்தணியில் கோயில்கொண்டிருக்கும் முருகப் பெருமானுக்கே பொறுக்காமற் போனதினால்தான், பிரகாசம் சர்க்கார் கவிழ்ந்து விடலாயிற்றோ என்று நினைக்கத் தோன்றுகிறது.

பெரும் பாலான ஜனங்களின் நம்பிக்கையைப் பெற்ற அங்கத்தினர்கள் அடங்கிய திருத்தணி பஞ்சாயத்துச் சபையைக் கலைத்ததற்கு ஆந்திர சர்க்கார் கூறும் காரணங்கள், அவர்களுடைய அநீதியை அப்பட்டமாக எடுத்துக் காட்டுவதாக இருக்கின்றன. ஆந்திர சர்க்காரின் உத்தரவைக் கண்டித்து அந்த நகரில் நடந்த ஊர்த்தானி விருந்து, அவ் விஷயமாக மக்கள்

# தடுக்கி விழுந்தது!




ஆந்திர சட்டசபையில் ஒரு வோட்டு வித்தியாசத்தில் பிரகாசம் மந்திரி சபை கவிழ்ந்து விட்டது.

---

இடையே ஏற்பட்டுள்ள மனக் கொதிப்பை அறிந்து கொள்ளலாம்.

திருத்தணி பஞ்சாயத்துச் சபைமீது ஆந்திர சர்க்கார் சாட்டியுள்ள குற்றங்கள் அடங்கிய விநோத ஜாபிதாவைப் பாருங்கள் :

1. திருத்தணி பஞ்சாயத்துச் சபையோர் தமிழில் தங்கள் நடவடிக்கைகளை நடத்தியது சரியல்ல.

2. பஞ்சாயத்துச் சபை இருக்கும் இடத்துக்கு ராஜாஜி கட்டிடம் என்று பெயர் சூட்டியது முற்றிலும் தவறு.

3. மேற்படி சபையோர் தமிழ் வருஷப் பிறப்புப் பண்டிகையைத் தீபாலங்காரங்களுடன் கொண்டாடியது குற்றம் ஆகும்.

4. திருத்தணி தாலூக்காவை வட ஆற்காடு ஜில்லாவில் சேர்க்க வேண்டும் என்று சர்க்காரைக் கேட்டுக் கொள்வதாகத் திருத்தணி பஞ்சாயத்துச் சபை சமீபத்தில் தீர்மானம் நிறைவேற்றியது சகிக்க முடியாத குற்றம்.

இவைபோன்ற இன்னும் சில விநோதக் குற்றச் சாட்டுகள் அந்த விசித்திர ஜாபிதாவில் அடங்கியிருக்கின்றன.

தமிழர்கள் மிகப் பெரும்பாலோராக உள்ள சபை தமிழிலே நடவடிக்கைகளை நடத்தாமல் வேறு எந்த மொழியிலே நடத்துவது ! ஆந்திர சர்க்காரின் கண்களுக்கு அது பெரும் குற்றமாகிவிட்டது. இதுபோலவே, திருத்தணி பஞ்சாயத்துச் சபை செய்துள்ள ஒவ்வொரு நல்ல காரியமும் ஆந்திர அதிகாரிகளுக்குப் பிடிக்கவில்லை.

இந்த வயிற்றெரிச்சலுக்கு, திருத்தணி பஞ்சாயத்துச் சபையில் தமிழர்கள் பெரும்பாலோராக இருப்பதே மன்னிக்க முடியாத குற்றம் என்று ஆந்திர சர்க்கார் ஒரே போடாகப் போட்டு மேற்படி சபையைக் கலைத்திருக்கலாமே !

* * *

**ப**ல மாதங்களுக்கு முன் திருத்தணி பஞ்சாயத்துச் சபைக்கு நடந்த தேர்தலில் ஒன்றிரண்டு ஸ்தானங்களைத் தவிர மற்றவை யாவும் தமிழர்களுக்கே கிடைத்தன. அதிலிருந்து பொது ஜனங்களின் தீர்ப்பு சந்தேகத்துக்கு இடமின்றி வெளியாகியது. அப் பிரதேசம் தமிழ் நாட்டைச் சேர்ந்தது என்பது உறுதியாயிற்று.

அத்தகைய உண்மையான பிரதிநிதித்துவம் வாய்ந்த பஞ்சாயத்துச் சபையை ஆந்திர சர்க்கார் கலைத்ததன் மூலம், பெரும்பாலான தமிழர் வாழும் அப் பிரதேசத்தில் மக்கள் சர்க்காரிடமிருந்து நியாயமான உரிமைகளைப் பெற முடியாது என்பது மேலும் உறுதியாகி யிருக்கிறது. குடியரசு இந்தியாவில் பஞ்சாயத்துச் சபைகளுக்கு அதிக அதிகாரங்கள் அளிக்க வேண்டும் என்று பிரமுகர்கள் வற்புறுத்தி வரும் இக் காலத்தில், பெரும்பாலான மக்களின் தீர்ப்புக்கு இணங்க உருவான பஞ்சாயத்துச் சபையை ஆந்திர சர்க்கார் கலைத்தது ஜனநாயக தர்மத்துக்கு விரோதமான செய்கை என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. எனவே, திருத்தணி மக்களுக்கு நீதி கிடைக்க வேண்டுமாயின், அவர்கள் அமைதியாக வாழ வேண்டுமாயின், திருத்தணிப் பிரதேசங்கள் தமிழ் நாட்டுடன் இணைக்கப்பட வேண்டியது அவசியம் என்பதை ஆந்திர சர்க்காரின் தான்தோன்றித்தனமான செய்கை ஐயந்திரிபுக்கு இடமின்றி உறுதிப்படுத்தி யிருக்கிறது.





தாயார் மிகவும் மனக்கிலேசமுற்றாள். அவளது குழந்தை, எதிர்பார்த்த அளவுக்குப் புஷ்டிபெறவில்லை- இரவெல்லாம் குழந்தை நிம்மதியின்றியும், பகல் வேளைகளில் சதா சிணுங்கிய வண்ணமுமிருந்தது.

பிறகு.....அவள் சகோதரி 'க்ளாக்ஸோ' வைச் சிபாரிசு செய்தாள்- குழந்தையும் 'க்ளாக்ஸோ' வினால் கிரமமாகத் தேறிவந்ததுமின்றி எப்போதும் சந்தோஷமாயும் இருந்து வந்தது.






திடமான எலும்புகளும் பற்களும் வளர்வதற்கென விடமின் டி யும் நல்ல ரத்தம் உண்டாவதற்காக இரும்புச்சத்தும் சேர்த்துத்தயாரிக்கப்பட்ட 'க்ளாக்ஸோ' ஒரு சிறந்த சுத்தமான போஷாக்களிக்கும் பால் ஆகாரம்.

அன்னையின் கவலைகள் அகன்று விட்டன. குழந்தையும் நன்கு உண்டு, உறங்கி, கிரமமாக புஷ்டியும் பெற்று வளர்கிறது. குழந்தையை 'க்ளாக்ஸோ' போஷாக்கில் இருத்திய பின்னர் எத்தகைய ஆச்சரியகரமான மாறுதல்!

# Glaxo

"க்ளாக்ஸோ" ஒரு சிறந்த சுத்தமான
போஷாக்களிக்கும் பால் ஆகாரம்.

'க்ளாக்ஸோ' லேபரடரீஸ் (இந்தியா) லிமிடெட்
பம்பாய் - கல்கத்தா - மதராஸ்

## இந்தியாவிலேயே மிகப் பெரியதான ரிபைனரியை பர்மா-ஷெல்லார் ஸ்தாபித்துக்கொண்டிருக்கிறார்கள்



பர்மா-ஷெல்... பாரத நாட்டின் வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கிறது

# அமரதாரா

அத்தியாயம் 21

## வஸந்தம் வந்தது!

**எ**ன்னை வளர்த்த தந்தை மந்திரமூர்த்தி சங்கீதக் கலையில் அதிக பற்றுக் கொண்டவர். 'சங்கீதக் கிறுக்கு' என்று அவரைச் சொல்லுவதுண்டு. கச்சேரிகள், காலட்சேபங்களுக்கு அடிக்கடி போய் விட்டு வருவார். அங்கே கேட்ட பாடல்களை வீட்டுக்கு வந்து பாடிக் கொண்டிருப்பார். சில சமயம் வாய்க்குள் முணுகுவதைப் போல் பாடிக் கொண்டே காரியங்களைச் செய்வார். சில சமயம் வாய் விட்டுப் பாடுவார். தியாகராஜ கீர்த்தனை, நந்தனார் கீர்த்தனை, தேவாரம், திருப்புகழ், காவடிச் சிந்து, தெம்மாங்கு, — இப்படி வித விதமான பல வகைப் பாடல்கள் எங்கள் வீட்டில் ஒலித்துக் கொண்டிருக்கும்.

காவடிச் சிந்து மெட்டில் அமைத்த பின் வரும் பாடலை அவர் அடிக்கடி பாடுவதுண்டு :—

"காலமாம் வனத்தில் அண்டக்
கோலமா மரத்தின்மீது
காளி சக்தி என்ற பெயர்கொண்டு-ரீங்
காரமிட்டுலவும் ஒருவண்டு"

இது பாரதியாரின் பாடல் என்று பிற்காலத்திலே நான் அறிந்தேன்.

இந்தப் பாட்டின் வரிகள் என் உள்ளத்தில் பதிந்தன. அவற்றின் பொருள் என்னவென்று தந்தையிடம் கேட்டுத் தெரிந்துகொள்வதற்கு முயன்றேன்.

"அப்பா! காலமாம் வனம் என்று இந்தப் பாட்டில் வருகிறதே? அது என்ன? காலம் என்பது ஒரு காடா?"

"இல்லை, இல்லை. காலத்தை ஒரு காடாகவும், இந்தப் புவனத்திலுள்ள அண்டங்களையெல்லாம் அக் காட்டில் உள்ள மரங்களாகவும் குறிப்பிட்டுக் கவிஞர் பாடியிருக்கிறார்."

"எதற்காக அந்தக் கவிஞர் காலத்தை வனம் என்று சொன்னார்?" என்று அவரிடம் கேட்டேன்.

"அது பாடியவரைக் கேட்டால்தான் தெரியும்!" என்றார் தந்தை.

அத்துடன் நான் விட்டுவிடவில்லை.

"காட்டிலுள்ள மரங்களைக் கண்ணால் பார்க்க முடியும். காலத்தைக் கண்ணால் பார்க்க முடியாதல்லவா?"

"பார்க்க முடியாது. அதற்காக நான் என்ன செய்யட்டும்?"

"நீங்கள் ஒன்றும் செய்ய வேண்டாம். நான் கேட்கும் கேள்விகளுக்குப் பதில் சொன்னால் போதும்!"

"கேள், பார்க்கலாம்?"

"காலம் என்றால் என்ன?"

"காலம் என்றால் 'டைம்' என்று வைத்துக் கொள்!"

"காலத்தைக் கண்ணால் பார்க்க முடியாது; காதினால் கேட்க முடியாது; கையினால் தொடவும் முடியாது. அப்படியிருக்க, காலத்தை எப்படிக் கணக்கிட்டுச் சொல்ல முடியும்?"




"கடிகாரத்தை வைத்துக் கொண்டு கணக்கிட்டுச் சொன்னால் போகிறது!" என்றார்.

"கடிகாரம் இல்லாவிட்டால் எப்படிக் காலத்தைக் கணக்கிடுவது?"

"இரவையும் பகலையும் வைத்துக் கணக்கிடலாம்."

"இரவும் பகலும் சூரிய பகவானால் தானே ஏற்படுகின்றன?"

"ஆமாம்!"

"சூரியனே இல்லாவிட்டால் காலத்தை எப்படிக் கணக்கிடுவீர்கள்?"

"சூரியன் தான் இருக்கிறதே? அதை இல்லையென்று ஏன் வைத்துக் கொண்டு சிரமப்பட வேண்டும்?"

"பூமி தன்னைத்தானே சுற்றுவதனால் இரவும் பகலும் ஏற்படுகின்றன என்று எங்கள் வாத்தியார் சொல்கிறார், அப்பா! அது உண்மைதானே?"

"ஆமாம்."

"பூமி தன்னைத் தானே ஒரு நாளில் சுற்றிக் கொள்வதற்குப் பதிலாக, ஏழு நாளில் சுற்றிக் கொண்டால் அப்போது ஏழு நாள் ஒரு நாள் ஆகி விடுமா?"

"இந்தமாதிரி அசட்டுக் கேள்விகளுக் கெல்லாம் என்னால் பதில் சொல்ல முடியாது!" என்றார் என் தந்தை.

இவ்வாறு நான் மந்திரமூர்த்தியுடன் அடிக்கடி விவாதம் செய்வதுண்டு. சில சமயம் சாந்தமாகப் பதில் சொல்லுவார்; சில சமயம் தொந்தரவு பொறுக்க முடியாமல், "என்னிடம் கற்ற வித்தையைக் கொண்டு என்னையே பரிசோதனை செய்கிறாயா?" என்று சற்றுக் கடுமையாகக் கோபித்துக் கொள்வார்.

இந்தத் தனிச் சிறையில் அடைபட்டிருக்கும் நான் காலத்தின் தத்துவத்தைப் பற்றி அடிக்கடி சிந்தனை செய்கிறேன். இந்தச் சிறையில் நான் கழிக்கும் ஒரு நாள் உண்மையில் ஒரு நாள் ஆகுமா? இங்கே ஒவ்வொரு நாளும் ஒரு யுகமாக அல்லவா மாறி விடுகின்றது?

குங்குமத்துறையில் குழந்தைப் பிராயத்தில் நான் கழித்த நாட்களோ இறகுகள் கட்டிக் கொண்டு பறந்து சென்றன. அங்கும் வருஷத்துக்கு 365 நாட்கள் தான்; நாளுக்கு 24 மணி நேரமும் உண்டு. ஆனால் அந்தப் பதினெட்டு ஆண்டுகளும் பதினெட்டு நாட்கள் போல் அல்லவா பறந்து சென்று விட்டன?

குங்குமத்துறையில் பருவ கால மாறுதல்கள் மிக்க மனோகரமாயிருக்கும். ஒவ்வொரு பருவமும் தனித் தனி மோகன வடிவத்துடன் உல்லாசமாகப் பவனி வந்து கொண்டிருக்கும்.

சாரல் பருவத்தில் வானத்தில் மிதக்கும் மெல்லிய மேகங்கள் அடிக்கடி பன்னீர் தெளித்துக் கொண்டிருக்கும். அந்த இன்பத்தினால் பூமாதேவி ரோமாஞ்சனம் அடைவாள். மரங்கள் செடிகள் எல்லாம் பச்சென்று இருக்கும். அருவியில் விழும் தண்ணீர் பல கால்வாய்களின் வழியாக ஊருக்குள் சலசலவென்று சப்தித்து ஓடிக் கொண்டிருக்கும். வெளியூர்களிலிருந்து ஜனங்கள் வருவதும் போவதுமாயிருப்பார்கள். ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு புது விழாவாகத் தோன்றும்.

மாரிக் காலத்தில் திரள் திரளாகக் கொண்டல்கள் சேர்ந்து வானத்தையெல்லாம் வளைத்துப் படர்ந்து கொண்டு பிரளய காலத்தைப் போல் நீரைப் பொழியும். மலைகள் உச்சியிலிருந்து மழை நீர் ஆயிரம் அருவிகளாகக் கொட்டிக் கொண்டிருக்கும். காற்றும் சேர்ந்து கொண்டு மரங்களைப் படாத பாடு படுத்தும். வீட்டுக்குள்ளேயே இருந்து பல கணி வழியாகப் பார்த்துக் கொண்டேயிருப்பேன். நேரம் போவதே தெரியாது.

பனிக்காலத்தில் குளிர் மிகவும் இதமாக இருக்கும். கழனிகளில் தானியக் கதிர்கள் முற்றிப் பயிர்கள் சாய்ந்து கிடக்கும். நான் என் தந்தை மந்திரமூர்த்தியுடன் சில சமயம் வயல்களைப் பார்வையிடச் செல்வேன். நடுப் பகலில் இருபுறமும் வானளாவி வளர்ந்துள்ள மரங்களின் குளிர்ந்த நிழலில் குங்குமத்துறைச் சாலைகளில் நடப்பதே ஒரு ஆனந்தம். பெரிய மாடுகள் பூட்டிய பெட்டி வண்டியில், கலீர் கலீர் என்று மாடுகளின் கழுத்தில்கட்டிய சதங்கைகள் ஒலிப்பதைக் கேட்டுக் கொண்டு போவது இன்னும் மகிழ்ச்சியை அளிக்கும்.

பனிக் காலத்துக்குப் பிறகு வஸந்த காலம் வரும். எல்லா ஊரிலுந்தான் வஸந்த காலம் வருகிறது. குங்குமத்துறையில் வஸந்தம் ஒரு தனிச் சிறப்பு வாய்ந்தது. காவியங்களில் வஸந்த காலத்தைப் படிக்கும் வர்ணனைகளை யெல்லாம் அங்கே கண்ணெதிரில் காணலாம். புன்னை மரங்கள் பூமாதேவிக்குப் புஷ்பாஞ்சலி செய்ததுபோல் எங்கே பார்த்தாலும் மலர்கள் கொட்டிக் கிடக்கும். செண்பக மலர்களின் இனிய மணம் எங்கும் பரவியிருக்கும். மரங்களில் குலுங்கும் இளம் தளிர்களை இலேசாகச் சிலிர்க்கப் பண்ணிக் கொண்டு வரும் இளம் பூங்காற்று உடம்பில் இலேசாகப் படும்போது உண்டாகும் இன்பத்துக்கு ஈடு இணையே கிடையாது.

அதிகாலையில் விழித்துக் கொள்ளும் போது ஆயிர மாயிரம் பறவைகளின்

குரல்கள் கேட்கும். அவற்றைக் கேட்டுக் கொண்டே படுக்கையில் படுத்திருக்கத் தோன்றும். மத்தியான வேளையில் மலையடிவாரத்து மரங்களின் குளிர்ந்த கிளைகளில் உட்கார்ந்து கொண்டு குயில்கள் ஒன்றை யொன்று கூவி அழைக்கும். மாலை வேளைகளில் தத்தம் இடங்களுக்குத் திரும்பி வரும் பறவைகளின் குரல்கள் கோலாகலமான உற்சவங்களில் உண்டாகும் குதூகலத்வனியைப் போல் இனிமையாக விருக்கும்.

இப்படி எத்தனை சாரல் காலம், மழைக் காலம், பனிக் காலம், வஸந்த காலம் ஆகியவற்றைக் குங்குமத் துறையில் கழித்திருக்கிறேன்! ஒவ்வொரு வருஷமும் அந்தந்தப் பருவங்கள் வரும்போது, ஒரு புதிய அநுபவமாகவே இருக்கும்.

ஒரு நாளைப் போலவே இன்னொரு நாள் இருந்தாலும், ஒவ்வொரு நாளும் மறக்க முடியாத ஒரு புதுமைதான்.

ஆனால் அந்தப் புதுமைகளிலெல்லாம் மிகப் புதுமையான ஒரு நாளும் வந்தது. வருஷத்துக் கொருமுறை வஸந்த காலம் வருவதுபோல் மனிதர்களின் வாழ்க்கையிலும் ஒரு முறை வஸந்த காலம் வரும் போலும்! என்னுடைய வாழ்க்கையிலும் ஒரு நாள் வஸந்தம் வந்தது!

*   *   *

பதினைந்து பிராயம் ஆகும் வரையில் நான் கவலை யென்பது இன்னதென்று அறியாதிருந்தேன். ஆனந்த வெள்ளத்தில் மிதந்து கொண்டிருந்தேன். என்னை வளர்த்த தந்தையின் ஆதரவும், என் அன்னையின் அன்பும் என் இளம் பிராயத்தைச் சொர்க்க வாழ்க்கையாகச் செய்திருந்தன. பன்னிரண்டு வயது வரையில் பள்ளிக்கூடம் சென்று வந்தேன். பள்ளிக்கூடத்துக்கு வரும் மற்றச் சிறுவர் சிறுமியர் என்னைப் பற்றியும் என் குடும்பத்தாரைப் பற்றியும் மறைமுகமாக இழித்துப் பேசுவது என் காதில் விழுந்ததுண்டு. அதையெல்லாம் நான் இலட்சியம் செய்யவே யில்லை. இந்தக் காரணத்தினால் எனக்கு என் பிராயத்துக் கொத்த பெண்களின் சிநேகிதமும் கிடைக்கவில்லை. அதனால் எனக்கு ஏதேனும் நஷ்டம் ஏற்பட்டதாகவும் நான் அறியவில்லை.

எனக்குப் பதினைந்து பிராயம் ஆன பிறகு, மந்திரமூர்த்தியும் சந்திரமணியும் என் கலியாணத்தைப் பற்றிப் பேசத் தொடங்கினார்கள். அவர்களுடைய பேச்சு அரைகுறையாக என் காதில் விழும். அவர்கள் நான் இருப்பதற்காக மறைத்துப் பேசுவது மில்லை; நான் அவர்கள் இருக்குமிடம் சென்று அந்தப் பேச்சைக் கேட்பதுமில்லை. குறுக்கும் நெடுக்கும் போகும் போது சில வார்த்தைகள் காதில் விழும். அந்த வார்த்தைகளே என் உடம்பிலும் உள்ளத்திலும் ஒரு புதிய ஆர்வத்தை உண்டாக்கி விட்டன. அதோடு இன்ப மயமான ஒரு வேதனையும் உண்டாயிற்று. வருங்காலத்தைப் பற்றி எண்ணிக் கவலைப் பட்டேன்; அந்தக் கவலையில் ஒரு மகிழ்ச்சியும் கலந்திருந்தது. "இந்துமதிக்குத் தகுந்த வரன் கிடைக்க வேண்டுமே?" என்று என் பெற்றோர்களின் பேச்சு என் உள்ளத்தில் பற்பல சிந்தனைகளைக் கிளப்பி விட்டது; பகற்கனவு காணச் செய்தது.

ஒரு நாள் மந்திரமூர்த்தி என் அன்னையிடம் சொன்னார்:—"சந்திரா! பெண் குழந்தைகளின் கலியாணத்தைப் பற்றி நாம் எதற்காகக் கவலைப்பட வேண்டும்? பெண்கள் பிறப்பதற்கு முன்னாலேயே அவர்களுக்குப் புருஷர்கள் பிறந்துவிட்டிருப்பார்கள். நம் இந்துமதிக்கும் ஒரு கணவன் எங்கேயோ பிறந்து வளர்ந்திருப்பான் அல்லவா? இந்துமதி பிறப்பதற்கு முன்பே அவன் பிறந்திருக்க வேண்டும்! தானே தேடிக் கொண்டு வந்து சேருவான்! ஆண் பிள்ளைகளின் விஷயம் வேறு. அவர்கள் பிறந்ததற்குப் பிறகு அவர்களை மணந்து கொள்ளும் பெண்கள் பிறந்தாக வேண்டும். ஆகையினால் ஆண் குழந்தைகளின் கலியாணத்தைப் பற்றிக் கவலைப்படுவதில் தான் நியாயம் இருக்கிறது!"

என் தந்தை இந்த வார்த்தைகளை வேடிக்கையாகவும் விந்யாசமாகவும் சொன்னார். ஆனால் என் மனத்தில் இந்த வார்த்தைகள் ஒரு பெரும் புயலையே எழுப்பி விட்டன. "நம்மை மணந்து கொள்ள ஒருவன் முன்னமே பிறந்திருக்கிறான் அல்லவா? அவன் யார்? எப்படியிருப்பான்? எப்படிப் பேசுவான்? அவனைச் சந்திப்பது எப்போது? நம்மைக் கலியாணம் செய்து கொள்ள வருகிறவனிடம் நாம் பிரியமாக இருக்க வேண்டும் அல்லவா? அவனோடு ஒத்து வாழ வேண்டும் அல்லவா? முன்பின் தெரியாத ஒருவனிடம் எப்படிப் பிரியமாக இருக்க முடியும்?"—இத்தகைய சிந்தனைகளில் நெடுநேரம் கழித்தேன்.

இன்னொரு நாள் மந்திரமூர்த்தியும் என் அன்னையும் இதே விஷயமாகப் பேசிக் கொண்டிருந்த போது, அவர்



தமது சகோதரிகள் இருவரையும் பற்றிப் பிரஸ்தாபித்தார். அவர்களில் இரண்டு பேருக்கும் கலியாணத்துக்குரிய பருவம் அடைந்த புதல்வர்கள் இருந்தார்களாம். எனக்கு விவரம் தெரிந்த பிறகு அவருடைய சகோதரிகள் இருவரும் சிலமுறை குங்குமத்துறைக்கு வந்திருக்கிறார்கள். அவர்கள் அச் சமயங்களில் சமையற்கார ஆச்சியையும் மற்ற வேலைக்காரர்களையும் என் தாய் அங்கு வந்து சேர்ந்ததைப் பற்றித் துருவித் துருவிக் கேட்டார்களாம். என்னுடைய பிறப்பைப் பற்றியும், என் தந்தை மாயமாய் மறைந்து விட்டது பற்றியும் விசாரித்தார்களாம். இவையெல்லாம் மந்திரமூர்த்திக்குப் பிடிக்கவில்லை; ஆனால் அவர்களைச் சண்டை பிடித்து அனுப்ப வேண்டாம் என்று பொறுமையுடனிருந்தார். அவர்களோ மந்திரமூர்த்தியின் சொத்துக்களையும் என் பெற்றோர்களின் அபகீர்த்தியையும் எடை போட்டுப் பார்த்து விட்டு, சொத்துத் தான் அதிக பெறுமான முள்ளது என்று தீர்மானித்தார்கள். என்னுடன் அன்பாகப் பேசவும் முயன்றார்கள். "குழந்தை படு சமர்த்து!" "ரொம்பப் புத்திசாலி!" "முகத்தில் களை சொட்டுகிறது!" "அம்மாவை அப்படியே உரித்து வைத்திருக்கிறது!" என்றெல்லாம் என்னைப் புகழ்ந்தார்கள். ஆனால் அவர்களிடம் எனக்குப் பாசம் எதுவும் ஏற்படவில்லை. அவர்களிடம் நெருங்கிப் பழகுவதற்கே எனக்குத் தயக்கமாயிருந்தது.

இப்போது மந்திர மூர்த்தி தமது சகோதரிகளில் ஒருத்தியின் மகனுக்கு என்னை மணம் செய்து கொடுப்பது பற்றிக் குறிப்பிட்டார்.

என் தாயார் இதை ஆட்சேபித்து எதுவும் சொல்ல வில்லை.

"அதைப் பற்றி நாம் யோசிக்கலாம். ஆனால் அவர்கள் இந்துமதியைக் கலியாணம் பண்ணிக் கொள்ளச் சம்மதிக்க வேண்டுமே?" என்றாள்.

"சம்மதிக்காமல் என்ன? சொத்துக்கு ஆசைப்பட்டு உடனே சம்மதிப்பார்கள். நான், நீ என்று போட்டி கூடப் போடுவார்கள்!" என்றார்.

பிறகு அவரே, "அவர்களுடைய சம்மதத்தைப் பற்றிக் கவலை இல்லை. இந்துவுக்கு அந்தப் பிள்ளைகளில் ஒருவனைப் பிடித்திருக்க வேண்டும். அது தான் முக்கியமானது!" என்றார்.

"அவளுக்கு என்ன தெரியும்? பச்சைக் குழந்தை! நாம்தான் யோசித்து அவளுக்கு எது நல்லதென்று தீர்மானிக்க வேண்டும். நாம் சொல்வதற்கு அவள் மீறப் போகிறாளா, என்ன?"

"அப்படி யெல்லாம் குழந்தைகளை வற்புறுத்துவது மிகவும் தவறு. காலம் மாறிவிட்டது. மனம் ஒத்துக் கலியாணம் செய்து கொள்வதுதான் முறை. உன்னுடைய வாழ்க்கையையே எடுத்துக் கொள்ளேன், சந்திரமணி! நீ உன் இஷ்டப்படி தானே காசிலிங்கத்தைக் கலியாணம் செய்து கொண்டாய்?"

"அதன் பலன்தான் இந்தக் கதிக்கு நான் வந்திருக்கிறேன்!" என்று கூறி என் தாயார் அழத்தொடங்கி விட்டாள்.

மந்திரமூர்த்திப் பண்ணையார் பிறகு என் அன்னைக்கு வெகுநேரம் சமாதானம் கூற வேண்டியதாயிற்று.

"எத்தனையோ குடும்பங்களை நான்

"அப்பா! இது என்ன வார்த்தை? என் கலியாணத்துக்காக நான் வருத்தப்படுகிறேன் என்று நினைத்து விட்டீர்களா? இன்னும் நூறு ஜன்மம் எடுத்தாலும், நான் அவரையேதான் மணந்து கொள்வேன். அதற்காக நான் வருத்தப்படவில்லை. இரண்டு வருஷத்தில் வருவேன் என்று சொல்லிவிட்டுப் போனவர், பன்னிரண்டு வருஷங்கள் ஆகியும் வரவில்லையே? அவ்வளவு ஆசையாக இருந்தவர் எப்படி என்னை அடியோடு மறந்துவிட்டிருக்கிறார் என்று எண்ணும்போது தான் அழுகை அழுகையாக வருகிறது!" என்றாள் சந்திரமணி.

"விதியின் கொடுமைக்கு யார் என்ன செய்யலாம்? காசிலிங்கம் எங்கே எந்த நிலைமையில் இருக்கிறானோ, என்னவிதமான சங்கடத்தில் அகப்பட்டுக் கொண்டிருக்கிறானோ, நமக்கு என்ன தெரியும்? வசதி இருந்தால் காசிலிங்கம் வராமல் இருக்க மாட்டான். உன்னை நிச்சயமாக மறந்திருக்க மாட்டான்" என்றார் மந்திரமூர்த்திப் பண்ணையார்.

"ஒரு கடிதமாவது போடக்கூடாதா, அப்பா! ஊரில் என்னைப் பற்றி என்ன பேசிக் கொள்கிறார்களாம், தெரியுமா? 'புருஷன் இறந்து எத்தனையோ காலம் ஆயிற்று! இன்னும் இவள் தாலியைக் கட்டிக் கொண்டு மினுக்கிக் கொண்டிருக்கிறாள்!' என்றெல்லாம் ஏளனமாகப் பேசுகிறார்களாம்."

"அவர்கள் கிடக்கிறார்கள், முட்டாள்கள்! இந்த ஊர்க்காரர்களுக்கு வம்பு வளர்ப்பதே முக்கியமான தொழில். உன் கணவன் நிச்சயமாக உயிரோடிருக்கிறான். அதைப் பற்றிச் சிறிதும் சந்தேகமே வேண்டாம்."

"என் மனத்திலும் அப்படித்தான் தோன்றுகிறது. அவருக்கு ஏதாவது

# சர்க்காரின் உதவி !













புழலேரி பிரதேசத்திலிருந்து விசேஷ போலீஸ் முகாமைச் சுகாதார நலனுக்காக வேறிடத்துக்கு மாற்ற வேண்டும் என்ற சென்னை நகரசபையின் யோசனையைச் சென்னை சர்க்கார் நிராகரித்து விட்டனர்.

---

என்ன கேட்பார்கள்? 'இவள் புருஷன் உயிருடன் இருக்கிறான் என்று தெரியுமா? இவள் கழுத்தில் தாலியைக் கட்டிக் கொண்டிருப்பது சரியா?' என்று கேட்க மாட்டார்களா?"

"அப்படிக் கேட்பவர்களைச் சவுக்கினால் அடித்து விரட்டி விடுவேன்! நீ பேசாமலிரு" என்றார் மந்திரமூர்த்தி.

இந்தச் சமயத்தில் நானும் உள்ளே பிரவேசித்து அம்மாவைக் கட்டிக் கொண்டு, "நீ இப்படியெல்லாம் பேசுவதாயிருந்தால், நான் 'கலியாணமே செய்து கொள்வதில்லை' யென்று சத்தியம் செய்து விடுவேன்!" என்றேன். சந்திரமணி என்னைத் தழுவிக் கொண்டு கண்ணீர் வடித்தாள்.

"அம்மா! நீ என் அப்பாவைக் கலியாணம் செய்து கொண்டது பற்றி வருத்தப் படுகிறாயா?" என்று கேட்டேன்.

"இல்லவே இல்லை, கண்ணே! அதற்காக நான் ஆனந்தப்படுகிறேன். எனக்கு வாய்த்த கணவனைப் போல் உனக்கும் ஒருவன் வாய்க்கட்டும் என்று பிரார்த்தித்துக் கொண்டிருக்கிறேன். ஆனால் அவன் உன்னை விட்டுவிட்டுப் போகாமலிருக்கட்டும்,—எங்களுக்கு நேர்ந்த கஷ்டங்களெல்லாம் உனக்கு நேரிடாமலிருக்கட்டும் என்றும் சேர்த்து வேண்டிக் கொள்கிறேன்!" என்றாள்.

இந்தச் சம்பாஷணையைக் கேட்டது முதல், என் பெற்றோர்கள் கலியாணம் செய்து கொண்ட அதிசய சம்பவத்தைப் பற்றி அடிக்கடி நினைத்துப் பார்க்கலானேன். முன் பின் தெரியாத ஒரு மனிதரை முதல் தடவை பார்த்ததும் அவரிடம் எப்படிப் பிரியம் உண்டாகும்? அவ்வளவு நம்பிக்கை அவரிடம் எப்படி ஏற்படும்? பிறந்தது முதல் பழக்கமான பெற்றோர்களையும் உறவினர்களையும் விட்டு விட்டுப் புதிய மனிதர் ஒருவருடன் புறப்பட்டுச் செல்ல எவ்வாறு மனம் வரும்? அந்தப் புதிய உறவு பழைய நீடித்த உறவுகளைக் காட்டிலும் முக்கியமாவது எப்படி?

என்னுடைய வாழ்க்கையிலும் அப்படி ஒரு சம்பவம் நடக்கக் கூடுமா? புதிதாய் ஒருவரை நான் சந்தித்துத் திடீரென்று அவரிடம் பிரியம் கொள்வேனா? என் பெற்றோர்களிடம் உள்ள அன்பைக் காட்டிலும் அது வலிமை பெற்றதாகி

விடுமா? அது எப்படிச் சாத்தியம்? இயற்கைக்கு விரோதமானதல்லவா?...

இவ்விதம் என் உள்ளத்தில் தோன்றிய பல கேள்விகளுக்கு, ஒரு நாள் நான் சற்றும் எதிர்பாராத சமயத்தில், திடீரென்று பதில் கிடைத்தது. அது என்னை ஆச்சரிய சாகரத்தில் மூழ்கடித்துத் திணறித் திண்டாடும்படி செய்தது.

• • •

இளம் பிராயத்திலிருந்து நான் ரொம்பவும் துருதுருப்பு உள்ளவள் என்று பெயர் வாங்கியிருந்தேன். விழித்துக் கொண்டிருக்கும் நேரத்தில் ஒரு நிமிஷமும் என்னால் சும்மா இருக்க முடியாது. அப்பாவுடன் வயல் வெளிக்குப் போனால் அவர் ஒரு வயலைச் சுற்றிப் பார்ப்பதற்குள் நான் மூன்று வயலைச் சுற்றி வந்து விடுவேன். தேர் திருவிழாவுக்குப் போனால் மற்றவர்களை விட்டு விட்டு நான் முன்னதாக ஓடிப் போய்க் கூட்டத்தில் கலந்து விடுவேன். என்னைத் தேடிக் கண்டு பிடிப்பது மற்றவர்களுக்கு ஒரு பெரிய வேலையாயிருக்கும். அருவிக்குக் குளிக்கப் போனாலும் எல்லாருக்கும் முன்னால் ஓடிப்போய் நிற்பேன். நான் தவறி அருவியின் வெள்ளத்தில் விழாமலிருக்க வேண்டுமே யென்று அம்மா கவலைப் படுவாள். பள்ளிக்கூடத்துக்குப் போன நாட்களில் வகுப்பிலே கூட ஓரிடத்தில் உட்கார்ந்திருப்பது எனக்குப் பிரயாசையாக இருக்கும். ஏதாவது ஒரு காரணத்தைச் சொல்லி அங்குமிங்கும் போய்க் கொண்டிருப்பேன். ஆசிரியர்கள் என்னைக் கோபித்துக் கொள்வார்கள். பள்ளிக்கூடம் விட்டதும் எல்லாருக்கும் முன்னால் ஓடி வீட்டை அடைவேன். வீடு சேர்ந்த பிறகு அங்கேயே இருப்பேனா? அதுவுமில்லை. உடனே, பக்கத்துத் தோட்டத்துக்கோ, மாட்டுக் கொட்டிலுக்கோ போய் விடுவேன்.

மாடு கன்றுகளிடம் பழகுவதில் எனக்குச் சிறு பிராயத்திலிருந்தே பிரியம் ஏற்பட்டிருந்தது. வீட்டுக்குள்ளே சமையல் வேலையில் உதவி செய்வதாகச் சொல்லி 'லூட்டி' அடிப்பேன். என் தொந்தரவு பொறுக்காமல், அம்மா, 'போ! மாட்டுக் கொட்டிலுக்குப் போய் மாட்டுக்குத் தீனி போடு!' என்பாள். உடனே துள்ளிக் கொண்டு ஓடுவேன். மாடுகளுக்குத் தீனி வைப்பது, தும்பைக் கையில் பிடித்துக் கொண்டு போய்த் தொட்டியைக் கலக்கி விட்டுக் கொண்டே தண்ணீர் குடிக்கச் செய்வது.—இவற்றில் எனக்கு மிக்க பிரியம். சில சமயம் "நான்தான் பால் கறப்பேன்" என்று பிடிவாதம் செய்வேன். "மாடு உதைக்கும்" என்று சொன்னால் கேட்க மாட்டேன். பாதி கறந்தானதும், "பாக்கி யெல்லாம் கன்றுக்குட்டிக்கு" என்று சொல்லிக் கன்றை அவிழ்த்து விட்டு விடுவேன். கன்றுக் குட்டியை அவிழ்த்து விட்டு அது துள்ளி ஓடும்போது பின்னோடு ஓடிப் போய்ப் பிடிப்பதில் எனக்கு அளவில்லாத குதூகலம் உண்டாகும். கன்றுக் குட்டி துள்ளுவது போலவே நானும் துள்ளி ஓடிச் சென்று அதைப் பிடிக்க முயல்வேன். சில சமயம் கன்று என்னைக் கீழே தள்ளி விட்டுப் போய் விடும். அதனால் நின்றுவிட மாட்டேன். எழுந்து ஓடிப் போய்ப் பிடிப்பேன்.

தப்பித் தவறிக் கன்றுக்குட்டி தும்பிலிருந்து நழுவி ஓடிப் போனால், அதைப் பிடித்துக் கொண்டு வரும்படி என்னைத் தான் என் வீட்டார் ஏவுவார்கள். கன்றுக் குட்டியை ஓடிப் பிடிப்பதில் எனக்குக் குதூகலம் என்பது அவர்களுக்குத் தெரியும்; தேடிப் பிடித்துக்கொண்டு வந்து விடுவேன் என்ற நம்பிக்கையும் அவர்களுக்கு உண்டு.

எனக்குப் பிராயம் பதினாறு ஆகியிருந்த போது, ஒருநாள் என் தந்தையே இந்த வேலைக்கு என்னை ஏவினார். மந்திர மூர்த்திப் பண்ணையார் எந்தக் காரியத்தையும் நிதானமாகத்தான் செய்வார்; விரைவாக நடக்கக் கூட அவரால் முடியாது. எனக்கோ, நடை என்பதே குதித்துக் கொண்டு ஓடுவதுதான்.

மந்திரமூர்த்தி மாட்டுக் கொட்டிலிலிருந்து "அம்மா! இந்து! கன்றுக்குட்டி அவிழ்த்துக் கொண்டு சாலைப் பக்கம் ஓடிப் போய் விட்டது. போய்ப் பிடித்துக் கொண்டு வா! எங்கேயாவது பஸ்ஸில் மாட்டிக்கொண்டு வைக்கப் போகிறது!" என்று சொன்னார்.

எங்கள் வீடு குங்குமத் துறையில் பிரதானமான சாலைக்கு அருகில் இருந்தது. அதில் மோட்டார் வண்டிகள், மாட்டு வண்டிகள், மோட்டார் பஸ்கள், இவற்றின் போக்குவரவு அதிகம். கன்றுக் குட்டி வீட்டைச் சுற்றியிருந்த தோட்டத்தில் துள்ளிக் கொண்டிருக்கும் வரையில் கவலையில்லை. சாலையில் ஓடிவிட்டால் வண்டியில் மோதிக் கொள்ளும் அபாயம் உண்டு. மேடும் பள்ளமுமாக அமைந்த ஊராதலால், தெறி கெட்டு ஓடும் கன்றுக் குட்டி மேட்டிலிருந்து பள்ளத்தில் துள்ளி விழுந்து காலை ஒடித்துக் கொள்வதும் நேரிடக் கூடியதே.

ஆகவே, "கன்றுக் குட்டி சாலையில் ஓடி விட்டது!" என்று மந்திரமூர்த்தியின் குரல் கேட்டதும், வீட்டுக்குள் கறிகாய் நறுக்கிக் கொண்டிருந்தவள், கறிகாயை அப்படியே போட்டு விட்டு, எழுந்து ஓடினேன்.

"எழுந்து ஓடுவதற்கு ஏதாவது சாக்குக் கிடைக்க வேண்டியதுதான்; மறு விநாடி இந்துவைக் காண முடியாது!" என்று அம்மா அடிக்கடி சொல்லுவாள். அவளுடைய வாக்கை நானும் உண்மையாக நிறைவேற்றிக் கொண்டு வந்தேன்.

ஆயினும் அன்று நான் வெளியே வருவதற்குள் கன்றுக்குட்டி சாலையில் வெகு தூரம் போய் விட்டது. எத்தனை தூரம் போனால் என்ன? அதை நான் விட்டு விடுவேனா?

அந்தக் கன்றுக்குட்டிக்கு நான் 'லீலாவதி' என்று பெயரிட்டிருந்தேன். 'லில்லி' 'லில்லி' என்று கூவி அழைத்துக் கொண்டு கன்றுக் குட்டியைத் துரத்திக் கொண்டு ஓடினேன். என்னுடைய குரலைக் கேட்டதும் லில்லி மேலும் உற்சாகமடைந்து துள்ளிக் குதித்து ஓடியது.

## அத்தியாயம் 22

# முகம் மலர்ந்தது!

கடைசியாக, மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்க, வியர்த்து விருவிருத்து, லில்லியைப் போய்ப் பிடித்து விட்டேன். நல்ல வேளையாக அதன் கழுத்தில் தும்பு இருந்தது. அதைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டேன். பிடித்துக் கொண்ட பிறகும் கன்று துள்ளலையும் ஓட்டத்தையும் நிறுத்த வில்லை. என்னையும் சேர்த்து இழுத்துக் கொண்டு ஓடியது.

"லில்லி! லில்லி! உனக்கு இன்றைக்கு என்ன வந்து விட்டது? போக்கிரிப் பெண்ணே!" என்று கன்றுடன் குதூகலமாகப் பேசிக்கொண்டே அது இழுத்த இழுப்புக்கு ஓடினேன்.

சாலையில் ஒரு திருப்பம் வந்தது. 'பூம்' 'பூம்' என்று மோட்டாரின் குழல் சத்தம் காதைத் துளைத்துக் கொண்டு கேட்டது. சமீபத்தில் கேட்ட அந்தச் சத்தம் எனக்கு மனக் குழப்பத்தை உண்டாக்கியது. தலை கிறு கிறுத்தது. அடுத்த விநாடி ஒரு மோட்டார் என்னை இடித்துக் கொண்டு போவதுபோல் அவ்வளவு சமீபத்தில் வந்து விட்டது. நான் தப்பினேன். ஆனால் கன்றுக்குட்டிமேல் வண்டி ஏறிவிடும் என்ற பீதி என் மனத்தில் உண்டாயிற்று. அப்போதும் நான் தும்பை விடாமல் கன்றுக் குட்டியை இழுத்துப் பிடித்துக் கொண்டிருந்தேன்.

'கரகர கிர்கிர்ர்' என்ற சத்தத்துடன் மோட்டார் வண்டி நின்றது. ஒரு நூலிழையில் கன்றுக் குட்டியின் உயிர் தப்பிப் பிழைத்தது.

எனக்கு வெகு சமீபத்தில் யாரோ இங்கிலீஷில் பேசும் குரல் கேட்டது.

பேசியது யார் என்று திரும்பிப் பார்த்தேன். எனக்கு இடது புறத்தில் மோட்டாரின் பின் ஆசனத்தில் இருவர் உட்கார்ந்திருந்தார்கள். ஒருவர் அந்த ஊர் ஜமீன்தார் தங்க பாண்டியன். இன்னொருவரை நான் பார்த்ததில்லை. அந்தப் புது மனிதர் என்னைப் பார்த்துப் புன்சிரிப்புச் சிரித்துக் கொண்டு, "நல்ல கெட்டிக்காரப் பெண், அம்மா, நீ! உயிர் போனாலும் போகிறதென்று கன்றுக் குட்டியின் தும்பைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டிருக்கிறாயே?" என்றார்.

இப்படி அவர் சொல்லி வாய் மூடுவதற்குள் என் கையிலிருந்து தும்பு நழுவி விட்டது. ஏற்கெனவே மிரண்டு போயிருந்த கன்று விழுந்தடித்து ஓடியது.

காரில் இருந்த புது மனிதர் கலகலவென்று சிரித்தார். எனக்கும் சிரிப்பு வந்தது; அதே சமயத்தில் என்றுமில்லாத வெட்கம் பொங்கி வந்தது.

ஏதாவது அவருக்குப் பதில் சொல்ல வேண்டும் என்று நினைத்தேன். ஒன்றும் நாவில் வரவில்லை. நானும் ஒரு தடவை சிரித்து விட்டு ஒரு திரும்புத் திரும்பி ஓட்டம் பிடித்தேன். கன்றை விட வேகமாக ஓடி வீட்டை அடைந்தேன்.

வீட்டுக்குள்ளே போனதும் முதலில் நிலைக் கண்ணாடியின் முன்னால் போய் நின்று பார்த்தேன். என் முகத்தின் அலங்கோலத்தைப் பார்க்க எனக்கே சகிக்க வில்லை. கன்னங்களில் வியர்வை துளித்து வழிந்து கொண்டிருந்தது. நெற்றியில் பொட்டுக் கலைந்திருந்தது. தலை மயிர் கலைந்து முன்னால் கசாமுசா வென்று தொங்கியது. நல்ல வேளையாகக் கண்ணுக்கு மை இட்டுக் கொள்ள வில்லை. இட்டுக் கொண்டிருந்தால், முகமெல்லாம் கரி வழிந்திருக்கும். அன்றைக்கு என்று அழுக்கேறிய பழைய

தாவணி ஒன்றை உடுத்திக் கொண்டிருந்தேன். மொத்தத்தில் என்னைப் போன்ற அவலட்சண உருவம் உலகிலேயே இருக்க முடியாது என்று தோன்றியது.

இருந்தால் இருக்கட்டுமே! யாராவது பெண் பார்ப்பதற்கு வரப் போகிறார்களா, என்ன? அது ஒன்று மில்லை.

வழியில் போகிற யாரோ இரண்டு பேர் நம்மைப் பற்றி என்ன நினைத்துக் கொண்டால், என்ன?

அப்படியும் சொல்லி விடுவதற்கில்லை. இரண்டு பேரில் ஒருவர்தான் புதிய மனிதர். இன்னொருவர் அந்த ஊர் ஜமீன்தார் அல்லவா?

இருக்கட்டும்; ஜமீன்தார்தான்! அவருக்கும் நமக்கும் என்ன சம்பந்தம்?......

சே! அப்படி ஒதுக்கித் தள்ளிவிடவும் கூடாது. எங்கள் குடும்பத்துக்கும் ஜமீன்தாருக்கும் ஒரு சம்பந்தம் இருந்தது. ஆனால் அது திருப்திகரமான சம்பந்தமா என்று சொல்ல முடியாது.

மந்திரமூர்த்திக்கு இளம் ஜமீன்தாரிடம் எப்போதுமே நல்ல அபிப்பிராயம் உண்டு. "ரொம்ப சாதுவான பிள்ளை; கர்வம் சிறிதுமில்லாமல் அடக்கமாக நடந்து கொள்கிறார். ஆனால் என்ன செய்வது? ஒரு துஷ்டனுடைய அதிகாரத்தில் சிக்கிக் கொண்டிருக்கிறார். வருங் காலத்தில் என்ன நடக்குமோ, தெரிய வில்லை!" என்று மிகுந்த அநுதாபத்துடன் பேசுவார்.

எனக்கு என்னமோ ஆரம்பத்திலிருந்து ஜமீன்தார் தங்க பாண்டியனிடம் அச்சமாக இருந்தது. அவர் நடவடிக்கைகள் சில அதற்கு ஆதாரமாக இருந்தன.

ஆரம்பப் பள்ளிக்கூடத்தில் நான் முதல் வகுப்பில் சேர்ந்த போது, அதே பள்ளிக்கூடத்தில் தங்கபாண்டியன் மேல் வகுப்பில் படித்துக் கொண்டிருந்தார். சிறு பிள்ளையாயிருந்தாலும் ஆசிரியர்கள் முதற் கொண்டு அனைவரும் அவரை ஜமீன்தார் என்றும், மகாராஜா என்றும் அழைப்பார்கள். அவரும் ராஜ தோரணையில் ஜரிகைக் குல்லா தரித்துக் கொண்டும், வெல்வெட் சட்டை போட்டுக் கொண்டும், காதில் வைரக் கடுக்கன்களை அணிந்து கொண்டும் வருவார்.

அவரைக் கண்டதுமே நான் பயந்து ஒதுங்கிப் போய் விடுவேன். ஆனால் அவர் அப்படி விடுவதில்லை. சில சமயம் தூரத்திலிருந்தபடி என்னைக் கோபமாகக் கண்களை அகல விழித்துப் பார்ப்பார். சில சமயம் அருகில் வந்து ஏதோ சொல்லுவதற்கு ஆரம்பிப்பார். இரண்டு வார்த்தை காதில் விழுவதற்குள் நான ஓடியே போய் விடுவேன்.

இப்படிச் சில காலம் நடந்து வந்தது. எங்கள் ஊரில் பெண் குழந்தைகளுக்குத் தனியாகப் பள்ளிக்கூடம் வைத்தார்கள். அந்தப் பள்ளிக் கூடத்துக்கு நான் போகத் தொடங்கினேன்.

இதன் பிறகு ஜமீன்தாரைச் சந்திக்க அதிக சந்தர்ப்பங்கள் கிடைப்பதில்லை. சாலையிலும், வீதியிலும், அருவிக்கரையிலும் சில சமயம் அபூர்வமாகப் பார்ப்பேன். பார்த்ததுமே ஒதுங்கித் தூரத்தில் போய் விடுவேன்.

உள்ளூரில் படித்து முடிந்த பிறகு, ஜமீன்தார் மேல் படிப்புக்காகப் பட்டணம் போயிருப்பதாகச் சொன்னார்கள். ஆனாலும் வருஷத்துக்கு நாலு தடவையாவது ஊருக்கு வருவார். அவர் வந்தது பற்றியும் திரும்பிப் போனது பற்றியும் அக்கம் பக்கத்திலுள்ளவர்கள் பெரியதொரு விசேஷ சம்பவத்தைப் போலப் பேசிக் கொள்வார்கள்.

இரண்டு வருஷங்களுக்கு முன் ஒரு தடவை ஜமீன்தார் தங்கபாண்டியன் எங்கள் வீட்டுக்கு வந்தார். அவரைத் தூரத்தில் கண்டதுமே நான் உள்ளே போய்க் காமிரா உள் மூலையில் மறைந்து நின்று கொண்டேன்.

வாசல் தாழ்வாரத்தில் அச் சமயம் இருந்த மந்திரமூர்த்தி ஜமீன்தார் தங்கபாண்டியனை வரவேற்றார். நாற்காலியில் அமரும்படி சொன்னார்.

பட்டணத்தில் படிப்பைப் பற்றியும் அங்கு வசிக்கும் இடம் முதலியவை பற்றியும் கேட்டார்.

தங்க பாண்டியன் அதற்கெல்லாம் பதில் கூறிய பிறகு, "ஐயா! தங்களிடம் ஒரு விஷயம் கேட்கலாம் என்று வந்தேன். கேட்டால் பதில் சொல்கிறீர்களா?" என்றார்.

"எனக்குத் தெரிந்திருந்தால் கட்டாயம் சொல்லுகிறேன்."

"இங்கே யாரும் இல்லையே?"

"ஒருவரும் இல்லை; தாராளமாகக் கேளுங்கள்."

அந்தச் சமயம் ஜன்னலுக்குப் பின்னாலிருந்த நான் "இதோ நான் இருக்கிறேன்" என்று சொல்ல நினைத்தேன். வாய் எழாமல் பேசாமலிருந்துவிட்டேன். தங்கபாண்டியன் என்ன கேட்கப் போகிறார் என்பதையும் தெரிந்து கொள்ள விரும்பினேன். பிறர் பேசுவதை ஒட்டுக் கேட்பது முறையற்ற செயல் என்பதை அச்சமயம் நான் அறிந்திருக்கவில்லை.


தலைவலியால் நான் தற்போது கஷ்டப்படுவ தில்லை. ஏனெனில் நான்
அனஸின்
உட்கொள்ளுகிறேன்
DOES NOT HARM THE HEART

"ஐயா! என் தகப்பனரை இந்துமதியின் தகப்பனர் மலைமேல் வேட்டையாடும்போது சுட்டுக் கொன்று விட்டதாகச் சொல்கிறீர்களே? அது உண்மையா?" என்று மிகுந்த ஆவலுடன் தங்க பாண்டியன் கேட்டார்.

"முழுப் பொய்! அந்தப் பேச்சை நீங்கள் நம்ப வேண்டாம், தம்பி!" என்று சொன்னர் மந்திரமூர்த்தி.

பிறகு, ஜமீன்தார் சுட்டுக் கொல்லப்பட்ட அன்று, அதே நேரத்தில் காசிலிங்கம் திருநந்திபுரத்தில் கலாட்டா செய்ததாகக் கைது செய்யப் பட்டதையும் சொன்னர். "அன்றைக்கு நானே திருநந்திபுரத்தில் இருந்தேன், தம்பி! மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் ஆஜராகி யிருந்தேன். அதனால் சத்தியமாய்ச் சொல்கிறேன், தம்பி!"

"தங்கள் வார்த்தையை நான் நம்புகிறேன். ஆனல் எதற்காக அவர்மீது இந்தப் பழியைச் சுமத்துகிறீர்கள் என்பதுதான் தெரியவில்லை."

"யார் சுமத்துகிறீர்கள்? அந்தப் பயங்கரமான குற்றத்தைச் செய்தவர்களே தங்கள் குற்றத்தை மறைப்பதற்காக இவ்விதம் காசிலிங்கத்தின்மீது பழியைப் போடுகிறீர்களோ, என்னமோ?"

"அப்படியும் இருக்கலாம்!" என்றார் தங்கபாண்டியன். பழி சொன்னவர் யார் என்பதை மட்டும் கூறவில்லை.

மேலும் தொடர்ந்து, "என் தகப்பனர் காசிலிங்கத்திடம் மிக்க பிரியம் வைத்திருந்தார் என்று எனக்கு ஞாபகம் இருக்கிறது. சிலகாலம் காசிலிங்கம் அடிக்கடி எங்கள் வீட்டுக்கு வந்து கொண்டிருந்தது ஞாபகம் இருக்கிறது. என்னிடத்தில் கூட அவர் மிக்க அன்பாகப் பேசுவார்" என்று கூறினர் ஜமீன்தார்.

"ஆகையினலேதான் அவர் மீது இந்தப் பழியைச் சுமத்துவது பெருங் கொடுமை யென்று சொல்கிறேன். நீங்களாவது சந்தேகம் தீர்ந்து உறுதி பெற்றால் திருப்தி அடைவேன்."

"அந்தப் பழியைச் சில காலம் நான் நம்பி யிருந்ததை நினைத்தால்தான் எனக்கே ஆச்சரியமா யிருக்கிறது. அதை நம்பி இந்துமதி யிடத்தில் கூட நான் சில சமயம் துவேஷம் பாராட்டி நடந்து கொண்டிருக்கிறேன். இந்துமதியை ஒரு தடவை பார்த்து அவளிடம் மன்னிப்புக் கேட்க விரும்புகிறேன்."

"நன்றா யிருக்கிறது பேச்சு! இந்துமதி பச்சைக் குழந்தை! அவள் அதை யெல்லாம் நினைத்துக் கொண்டே இருக்க மாட்டாள். அவளிடம் மகாராஜா மன்னிப்புக் கேட்பதாவது?"

"செய்த தவறை ஒப்புக் கொண்டு மன்னிப்புக் கேட்பதில் குற்றமொன்று மில்லை, ஐயா! போனல் போகட்டும். உங்கள் குடும்பத்துக்கும் எங்கள் குடும்பத்துக்கும் இன்னமும் கோர்ட்டில் வழக்குகள் நடந்து கொண்டிருக்கின்றன என்று தெரிகிறது. இது எனக்கு மிக்க வருத்தம் தருகிறது."

"மகாராஜாவுக்கு உரிய பிராயம் வந்து அதிகாரம் கைக்கு வந்து விட்டால் எல்லாம் சரியாகப் போகிறது!" என்றார்.

"நான் மகாராஜாவும் இல்லை; அதிகாரம் என் கைக்கு வரப்போவது மில்லை. அப்படி வந்தாலும் எனக்கு அந்த அதிகாரம் வேண்டாம். இந்துமதி வீட்டில் இல்லையே?" என்றார்.

"இல்லைபோலத்தான் தோன்றுகிறது. அம்மாவும் பெண்ணுமாக அருவிக்குக் குளிக்கப் போயிருக்கிறீர்கள் போலிருக்கிறது" என்றார் பண்ணையார்.

மறுபடியும் எனக்கு வெளிப்பட்டு வந்து "இதோ இருக்கிறேன்" என்று சொல்லலாமா என்று தோன்றியது. அதற்குத் துணிவு ஏற்படவில்லை. மேலும், என் தகப்பனரைப் பற்றி ஜமீன்தார் சொன்னது எனக்கு மிக்க ஆத்திரத்தையும் அருவருப்பையும் அளித்திருந்தது. அந்த வார்த்தைகளைக் கூறின மனிதரைப் பார்க்கவே எனக்குப் பிடிக்கவில்லை. என் தந்தையா கொலைகாரர்? அவர் மீது இந்தப் பயங்கரமான பழியைச் சுமத்தும் பாதகர்கள் யார்?......

ஜமீன்தார் என்னைப் பார்க்காமலேயே மந்திர மூர்த்திப் பண்ணையாரிடம் விடை பெற்றுக் கொண்டு சென்றார்.

இரண்டு ஆண்டுகளுக்கு முன்னல் நடந்த இந்தச் சம்பவம் என் மனதில் நன்ருகப் பதிந்திருந்தது. இந்த இரண்டு வருஷத்தில் ஜமீன்தார் தங்க பாண்டியன் எவ்வளவு நன்ருக வளர்ந்து விட்டார்? நாம் கூட இந்த இரண்டு ஆண்டில் எவ்வளவு வளர்ச்சி யடைந்திருக்கிறோமோ, என்னமோ! ஆமாம்; பாவாடையும் தாவணியும் எவ்வளவு தடவை பற்ருமல் போய்ப் புதிது வாங்கி யிருக்கிறோம்!

இம்மாதிரி பல பழைய சம்பவங்களை ஞாபகப் படுத்திக் கொண்டு சிந்தனை செய்தேன். ஆனல் என் சிந்தனையின் போது இடையிடையே அந்தப் புது மனிதரின் புன் சிரிப்பு மலர்ந்த முகம் குறுக்கிட்டுக் கொண்டிருந்தது. (தொடரும்)

# என்றும் இளைஞர்!


















இந்தியப் பிரதமர் ஜவாஹர்லால் நேருவின் பிறந்த நாள் நவம்பர் மாதம் 14-ந் தேதி வருகிறது.




பேரிகை கொட்டினார்கள்! முரசம் முழங்கினார்கள்! சங்கம் ஊதினார்கள்! நாதஸ்வரம் வாசித்தார்கள்! குண்டு போட்டார்கள்! கொடி உயர்த்தினார்கள்! விழாக் கொண்டாடினார்கள்! "வந்தே மாதரம்" என்று வணங்கினார்கள்! "ஜெ ஹிந்த்!" என்று கோஷித்தார்கள்!

இவைகள் எல்லாம் கனவு அல்ல; பிரமை அல்ல; கற்பனையுமல்ல. நவம்பர் முதல் தேதி புதுச்சேரி நகரத்தில் கண் முன்னே நடந்த சத்தியக் காட்சி. பாரத புண்ணிய பூமியில் இருநூற்றுநாற்பது வருஷத்துப் பிரஞ்சு ஆட்சி முடிவடைந்தது. பாரத நாட்டில் பல பெரியோர்கள் செய்த தவம் பலித்தது. ஆயிரமாயிரம் தேச பக்தர்கள் கண்ட கனவு நனவாயிற்று. லட்சோப லட்சம் தேசத் தொண்டர்கள் செய்த தியாகம் பலன் தந்தது!

புதுச்சேரி நகரத்தில் சென்ற மாதம் இறுதி வரையில் பிரஞ்சுக் கொடி பறந்து கொண்டிருந்த அரசாங்க மாளிகைகளிலும், சங்கக் கட்டிடக் கொடி மரத்திலும், போலீஸ் ஸ்டேஷன்களிலும் நவம்பர் முதல் தேதி யன்று காலையில் தாயின் மணிக்கொடி ஏறி ஆடிப் பறக்க ஆரம்பித்தது. அதில் நீல வர்ணத்தில் பொறித்திருக்கும் அசோகச் சக்கரம் இந்தியாவின் ஒருமையையும் பழைமையின் பெருமையையும் ஒருங்கே காட்டி இந்தியா ஒரே சாம்ராஜ்யமாகத் திகழ்ந்து கொண்டிருந்த காலத்தை நினைவூட்டிக் கொண்டிருந்தது. அந்தத் தர்ம சக்கரத்தைப் பார்த்துப் புதுச்சேரி மக்கள் குதூகலப் பட்டார்கள். ஆனந்த மிகுதியால் கூத்தாடினார்கள்.

முதல் நாள் அக்டோபர் 31-ந் தேதி வரையில் அழுதுவடிந்த வண்ணம் அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்த புதுச்சேரி நகரம் நவம்பர் முதல் தேதி காலையில் ஆனந்த நகரமாக, குதூகலப் பட்டணமாக விழித்தெழுந்தது.

அடிமைத் தளையில் கட்டுண்டிருந்த மக்கள் ஆர்ப்பரித்துத் துள்ளி எழுந்தனர். அஞ்சிப் பதுங்கிக் கொண்டிருந்த ஜனங்கள் கோலாகலமாக ஊர்வலம் நடத்தினார்கள். துவேஷத்தினாலும் அறியாமையினாலும் அடிதடியில் ஈடுபட்டுக் கொண்டிருந்தவர்கள் ஒருவரை யொருவர் கட்டிக் கொண்டு குதூகலப் பட்டார்கள். உரத்துப் பேசக்கூட உரிமை யில்லாமல் மெலிந்த குரலில் முனகிக் கொண்டிருந்தவர்கள் வானளாவும்படி ஜெ கோஷம் புரிந்தார்கள்.

காலிகளின் அட்டகாசத்தால் வெறிச்சோடிக் கிடந்த புதுச்சேரி நகரத்து வீதிகளில் ஜன சமுத்திரம் பொங்கி எழுந்தது.

மிதமிஞ்சிய மகிழ்ச்சியினால் மக்கள் இன்னது செய்வதென்று தெரியாமல் வீதிகளில் அலைந்தனர். ஆண்கள், பெண்கள், வயது முதிர்ந்த பெரியோர்கள், சின்னஞ்சிறு குழந்தைகள் எல்லாம் நன்றாக ஆடை அலங்காரம் செய்து கொண்டு நடு வீதிகளில் அலைந்து கொண்டிருந்தனர்.

** ** **

நவம்பர் முதல் தேதி திங்கட்கிழமை காலையில் புதுச்சேரி நகரத்தில் காலை ஏழு மணி வரையில் சூரியன் உதயமாகவில்லை. சூரியன் உதயமாக வேண்டிய நேரத்தை வான சாஸ்திரிகள் முன்னமேயே கணக்காகக் குறிப்பிட்டிருந்தும் சூரியன் ஏனோ தாமதித்துக் கொண்டு உதயமாகாமலே இருந்தான். இதைப் பற்றிப் பிற்பாடு விசாரித்ததில் பாரத நாட்டின் தாயின் மணிக்கொடி விடுதலை பெற்ற புதுச்சேரியில் பட்டொளி வீசிப் பறந்த பிறகு, அந்த சுதந்திர சூரியன் உதயமான பின்னரே, தான் உதயமாகப் போவதாகப் பழைய சூரியன் தெரிவித்தான்.

மற்றோர் அதிசயம் ஒன்றும் நடந்தது. அன்று காலையில் புதுச்சேரி கடற்கரைக்குப் போன போது, கடலையும், அலைகளையும் அவற்றின் ஓசையையும் காண முடியாமல் திடுக்கிட்டேன். சமுத்திர ராஜனும் அவன் பரிவாரங்களும் மனித உருவங்கள் எடுத்துக் கடற்கரையையும் அதன் சுற்றுப்புறங்களையும், புதுச்சேரி சர்க்கார் கட்டிடங்களையும் மூழ்க அடித்த காட்சியைக் கண்டு வியந்தேன். புதுச்சேரியின் சுதந்திர தேசிய இதிகாசம் எழுதுபவர்கள் இந்த அற்புதத்தைக் கொட்டை எழுத்துக்களில் கட்டாயம் எழுதித் தான் ஆக வேணும்.

"புதுச்சேரி சர்க்கார் மாளிகையில் நவம்பர் முதல் தேதி ஆறே முக்கால் மணிக்குப் பிரஞ்சு ஆட்சியின் நிர்வாகம் இந்தியர் கைக்கு மாறிவிடும். பிரஞ்சிந்தியப் பிரதேசங்கள் விடுதலை பெற்றுவிடும்" என்று பத்திரிகைகளில் செய்திகள் பிரசுரமாகி யிருந்தன.

காணக் கிடைக்காதிருந்த இந்தக் காட்சியை நேரில் காணப் புறப்பட்டேன். புதுச்சேரி சர்க்கார் மாளிகைகள், ஆஸ்பத்திரிகள் முதலிய கட்டிடங்கள் கருங்கல்லால் கட்டியவை போலல்லாமல் மனிதர்களின் தலைகளால் கட்டப்பட்டது போல் காணப்பட்டன. அங்கு வந்த ஜனக்கூட்டம்











அந்தக் கட்டிடங்களை அப்படியே புரட்டிக்கொண்டு போய்ச் சமுத்திரத்தில் போட்டிருக்கும். நல்ல வேளை அந்தக் கட்டிடங்கள் நகரவில்லை!

ஒரு கணம் எது சர்க்கார் மாளிகை என்று தெரியாமல் தவித்துக் கொண்டிருந்தேன். அடுத்த கணம் ஜன சமுத்திர அலையில் மோதப்பட்டுச் சர்க்கார் மாளிகைக்கு அருகில் சென்றுவிட்டேன். இந்தச் சமயத்தில் "கார் வந்து விட்டது!" "அதோ வந்து விட்டது கார்!" என்று சொன்னார்கள். இந்திய சர்க்கார் பிரதிநிதி ஸ்ரீ கேவல்சிங் சௌத்திரியைச் சுமந்து கொண்டு வந்த கார் ஆறு மணி நாற்பது நிமிஷத்துக்கெல்லாம் கம்பீரமாக வந்தது. அந்தக் காருக்கும் குஷி பிறந்து விட்டது! தேசியக் கொடியைக் காதில் மாட்டிக் கொண்டு வந்தது.

கார் வந்ததுதான் தாமதம்; ஜனங்களுக்கும் உற்சாகம் பீறிட்டுக் கொண்டு விட்டது. "ஜே ஹிந்த்!" என்று கோஷமிட்டனர். ஸ்ரீ கேவல் சிங் கூப்பிய கரத்துடன் காரிலிருந்து இறங்கினார். பிரஞ்சுப் பிரதிநிதி ஸ்ரீ பியரே லாண்டி அவரைக் கைகுலுக்கி வரவேற்றார். ஸ்ரீ கேவல் சிங்குக்குப் பிரஞ்சு போலீசார் ராணுவ அணிவகுப்பு மரியாதை ஒன்று நடத்தினர். பின் சர்க்கார் மாளிகைக்குள் ஒப்பந்தம் கையெழுத்திடப்படும் ஹாலுக்கு அவர் அழைத்துச் செல்லப்பட்டார்.

சுமார் 240 வருஷங்களாகப் பிரஞ்சிந்தியாவின் தலைநகரமாக இருந்த புதுச்சேரியில் எத்தனையோ கவர்னர்கள் தங்கி இருந்து தர்பார் நடத்தி அரசு புரிந்த சர்க்கார் மாளிகை யல்லவா! அப்பேர்ப்பட்ட மாளிகையில் நவம்பர் முதல் தேதி காலையில் தங்கு தடையின்றி நடந்து சென்றேன். முக்கிய நிகழ்ச்சி நடக்கப் போகும் ஹாலுக்கு வந்து சேர்ந்தேன். அங்கே பிரஞ்சு சர்க்காருக்காக ஸ்ரீ பியரே லாண்டியும், இந்திய சர்க்காருக்காக ஸ்ரீ கேவல் சிங்கும் அதிகார மாற்ற ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டனர். இது நடந்து வருகையில் பல காமிராக்கள் 'கிளிக்' 'கிளிக்' என்று சப்தித்தன. சினிமா காமிராக்கள் 'சர சர' வென்று ஒலித்தன. படம் பிடிப்பதற்கு வேண்டிய வெளிச்சம் 'பளீர்' 'பளீர்' என்று மின்னிக் கொண்டிருந்தது. மாளிகைக்கு வெளியில் கூடியிருந்த மக்களின் வந்தேமாதர ஒலி வானதிரக் கேட்டது. பீரங்கிகள் இருபத்து ஒரு முறை சுதந்திர முழக்கம் செய்தன. அதே சமயத்தில் சர்க்கார் மாளிகையில் நமது தேசியக் கொடி ஏற்றப்பட்டது.

* * *

அதிகார மாற்ற வைபவம் முடிந்ததும் புதுச்சேரி நகரத்தைச் சுற்றிப் பார்க்கப் புறப்பட்டேன். ஆனால் கூட்டத்தில்

---

1. புதுச்சேரி சர்க்கார் மாளிகை வாசல் இரு புறத்திலும் மக்கள் கூடி இருக்கின்றனர். 2. பொதுக் கூட்டத்தில் ஒரு தோற்றம். 3. புதுச்சேரி கலங்கரை விளக்கத்தின் உச்சியில் தேசியக் கொடி பறக்கிறது. 4. பொதுக் கூட்டத்தில் ஸ்ரீ ஆர். கே. நேரு பேசுகிறார். 5. கடற்கரையில் கூடியிருந்த கூட்டத்தில் ஒரு பகுதி.

சென்ற மாதம் முடிய அன்னிய ஆதிக்கத்திற்கு உட்பட்டிருந்த பாண்டிச்சேரி முதலிய தமிழ் நாட்டுப் பகுதிகள் நமது பாரத தேசத்துடன் ஐக்கியமான

**1954 நவம்பர் 1ல அன்று**

பாண்டிச்சேரியிலுள்ள எல்லா அரசாங்கக் கட்டிடங்களுக்கும்

## மின்சார தீப அலங்காரங்களை

செய்யும் தனிப் பெருமை எங்களுக்குக் கிடைத்தது

★

இந்தியப் பிரஜைகள் ஆகிவிட்ட அந்தப் பகுதி மக்களுக்கு எங்கள்

**மனமார்ந்த வாழ்த்துக்களை**

அளிக்கிறோம்



## ஜெனரல் டிரேடர்ஸ்

எலக்ட்ரிகல் டீலர்கள் மற்றும் கண்டிராக்டர்கள்

260-B. சைனு பஜார்

தபால் பெட்டி 1285

சென்னை-1

போன்: 55781 - தந்தி: SWITCHGEAR

★

பிராஞ்ச்:

12/135, கான்வென்ட் தெரு, விஜயவாடா-1

## கேஷ்ரஞ்சன்

தாங்கள் கூந்தலின் நன்மையை விரும்புவோர்

விரும்புவார்கள்

கவிராஜ்

கல்கத்தா-1

## ஸ்பாட் லைட்

பாட்டரி

**Spotlite**

A QUALITY BATTERY

SRIDHAR & CO. MADRAS. 2




அஜீரணம் வாழ்வையே துன்பமயமாக்கி விடுகிறது; வயதுக்கு மீஞ்சிய வயோதிகத் தோற்றமும் உண்டாக்கிவிடுகிறது. மக்ளீன் பிராண்ட் ஸ்டமக் பௌடர் துரிதமான நிவாரணம் தருகிறது. ஏனெனில் அது ஒரு அபூர்வச் சிறப்புடைய பௌடர்; சாஸ்திரீகமான தயாரிப்புத் திட்டப்படி பக்குவமான பொருட்சேர்க்கையுள்ள இந்தப் பௌடர் மூன்று வேலைகள் செய்கிறது—மிருதுவான இரைப்பைக்குச் சமனமூட்டுகிறது; வயிற்றுப் புளிப்பை மாற்றுகிறது; வலியையும் நிறுத்துகிறது.

மக்ளீன் பிராண்ட் ஸ்டமக் பௌடர் என்று பெயரைச் சொல்லிக் கேளுங்கள். ஒவ்வொரு பாக்கெட்டிலும் Alex C. Maclean "அலெக்ஸ் ஸி. மக்ளீன்" என்ற உண்மைக் கையெழுத்தும் தத்ரூபமாக அச்சிடப் பட்டுள்ளதா என்று நிச்சயப் படுத்திக் கொள்ளுங்கள்.




# மக்ளீன்

## பிராண்ட் ஸ்டமக் பவுடர்

எப்பொழுதும் கையில் ஒரு பாட்டில் வைத்திருங்கள்.

### ஒரு டோஸ்

அஜீரணத்தாலேற்படும் வயிற்று வலி, உடற்பருமன், இருதய எரிச்சல், வயிற்று மந்தம், வாந்தி இவற்றை சடுதியில் குணப்படுத்தும்.

MSY. 9-TAM

புகுந்து உடனே போக முடியவில்லை. கொஞ்சம் கூட்டம் கலைந்து போகட்டும் என்று அரை மணி நேரம் காத்துக் கொண்டிருந்தேன். கூட்டம் கலைவதாக இல்லை. துணிச்சலுடன் கூட்டத்தில் புகுந்து வெளியேறத் தொடங்கினேன். எப்படியும் புதுவை நகரத்தைச் சுற்றிப் பார்த்துவிட வேண்டியது என்ற ஆவல் என்னைப் பிடித்து உந்த கூட்டத்தின் இடிபாடுகளைச் சிறிதும் லட்சியம் செய்யாமல் கூட்டத்தைக் கடந்து வந்தேன். இப்படி ஆவல் ஏற்பட்டதற்குப் புதுவை மா நகரின்மீது எனக்கிருந்த எல்லை கடந்த அன்பும் ஆழ்ந்த அநுதாபமும் அளவில்லாத பக்தியும்தான் காரணம்.

புதுச்சேரிக்குத் தமிழ் நாடும், தமிழர்களும் மிகவும் கடமைப் பட்டிருக்கிறார்கள். பல துறைகளில் தமிழ் மக்களுக்குப் புதுச்சேரி நகரம் மிக அருமையான உதவிகள் செய்திருக்கிறது.

எத்தனையோ கடன்காரர்களுக்கும், இன்ஸால்வென்டு கொடுத்தவர்களுக்கும் புதுச்சேரி அடைக்கலம் கொடுத்ததைப் பற்றிச் சொல்லவில்லை.

நம் காலத்தில் தமிழ் நாட்டில் ஏற்பட்டிருக்கும் சமயப்பற்று, தேசியஉணர்ச்சி, இலக்கிய மறுமலர்ச்சி ஆகியவற்றுக் கெல்லாம் புதுச்சேரி மிகப் பெரிய உதவி புரிந்திருக்கிறது.

அரசியல்வாதியான ஸ்ரீ அரவிந்தர் புதுச்சேரிக்கு வந்ததும் சமயத் தொண்டில் ஈடுபட ஆரம்பித்தார். ஸ்ரீ அரவிந்தரின் சமய சம்பந்தமான பொன் மொழிகள் நம் நாட்டில் சமய உணர்ச்சிக் குப் [redacted]



அபிராமபுரம் மாதர் சங்கத்தின் ஆதரவில் குமாரி மாலதி—குமாரி வனமாலா இவர்களின் நாட்டியக் கச்சேரி மியூஸியம் தியேட்டரில் நடைபெற்றது. ஸ்ரீமதி ராஜலக்ஷ்மி சந்தானம் இனிய குரலில் பதங்கள் பாடினார். குமாரிகள் இருவரும் சிலசமயம் தனித்தனியாகவும் சிலசமயம் சேர்ந்தாற் போலவும் நடனம் ஆடிச் சபையோரை மகிழ்வித்தார்கள். ★★★

தேன். அந்த வீட்டின் உச்சியில் தாயின் மணிக் கொடி கம்பீரமாகப் பறந்து கொண்டிருந்தது.

சுயநல மென்னும் நினைவே இல்லாமல், பட்டம் பதவி மோகம் இல்லாமல் பாரதத் தாயின் விலங்கை முறித்தெறிய அரும்பாடுபட்ட மகா கவிக்குக் கை கூப்பி வணக்கம் செலுத்தினேன்.

[redacted]

தலை இயக்கத் தொண்டர் ஒருவர் உற்சாகமாகச் சொல்லிவிட்டு வெற்றி நடை போட்டார்.

* * *

இரண்டு மணி நேரம் கழித்து மீண்டும் கடற் கரைக்கு அருகில் உள்ள கங்கக் கட்டிடத்துக்குச் சென்றோம். ஒன்பது மணிக்கு மூன்நூறு அடி உயரம் வானளாவ உயர்ந்து நிற்கும் பிரதான கொடிக் கம்பத்தில் நடைபெற இருந்த கொடி யேற்று விழாவைப் பார்ப்பதற்காகத்தான். இந்த விழாவுக்குப் பத்திரிகைக்காரர்களும் விசேஷ அழைப்பாளர்களும் மட்டும்தான் உள்ளே வர அனுமதிக்கப்பட்டிருந்தார்கள்.

இந்தச் சமயத்தில் எதிரில் இருந்த சமுத்திரம் திடீரென்று பொங்கி வருவது போல் சத்தம் கேட்டது. தொடர்ந்து ஜெய கோஷமும் வாழ்த் தொலிகளும் கேட்டன. சத்தம் கேட்ட திசையைத் திரும்பி நோக்கினேன். பிரஞ்சிந்திய சுதந்திரத்துக்குப் பாடுபட்ட தலைவர்கள் ஒருவர் பின் ஒருவராக வந்து கொண்டிருந்தனர். ஸ்ரீ இ. ஜீ. பிள்ளை (குபேர்), ஸ்ரீ முத்துக் குமரப்ப ரெட்டியார், ஸ்ரீ முத்துப் பிள்ளை முதலியவர்கள் மலர்ந்த முகத்துடனும் கூப்பிய கரத்துடனும் கம்பீரமாக வந்து கொண்டிருந்தனர். இந்தத் தலைவர்கள் மீது சுமார் ஏழு மாதங்களுக்கு முன் பிரஞ்சிந்திய சர்க்கார் கைது செய்ய உத்தரவு பிறப்பித்திருந்தனர். அது காரணமாக அவர்கள் புதுச்சேரியை விட்டு வெளியேறி யிருந்தனர். இன்று அந்தக் கைது உத்தரவுகள் எல்லாம் ரத்து செய்யப்பட்டு விடுதலை அடைந்த புதுச்சேரிக்குள் வெற்றி வீரர்கள் போல் வந்தனர். இத்தனை நாளாகத் தேடிக் கொண்டிருந்த சுதந்திரத்தை அவசரமாகக் கைப்பற்றுவதற்காக அவர்கள் விரைந்து வருவதாகத் தோன்றியது.

அவர்களுக்குப் பின்னால் கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் ஸ்ரீ சுப்பையா ஆயிரக்கணக்கான மக்கள் புடைசூழ ஊர்வலமாக வந்தார்.

குறிப்பிட்ட நேரத்தில் இந்திய சர்க்கார் வெளி நாட்டிலாகா காரியதரிசி ஸ்ரீ ஆர். கே. நேருவும், விடுதலையடைந்த பிரஞ்சிந்தியாவின் பிரதம கமிஷனர் ஸ்ரீ கேவல் சிங்கும் வந்து சேர்ந்தனர். விடுதலை இயக்கத் தலைவர்களைப் பார்த்து அளவளாவினர். கொடி மரத்தின் உயர்ந்த மேடைமீது ஏறினர். தேசியக் கொடியை உயர்த்திப் பறக்க விட்டனர். உடனே இருபத்தொரு குண்டுகள் முழங்கி மரியாதை செய்தன. ராணுவ பாண்டு வாத்தியம் கொடி வணக்கக் கீதம் இசைத்தது. அரவிந்த ஆசிரமத்தைச் சேர்ந்த ஆண், பெண், குழந்தை முதலியவர்கள் சேர்ந்து நின்று தேசிய கீதம் பாடினர். புதுவை மக்கள் முதன் முதலாக இந்திய தேசிய கீதத்தைப் பயமின்றி உற்சாகத்தோடு கேட்டார்கள். விடுதலை இயக்கத்துக்குப் பாடுபட்ட தலைவர்கள் ஆனந்த வெறியில் அருகில் இருந்தவர்களை அப்படியே மார்புறத் தழுவிக் கொண்டனர். கண்களில் ஆனந்த பாஷ்பம் பொங்க "வாழ்க, பாரதம்!" என்று வாழ்த்தினர்.

கொடியேற்று விழா முடிந்ததும் ஸ்ரீ ஆர். கே. நேருவும், ஸ்ரீ கேவல் சிங்கும், பிரஞ்சிந்திய விடுதலை இயக்கத் தலைவர்களும் பக்கத்தில் உள்ள பொதுப் பூங்காவில் ஏற்பாடு செய்திருந்த பொதுக் கூட்டத்தில் கலந்துகொள்ளச் சென்றனர். அவர்களைத் தொடர்ந்து ஜனங்களும் சென்றார்கள்.

பொதுக் கூட்டத்துக்கு முதலில் ஜனங்கள் நூற்றுக்கணக்கில் வந்தார்கள்; அப்புறம் ஆயிரக் கணக்கில் வந்தார்கள்; பிறகு பதினாயிரக் கணக்கில் வந்தார்கள். கடைசியில் சுமார் ஒரு லட்சம் ஜனங்களுக்கு மேல் பொதுக் கூட்டத்தில் குவிந்து விட்டார்கள். 'சுளீர்' என்று எரித்த வெய்யிலையும் லட்சியம் செய்யாமல் கூட்டம் நடந்த மூன்று மணி நேரமும் அமைதியாக இருந்தார்கள். தலைவர்கள் பேசும்போது அடிக்கடி கைகொட்டி உற்சாக ஆரவாரம் செய்தார்கள்.

ஸ்ரீ ஆர். கே. நேரு அவர்கள் சென்னை ராஜ்ய எட்டாவது ராணுவத்தினரின் அணிவகுப்பு மரியாதையை ஏற்றுக்கொண்ட பின் அங்கிருந்த கொடிக் கம்பத்தில் தேசியக் கொடியை ஏற்றிப் பறக்க விட்டார். சென்னை போலீஸ் பாண்டு



தியாகராய நகரில் உள்ள ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் ஆதரவில் நடக்கும் ஸ்ரீ சாரதா வித்யாலயத்தின் ஒரு பகுதி ஸ்ரீ சாரதா தேவி இல்லம். இதன் உதவிக்காக ஆகஸ்டு மாதம் 29, 30 தேதிகளில் ரஸிக ரஞ்சனி சபையில் ஒரு சங்கீதக் கச்சேரியும் ஒரு நாடகமும் நடந்தன. இவற்றைத் தொடர்ந்து அக்டோபர் 23உ மியூஸியம் தியேட்டரில் ஒரு உதவி நடனக் கச்சேரி நடந்தது. டாக்டர்கள் ராஜகோபால் சாந்த சுந்தரியின் புதல்வி குமாரி சித்ரலேகா பார்ப்பவர்களின் கண்களுக்கும் மனத்துக்கும் ரசிக்கும்படியான ஒரு நடன விருந்தை அளித்தார்.

சங்கீதக் கலையிலும் நடனக் கலையிலும் தலைசிறந்த ஸ்ரீமதி பாலசரஸ்வதி அவர்களும் அவரது அன்னை ஸ்ரீ ஜயம்மாள் அவர்களும் அவர்களது இனிமையான சாரீரத்துடன் பாடிய பதங்கள் வந்திருந்த கலா ரஸிகர்களின் மனதைப் பரவசப் படுத்தின. சித்ரலேகாவின் குரு ஸ்ரீமான் காஞ்சீபுரம் எல்லப்பா கோஷ்டியாரின் பக்க வாத்தியங்களும் பாடல்களும் உருக்கமாயும் உணர்ச்சி நிறைந்தனவாயும் அமைந்திருந்தன. தலைமை வகித்த ஹைகோர்ட்டு நீதிபதி ஸ்ரீ ஏ. எஸ். பி. அய்யர் அவர்கள் சித்ரலேகாவின் நடனத்தைப் பற்றிப் பாராட்டிப் பேசினார். ● ● ●

# இந்த நவீன டூத்பேஸ்டினால் குழந்தைகளின் பற்களை பாதுகாருங்கள்

உங்கள் குழந்தைகளின் பற்கள் அரிய மதிப்புடையவை; அவற்றிற்கு விசேஷ கவனம் செலுத்த விரும்புவீர்கள். ஆகையால்தான் நீங்கள் ஆக்டிவ் க்ளோரோபில் சேர்ந்த 'கோலினஸ்' உபயோகிப்பது அவசியமாகும். செழிப்பான நுரையுள்ள இந்த நவீன டூத்பேஸ்டு பல்சிதைவிற்குக்காரணமான கிருமிகளை ஒழித்து, ஈறுகளை உறுதியாகவும் ஆரோக்கியமாகவும் வைத்திருக்க உதவுகிறது.

குழந்தைகள் இதன் இனிய ருசியையும், புதுமைப் பச்சை நிறத்தையும் விரும்புவர். தவிர, 'கோலினஸ்' அதிக சிக்கனமுடையதென்றும் உங்களுக்குத் தெரிய வரும். ஈரமில்லாத பிரஷில் அரையங்குல அளவே போதுமானது.

இன்றே ஆக்டிவ் க்ளோரோபில் சேர்ந்த பச்சை 'கோலினஸ்' டூத்பேஸ்டை உபயோகிக்கத் தொடங்கி உங்கள் பணத்திற்கு பரிபூரண பயன் பெறுங்கள்!

**உங்கள் குழந்தைகளுக்கு இலவசம்**

''கைமுகனும் அவனுடைய பிராணி நண்பர்களும்'' என்ற ரஸமான சித்திரக் கதைக்கு இப்பொழுதே எழுதுங்கள்!

கைமுகன், இலாகா [illegible]
த. பெ. 541,
பம்பாய்








GK. 218 (11)

வாத்தியக் கோஷ்டியினர் தேசீய கீதத்தை இசைத்தனர். மக்கள் இடி முழக்கம் போல மகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர். இப்பொழுதும் இருபத்தொரு குண்டு மரியாதை நடந்தது.

பிறகு ஸ்ரீ ஆர். கே. நேரு பிரஞ்சிந்திய விடுதலைக்கு வாழ்த்துக் கூறி அனுப்பி யிருந்த ஜனாதிபதி ராஜேந்திர பிரஸாத் அவர்களின் வாழ்த்துச் செய்தியையும், பாரத நாட்டின் பிரதம மந்திரி ஜவாஹர்லால் நேரு சீன நாட்டிலிருந்து அனுப்பி யிருந்த வாழ்த்துச் செய்தியையும் படித்தார். பிரஞ்சிந்திய விடுதலை சம்பந்தமான பேச்சு வார்த்தைகளில் தாம் நேர்முகமாகக் கலந்து கொண்டு தொண்டாற்றிய விவரங்களைப் பற்றிக் கூறினார். பிரஞ்சிந்தியப் பகுதிகளில் இந்திய சர்க்கார் எதிர்காலப் பொருளாதார அபிவிருத்திக்குச் செய்யப் போகும் சீர்திருத்தத் திட்டங்களைச் சாங்கோபாங்கமாக விளக்கினார்.

"இங்கு நான் சென்ற ஒரு வருஷமாக இருக்கிறேன். இங்குள்ள மக்களுக்குச் சேவை செய்வதற்காகவே பிரதம கமிஷனராக நியமிக்கப்பட்டிருப்பதை நான் கௌரவமாகக் கருதுகிறேன்" என்று ஸ்ரீ கேவல்சிங் கூறி, ஸ்ரீ ஆர். கே. நேருவும் பிரஞ்சிந்தியத் தலைவர்களும் பிரஞ்சிந்திய விடுதலைக்குப் பாடுபட்டதைக் குறிப்பிட்டார். மக்களின் ஒத்துழைப்பைப் பாராட்டினார்.

பின்னர் ஸ்ரீ இ. ஜி. பிள்ளை, ஸ்ரீ வி. சுப்பையா, ஸ்ரீ எம். பெருமாள், ஸ்ரீ தேதம்பி ஆகியோர் உணர்ச்சி நிறைந்த சொற்பொழிவுகளாற்றினர்.

ஸ்ரீ இ. ஜி. பிள்ளை (குபேர்), "சுதந்திர ஆனந்தத் திருவிழா கொண்டாட வேண்டிய இந்தத் தருணத்தில் 'ஐயையோ!' என்று கூவி வயிற்றிலும் வாயிலும் அடித்துக்கொண்டு துக்கம் கொண்டாடும் சில புத்திசாலிகளும் நம்மிடையே இருக்கிறார்கள். இதற்குக் காரணம் மௌடீகமாகவும் இருக்கலாம், சுயநல அடிப்படை கொண்ட விஷம புத்தியாயும் இருக்கலாம். எது எப்படி இருந்தாலும் நாம் சுதந்திரக் கனியைப் பறித்து விட்டோம். அதன் சுவையை மக்கள் எல்லோரும் அனுபவிக்கும்படி பாடுபட வேண்டும்" என்று வேண்டிக் கொண்டார்.

விழா முடிவில் புதுவை மாதர் கழகத்தைச் சேர்ந்த பெண்மணிகள் "வாழிய செந்தமிழ்!" கீதம் பாடினர். அவர்கள் சிவப்பு, வெள்ளை, பச்சை நிறப் புடவைகளை அணிந்துகொண்டு வரிசையாக நின்று இனிமையாகப் பாடிய காட்சி கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது. தாயின் மணிக்கொடியே பெண் உருவம் பெற்று வந்து வாழ்த்துக் கூறியது போலிருந்தது.

விழா முடிந்ததும் தலைவர்கள் தங்கள் ஜாகைகளுக்குச் சென்றனர். அவர்களைத் தொடர்ந்து ஜனங்களும் கலைந்து சென்றார்கள். கூட்டத்தோடு கூட்டமாகச் சென்றேன். இல்லை, கூட்டம் என்னைத் தள்ளிக் கொண்டு சென்றது!

ஒரு பெரிய மாளிகைக்குள் சிலர் வேகமாகப் புகுந்து சென்றனர். நானும் சென்றேன். மாளிகை வாசலில் தலையில் கதர் குல்லாவை அணிந்து கொண்டு ஸ்ரீ மூத்துக் குமரப்ப ரெட்டியார் கம்பீரமாக நின்று கொண்டிருந்தார். கூப்பிய கரங்களுடனும் மலர்ந்த முகத்துடனும் வந்தவர்களை யெல்லாம் வரவேற்றுக் கொண்டு இருந்தார்.

வந்தவர்களுக்கெல்லாம் அவர் வீட்டில் அறுசுவையுடன் கூடிய விருந்து அளிக்கப்பட்டது. விருந்தினர்களை வரவேற்று உபசரிப்பதில் புதுவைக்கு ஈடு புதுவைதான் என்று சொல்லும்படியாக ஆயிரக்கணக்கான விருந்தினர்களுக்கு அங்கு சாப்பாடு நடந்தது. வயிறு நிறையச் சாப்பிட்டுப் பிரஞ்சு இந்தியா விடுதலை அடைந்த புனித தினத்தை எல்லாருடனும் கொண்டாடினேன்.

** ** **

**மா**லையில் தொடர்ந்து புதுச்சேரி நகரத்தின் பல இடங்களில் பொதுக் கூட்டங்களும், தெருக் கூத்துகளும், சங்கீதக் கச்சேரிகளும், நாட்டிய நடனங்களும் நடந்ததாகக் கேள்விப்பட்டேன். இரவு புதுவை சர்க்கார் மாளிகைகளும் பெரிய தனவந்தர்களின் கட்டிடங்களும் தீபாலங்காரங்களுடன் ஜகஜ் ஜோதியாக ஜொலித்தனவாம். இந்தக் காட்சியைச் சுதந்திரத்துக்கு முதல் நாளே பார்த்து அநுபவிக்க முடிந்தது. இரவு நெடு நேரம் வரையில் வாண வேடிக்கைகள் கோலாகலமாக நடந்தனவாம். மக்கள் கூட்டம் கூட்டமாகக் கூடி நின்று பார்த்துக் குதூகலப்பட்டார்களாம். இதை யெல்லாம் இருந்து பார்த்து மகிழ்ந்தவர்கள் கொடுத்து வைத்தவர்கள்தான்.

உலக சரித்திரத்தில் என்றும்—காணாத அதிசய முறையில் இந்தியாவிலிருந்து அன்னிய ஆட்சிகள் மறைந்து கொண்டிருக்கின்றன. விரைவில் போர்ச்சுகல் ஆட்சியும் இந்தியாவிலிருந்து மறைந்து விடும். அந்தப் பிரதேசங்களையும் ஏக இந்திய அரசாங்கத்தின் கீழ் கொண்டு வருவது அசாத்தியமான காரியம் அல்ல; நடக்க முடியாத காரியமும் அல்ல. விரைவில் நிறைவேறி விடும்.

நமது சொந்த சுயநலன்களை மறந்து நாட்டின் பொதுநலமே பெரிதென மதித்து உழைப்போம். பாடுபட்டுப் பெற்ற சுதந்திரம் நிரந்தரமாவதற்கு அது ஒன்றே சிறந்த மார்க்கம்.

வாழ்க சுதந்திரம்! வாழ்க நிரந்தரம்!

அட்டைப்பட விளக்கம்

## வந்தது தோணியே!

அன்னப் பேடை சிறையில தீர்க்கரை
துன்னிற் றென்னவும் வந்தது தோணியே. —கம்பர்.

மாலை நேரம். சூரியன் அஸ்தமிக்கும் சமயம். புள்ளினங்கள் உல்லாச கீதம் பாடித் தங்கள் கூடுகளை நோக்கித் திரும்பி வருகின்றன! ஏரியிலுள்ள அன்னப் பறவைகள் காதல் மொழிகள் பரிமாறிக் கொள்ளுகின்றன. சிறகிலாத அன்னப் பறவை போன்ற ஓடத்திலுள்ள காதலர்களும் மனோஹரமான மாலை வேளையிலே புது உற்சாகம் கொள்ளுகின்றனர். அவர்கள் உள்ளத்தில் காதல் பெருகுகிறது. எத்தனை அன்பு மொழிகள் ஒருவருக்கொருவர் பேசிக் கொள்ளுகிறார்களோ! தன் காதலனிடம் என்ன மொழி கேட்டு அப்படி நாணப்படுகிறாள்! ஆம்; இவர்களுடைய காதல் பேச்சைக் கேட்கத்தானோ என்னவோ அந்த ஏரி கூட நிச்சலனமாக இருக்கிறது!

ஓடம் மிதக்குது தண்ணியிலே — அவர்
உள்ளம் மிதக்குது இன்பத்திலே!

# இந்த பிரசித்திபெற்ற க்ரீம்கள் உங்கள் சருமத்திற்கு மிகப் பொருத்தமானவை!

**உங்களைச் சுற்றிலுமுள்ள சீதோஷ்ண நிலைக்கும் உகந்தவை**

இவ்விரண்டு அற்புதமான பாண்ட்ஸ் அழகு சாதனங்களை உபயோகியுங்கள்! அவை உங்கள் சருமத்திற்கு ஏற்றவை; இரண்டும் உங்கள் வதனத்தை சீதோஷ்ண நிலையின் கொடுமையினின்று பாதுகாத்து, சருமத்தை நிர்மலமாக, மென்மையாக வைத்திருக்கும்.




வரண்ட சீதோஷ்ண நிலை உங்கள் முகப்பொலிவைப் பாழ்படுத்தினால் — பாண்ட்ஸ் கோல்ட் க்ரீம் உங்களுக்குத் தேவை.. அதிலுள்ள செழிப்பான எண்ணெய்கள் சருமத்திற்கு சமன ஊட்டி, கடுமையான வெயில் மற்றும் வரண்ட காற்றினால் அது வாடி வதங்காமல் காப்பாற்றுகின்றன.




உங்கள் சருமம் இயற்கையாகவே எண்ணெய்ப் பசையுடையதானால், அல்லது உஷ்ணமும் கசகசப்பும் மிகுந்த சூழ்நிலையின் பிசுக்கடையும் பட்சத்தில்—பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் உபயோகிக்கவும். இக்குளுமையான மெல்லிய க்ரீம் சருமத் துவாரங்களில் படியும் பிசுக்கையும் அழிந்த ஜீவாணுக்களையும் அகற்றி, உங்கள் முகத்திற்கு சௌமிய பாதுகாப்பளிக்கிறது.

பாண்ட்ஸ் க்ரீம்களை தவறாமல் உபயோகியுங்கள். சொற்ப நாட்களில் உங்கள் சருமம் புதுமையும் அழகும் செறிந்து விளங்குவதைக் காண்பீர்கள்— உணரவும் செய்வீர்கள்!

**உலகில் எழிலரசிகள் உபயோகிக்கும் க்ரீம்கள்**




## பாண்ட்ஸ்

கோல்ட் க்ரீம்
வானிஷிங் க்ரீம்

P. 9947

---

# வாழ்வில் இன்பம்

கே. ஆர். கௌசல்யா

வழக்கமாகப் புஷ்பம் வாங்கும் பூக்காரக் கிழவியிடம் இரண்டு முழம் கதம்பமும், குழந்தைகளுக்குச் சில தின்பண்டங்களும் வாங்கிக்கொண்டு வீட்டை நோக்கி நடந்தான் மகாதேவன். தெரு முனை வந்து விட்டது. அவன் வரவை எதிர்பார்த்து வாசற்படியில் நின்று, அவன் தலை கண்ணுக்குப் புலப்பட்டதும் கைதட்டல், குதித்துக் குதூகலித்தல் முதலிய ஆனந்த ஆர்ப்பரிப்புடன் அவனை வரவேற்கும் குழந்தை பாலசந்தர் அன்றும் வழக்கம்போல் ஆவலே வடிவாய் நின்று கொண்டிருந்தான்.

குழந்தையை முத்தமிட்டு வாரியணைத்து எடுத்துக் கொண்டு தன்னறைக்குச் சென்றான் மகாதேவன். சமையலறையிலிருந்து சிணுங்கல் சப்தம் கேட்டது. அவன் பெண் கிரிஜாவின் குரல்தான் அது. சாதம்சமைத்திருந்த தவலையை அடுப்பிலிருந்து எடுத்துக் கஞ்சி வடித்துக் கொண்டிருந்த கமலா உரத்த குரலில் இரைந்து கொண்டிருந்தாள். மகாதேவன் சற்று மறைவாய் நின்று எல்லாவற்றையும் கவனிக்க ஆரம்பித்தான்.

“உங்க டீச்சர் இது கூடச் சொல்லித் தராமல் வகுப்பிலே என்னடீ செய்யறா! ஈ ஓட்டிக் கொண்டா இருக்கிறாள்! பள்ளிக்கூடத்திலே சம்பளம் கட்டறது எதுக்குன்னு கேட்கிறேன்! இப்படி வந்து சொல்லிக் கொடு, கொடுன்னு என் கழுத்தை யறுக்கவா!” என்றாள் கமலா.

“இல்லே சித்தி! டீச்சர் நன்னாத்தான் சொல்லிக் கொடுத்தாள். எனக்குத்தான் புரியவில்லே.”

“மக்கு! மக்கு! உங்க அப்பா வந்தப்புறம் அவரிடமே கேட்டுக்கொள். எனக்குக் கொள்ளை வேலை கிடக்கு! கதையெல்லாம் மூடிச்சுட்டுப் பரீக்ஷை பேப்பர், ஒரு அடுக்கு நோட்டுப் புத்தகம் எல்லாம் திருத்தணும்!...”

“அடுத்தகத்து மாமி சொன்னது சரியாகத் தான் இருக்கு!...” சட்டென்று கையால் வாயைப் பொத்திக் கொண்டு நிறுத்தி விட்டாள் கிரிஜா.

சாதம் வடித்துத் தவலையை நிமிர்த்தி ‘நக்’ கென்று அம்மி மீது வைத்துவிட்டு, “என்னடீ சொன்னா அடுத்தகத்து மாமி! என்ன சொன்னா! வாய்த் துடுக்குக்காரி! அதுக்குள்ளே ஏன் நிறுத்தி விட்டாய்! சொல்லேண்டீ! இடித்த புளிமாதிரி நின்று ஏன் மௌனம் சாதிக்கறே!” கிரிஜாவின் தாடையைப் பிடித்து இழுத்து ஆட்டியவாறே மிரட்டினாள் கமலா.

“...ஒண்ணுமில்லே சித்தி...வந்து...”

“...சொல்லப் போறயா இல்லையா இப்போ! அப்புறம் கரண்டியைக் காய்ச்சி!”

“இல்லே...வந்து ......‘தன்னைப் பெற்ற தாய் கிண்ணி ஏந்திப் பிச்சை எடுக்கிறாளாம். பின்னே கும்பகோணத்திலே கோதானம் பண்ணுகிறானாம்’ என்கிற கதையாக, ‘உங்க சித்தி பள்ளிக்கூடத்திலே நூற்றுக் கணக்கான பசங்களுக்குப் பாடம் சொல்லித் தருகிறாள். தாயில்லாப் பெண்ணான உன்னை இப்படிஒண்ணும் சொல்லித்தராம கொஞ்சமும் கவனிக்காமல் விட்டிருக்கா!’ என்றாள்.”

“ஓகோ! நீ அவர்களிடம் போய், ‘எங்க சித்தி எனக்கு ஒண்ணும் செய்யறதில்லே, ஒண்ணும் சொல்லித்தரதில்லே என்று முறையிட்டயாக்கும்! நீ என்னைப் படுத்தற பாடு அவாளுக்கு என்ன தெரியும்! வயிற்றுக்குக் கொட்டிக்கவும் அங்கேயே அவாளிடம் போயிடறதுதானே! அதுக்கு மட்டும் ஏன் வரே இங்கே!”

கிரிஜாவின் விசும்பல் பரிதாபமாக ஒலிக்க ஆரம்பித்தது. “இதுக்குத்தான் நான் அப்பவே சொல்லமாட்டேன்னு சொன்னேன்...உம்...ம்...” அவள் அழுகையைக் கொஞ்சமும் லட்சியம் செய்யாமல், கிணற்றடியில் சென்று தண்ணீர் இழுப்பதற்காகத் தோண்டியுடன் சமையலறையிலிருந்து வெளிக் கிளம்பினாள் கமலா. அப்போது தான் ஆபீஸிலிருந்து வருகிறமாதிரி சட்டென்று தன் அறைக்குள் நுழைந்தான் மகாதேவன்.

பூட்ஸ் காலடியோசை கேட்டு, சமையலறையிலிருந்து ஓடி வந்த கிரிஜா, “அப்பா!” என்று அவன் கால்களைக் கட்டிக் கொண்டாள். அவள் முதுகை அன்புடன் தடவிக் கொடுத்தான் மகாதேவன். அழகிய கன்னத்தில் விரல் பதிவுகளுடன் பரிதாபமாக அவன் முகத்தை ஏறிட்டு நோக்கினாள் கிரிஜா. அசைவற்று நின்றிருந்த மகாதேவனின் கண்களில் நீர் முட்டி வழிந்தது. குடத்தில் ஜலம் நிரப்பிக்கொண்டு வந்த கமலா வாயிற்புற அறையை எட்டிப் பார்த்து விட்டு விடுவிடு வென்று உள்ளே வந்தாள். அவளை நிமிர்ந்து பார்க்கவும் பிடிக்காதவன் போன்று மௌனமாகக் கதம்பத்தை அவளிடம் கொடுத்தான். கமலா திகைப்புடன் கதம்பத்தைக் கையில் வாங்கிக் கொண்டாள்.

கமலாவை மணந்தவுடன் மகாதேவன் அவளிடம் முதல் முதல் கூறிய வார்த்தைகள் இவைதான்: “நான் உன்னைக் கல்யாணம் செய்து கொண்டது உன்னுடைய அழகில் ஈடுபட்டோ, அல்லது எனது சுகத்துக்காக மட்டும் என்று எண்ணி விடாதே! இளமையிலேயே தம்மை அன்புடன் அணைக்கும் தாயின் அன்புக் கரத்தை இழந்து வெம்பி வாடும் இளம் பிஞ்சுகளான, என் குழந்தைகளின், என் இரு கண்மணிகளின் நன்மைக்காகவும்தான் முக்கியமாக உன் கரம் பற்றினேன். அது மட்டுமல்ல, கமலாவிடம் அவன் எச்சரிக்கை யொன்றையும் விடுத்திருந்தான். “என் வாழ்வின் ஜீவன்களில் ஒன்றான இளம் குழந்தை பாலசந்தர், மழலை கூறி மருண்டு விழிக்கும் கள்ளம் கபடமற்ற குழந்தை. அவனை வளர்த்துச் சமாளிப்பதில் உனக்குச் சிரமம் ஒன்று மிருக்காது. ஆனால் என் மூத்த பெண் கிரிஜாதான் உன் மாற்றாந்தாய் மனத்தை எடை போட்டு அறியத் தக்க அளவுக் கருவியாக அமைவாள். அவளிடம் நீ நடந்து கொள்ளுவதில்தான் சிறிது சிரமமும் இருக்கிறது. அவளுக்கு வயசு மீறிய புத்திசாலித்தனமும், அதே சமயம் கொஞ்சம் பிடிவாத குணமும், வாய்த்துடுக்குத் தனமும் உண்டு. அவள் உள்ளத்தை உள்ளன்புடன் கூடிய தாய்ப் பாசத்தைக் காட்டி எளிதில் கவர்ந்து, திருத்திவிடலாம்” என்றான் மகாதேவன்.

மகாதேவனின் கால்களில் பணிந்து அமர்ந்து கண்ணில் நீர் மல்க, அவன் கூறிய யாவற்றையும் ஒப்புக் கொண்டாள் கமலா. குழந்தைகளிருவரையும் தனது இரு கரங்களாலும் அணைத்து அன்புடன் முத்தமிட்டுத் தன் சம்மதத்துக்கு உத்தரவாதமும் அளித்தாள்.

நாட்கள் பறந்தன. கமலா தன் கணவனிடம் கொடுத்த வாக்குத்தத்தத்தை மறக்காமல் தன்

காலைச் சுற்றிக் கொள்ளும் கபடமற்ற குழந்தைகளைப் பரிவுடன் அணைத்து வளர்த்தாள்.

கமலா ஆறாவது படிவம் வரையில் படித்துத் தேறியவள். உபாத்தியாயினிப் பயிற்சி முடிந்து ஒரு வருஷம் வேலையும் பார்த்தவள். சங்கீதத்திலும் தேர்ச்சி உண்டு. விவாகம் நிச்சயமாகி விடவே வேலையை விட்டு விலகி விட்டாள். நாள் தவறாது சிறுமி கிரிஜாவுக்கு வீட்டில் பாடமும் பாட்டும் சொல்லிக் கொடுத்தாள். அழகாக உடைகள் உடுத்தி, விதவிதமாகப் பின்னல் போட்டுப் பூ தைத்து அழகு படுத்திப் பார்த்தாள்.

அன்றைய தினசரியைப் புரட்டிய கமலாவின் கண்களில் தட்டுப் பட்டது, அந்த அருகிலிருந்த பெண்கள் பள்ளிக்கூட மொன்றில் ஒரு உபாத்தியாயினி தேவை என்ற விளம்பரம். கமலாவின் உள்ளத்தில் புதிய தொரு ஆசை வேர்விட ஆரம்பித்தது. அன்று மாலை தன் கணவனிடம் தன் ஆசையை வெளி யிட்டாள். "காலை மணி பத்து அடித்தால் வேலை யெல்லாம் முடிந்து வீடு 'ஜில்' லென்று ஆகி விடுகிறது. எனக்குப் பொழுதே போவதில்லை. குழந்தையைப் பார்த்துக் கொள்ள வேலைக்காரியை ஏற்பாடு பண்ணி விடலாம். மத்தியானம் இடைவேளையின் போதும் வந்து குழந்தையைப் பார்த்துக் கொள்ளுகிறேன். நான் இந்த உபாத்தியாயினி வேலையை ஏற்றுக் கொண்டால் என்ன!" என்றாள் கமலா குழைவுடன் கூடிய குரலில். மகாதேவன் புன்னகை புரிந்தான்.

"இப்போது நீ வேலைக்குப் போய்ப் பணம் [redacted]

கமலா அந்தப் பெண்கள் பள்ளிக்கூடத்துக்கு வேலைக்காக மனுப் போட்டுப் பதில் வந்து வேலையும் ஏற்றுக் கொண்டு விட்டாள். தானும் காசு சம்பாதிக்கும் பெருமையில் அவள் தனிப்பட்ட தொரு பூரிப்புடன் காணப்பட்டாள். பள்ளிக்கூடத்துக்காகப் படங்கள் வரைவது, நோட்டுப் புத்தகங்கள் திருத்துவது, கேள்வித் தாள்கள் தயார் செய்வது முதலிய வேலைகளின் அலுப்பில் அவளையு மறியாமல், கணவன் வீட்டிலிருந்தால் ஒன்று இல்லா விட்டால் ஒன்று என்ற அளவில் குழந்தைகளிடம் அசிரத்தை தோன்றி விட்டது.

அன்று காலை கிரிஜா ஆங்கில ப்பாடமொன்றில் கமலாவை ஏதோ சந்தேகம் கேட்டு, சொல்லித் தரும்படி கேட்டாள். கமலா பரபரவென்று ஒரே மூச்சில் சொல்லி விட்டுத் தன் வேலைகளைக் கவனிக்கச் சென்று விட்டாள். "எனக்குப் புரியவில்லை. இன்னொரு தரம் சொல்லிக் கொடு!" என்று சிணுங்கிய கிரிஜாவை விறைத்துப் பார்த்து விட்டு, "முடியாது. டீச்சரைக் கேளு, போ!" என்றாள். அவ்வளவையும் கவனித்துக் கொண்டிருந்த மகாதேவன், "ஏன் கமலா! பள்ளிக்கூடத்தில் ஒரு மாணவி இப்படிச் சந்தேகம் கேட்டாலும் இது மாதிரிதான், ஏதோ 'புரிந்தால் போகட்டும். இல்லா விட்டால் நமக்கென்ன' என்று கடனுக்குச் சொல்லிவிட்டு நிறுத்தி விடுவாயோ!" என்றான்.

"ஆமாம்! பள்ளிக்கூடத்தில் சம்பளம் எண்ணிக் கொடுக்கிறார்கள் [redacted]



அருமைத் தம்பியின் மீது பெருகி வழியும் அளவற்ற வாத்ஸல்யத்துடன். அது அன்புடன் கூடிய செல்லமான அடி என்பதை அறிந்து கொள்ளும் விவேகம் அந்தப் பச்சிளம் பாலகனுக்கு மட்டும் இருக்குமா என்ன! அடுத்த கணம் ரோசத்துடன் வீறிட்டலறிய குழந்தையை அன்புடன் வாங்கி அணைத்துக் கொண்டான் மகாதேவன். குழந்தையின் உடம்பு லேசாக அனலடித்துக் கொண்டிருந்ததைக் கண்டு அவன் மனசில் 'சொரேல்' என்றது.

அத்தனை நேரமும் அறை வாயிற்படியில் நின்று ஒன்று விடாமல் கவனித்துக் கொண்டிருந்தாள் கமலா. "ஜுரம் அடிக்கிறது குழந்தைக்கு! நீ கவனிக்கவில்லை. கிரிஜா கவனித்திருக்கிறாள் இப்போது!" என்றான் மகாதேவன்.

"ஆமாம்! அவளுக்கிருக்கும் அக்கறை எனக்கு இருக்குமா! அவள் குழந்தைதானென்றாலும் அவளுக்கு உடன் பிறந்த பாசம். நான் என்ன இருந்தாலும் சித்திதானே! அயல் வீட்டுப் பெண் தானே!" என்று படபடவென மொழிந்து விட்டுக் கிரிஜாவை நோக்கி வெட்டும் பார்வையொன்றை வீசி எறிந்துவிட்டு உள்ளே சென்று விட்டாள் கமலா.

சமையலறையில் போய்க் குலுங்கக் குலுங்க அழுதாள் கமலா. "உன்னை இப்போது நான் என்ன செய்து விட்டேன்? அடித்தேனா, திட்டினேனா? அப்பப்பா! என்ன ரோசம்! இத்தனை பொறுமை யில்லாத, இரண்டு குழந்தைகளின் மனப் போக்கைப் புரிந்து கொண்டு அவற்றை வைத்துச் சமாளிக்கத் தெரியாத நீ நூற்றுக் கணக்கில், பல தினுசு குணங்களையும், சுபாவமும் படைத்த மாணவிகளை எப்படிப் பொறுமையுடன் சமாளிக்கிறாய்! எனக்கு ஆச்சரியமாகத் தான் இருக்கிறது" என்றான் கடுமையுடன். கமலாவின் விம்மல் அதனால் பின்னும் அதிகமாகியதைக் கண்டு மிகவும் அருவருப் படைந்து சென்று விட்டான் மகாதேவன்.

அன்று இரவு. "குழந்தைக்கு ஜுரம் நெருப்பாய் அடிக்கிறது. டாக்டர் பில் பாக்கி யிருக்கிறது போலிருக்கிறது" என்றான் மகாதேவன்.

"என் அசிரத்தையால் வந்த விளைவுதானே இது! நான் டாக்டர் பில் கொடுக்கப் பணம் கொடுத்து விடுகிறேன். அவ்வளவுதானே! வெறுமனே மனசு உருகி மாய்ந்து போய்விட வேண்டாம்!" என்றாள் கமலா, அகங்காரமும் அகம்பாவமும் தொனிக்க.

"இதற்குத்தான் பெண்கள் வேலைக்குப் போகக் கூடாது என்பது! மாசம் பிறந்தால் கனை கனையாக எண்ணிக் குடும்பச் செலவுக்குப் பணம் எண்ணிக் கொடுக்கும் எந்த ஆண்மகனும், 'என் தயவில் தானே நீ பிழைக்கிறாய்' என்று மனைவியை ஏசிக் காட்ட மாட்டான். ஆனால் பெண்களுக்கு என்றுமே அற்ப சுபாவம்! அகம்பாவமும், தற்பெருமையும் குடிகொண்டு விளங்கும் உள்ளம் அவர்களுக்குத்தான்! இப்போது நீ வைத்தியர் செலவுக்குப் பணம் கொடுப்பதுதான் முக்கியம். அது இருந்து விட்டால் குழந்தையின் உடம்பைப் பற்றிக் கவலை எனக்குப் பறந்து விடும், அப்படித்தானே!"

கமலா மீண்டும் விசித்து விசித்து அழத் தொடங்கி விட்டாள், புடவைத் தலைப்பில் முகத்தைப் பதித்துக் கொண்டு.

"பெண்களிடத்தில் உள்ள மற்றொரு வெறுக்கத்தக்க குணம் இது. தோல்வியின் சாயலைக் காணும் போது கண்ணீரைக் கொட்டுவது!" என்றான் மகாதேவன் முகத்தைச் சுளித்தவாறே.

கமலா அன்று முதல் மௌனம் சாதிக்க ஆரம்பித்துவிட்டாள், அவனிடம். வீட்டுக் காரியங்கள்

நீங்கள் இதுவரை அருந்தாத

# மிகச்சிறந்த காப்பி...










சுத்தமான காப்பி வாங்குவது அனுகூலமானது. அது உங்களுக்கு வேண்டிய நறுமணத்தையும், தரத்தையும், அதிக அளவுகாப்பியையும் கொடுக்கிறது. ஆதலால்தான் ஆயிரக்கணக்கான ஜனங்கள் ஸ்டேன்ஸ் சிகப்பு லேபிள் சுத்தமான காப்பியையே வாங்குகிறார்கள். அது காற்றுப்புகாமல் பாக் செய்யப்பட்டு புத்தம்புதியதாக ½ பவுண்ட், 1 பவுண்ட், 3 பவுண்ட் 7 பவுண்ட் டின்களில் கிடைக்கிறது. இன்றே ஒரு டின் வாங்குங்கள்.

**தி யுனைடெட் காப்பி சப்ளை கம்பெனி லிட்.**
**கோயம்புத்தூர், தென் இந்தியா**




**Stanes**

**ஸ்டேன்ஸ் சிகப்பு லேபிள்**
**சுத்தமான காப்பி**
**எல்லோரும் வாங்கக்கூடிய**
**நல்ல காப்பி**

STC 4087

மாயூரத்திற்கு ஏஜண்டு:
மிஸ்டர் கே. எஸ். அருணசல அய்யர், மெர்ச்சண்ட், மாயூரம்

சிதம்பரம், கடலூர், புதுச்சேரிக்கு ஏஜண்டு:
மிஸ்டர் கே. பட்டாபிராம முதலியார், ஜெனரல் மெர்ச்சண்ட், சிதம்பரம்

ஏனோ தானோ என்று நிறைவேறின. கிரிஜாவை அவள் உள்ளம் விஷமென வெறுக்க ஆரம்பித்தது. அவளால்தான் தன் கணவனுக்குத் தன்னிடமிருந்த அன்னியோன்னிய பாவம் சிதறி விட்டது என்ற அபிப்பிராயம் வேரூன்றி விட்டது அவள் உள்ளத்தில். தான் உண்டு, தன் பள்ளிக்கூட வேலைகளுண்டு என்ற பாவனையில் நடக்கத் தலைப்பட்டாள். கிரிஜா "தலை பின்னு, சித்தி" என்றால் 'அப்புறம் வா!" என்று பதில் சொல்லுவாள். பள்ளிக்கூடத்திற்கு நேரமாகி விட்டது என்று தெரிந்து பக்கத்து வீட்டு மாமியிடம் ஓடிப் பின்னிக் கொண்டு வந்து விடுவாள். வீட்டுக் கணக்கில், பாடங்களில் சந்தேகம் கேட்க வேண்டுமானாலும் அடுத்தகத்து மாமியிடம்தான். இல்லாவிட்டால் அப்பா!

ஆரம்பத்திலிருந்தே கமலா, குழந்தைகளிடம் தன் மாற்றாந்தாய் சுபாவப்படி நடந்திருந்தால் அது ஒருமாதிரியாகச் சகஜமாக ஆகியிருக்கும் மகாதேவனுக்கு. ஆனால் ஆரம்பத்தில் இனிப்பாக இருந்து கடைசியில் கசப்பு தரும் மருந்து வில்லையைப் போல் அவள் உள்ளம் திடீர் மனமாறுதல் அடைந்து மாறி விட்டதுதான் அவனுக்கு அளவற்ற துயரத்தைக் கொடுத்தது.

* * *

நாட்கள் பல ஓடி ஒளிந்தன. கமலாவின் மன நிலையில் ஒரு மாறுதல் ஏதும் இல்லை. ஆனால், அவள் உடல் நிலையில் ஒரு மாறுதல்! ஆம்! பெருத்த மாறுதல்! கமலா விரைவில் தாய்மை ஸ்தானத்தை அடைவதற்கிருந்தாள் விவாகமாகி இத்தனை நாட்களுக்குப் பின் முதல் முறையாகக் கருத் தரித்திருந்தாள். கணவன் மகாதேவனிடம் பெருமையுடன் கூறியபடி முன்போல் அவளால் ஓடியாடி வீட்டிலும் வேலை செய்து வெளியிலும் உழைத்துச் சமாளிக்க அவள் தற்பெருமை இடம் கொடுத்ததே தவிர உடல் நிலைமை ஒத்துழைக்க மறுத்தது. அதுவும் முதல் அனுபவம் வேறு. காலை, மாலை, இரவு பகல் எப்போதும் தாங்க முடியாத உடல் அசதி!

'மகாதேவனே தன்னிடம் இது விஷயமாகப் பிரஸ்தாபித்து வேலைக்குப் போக வேண்டாம் என்று சொல்ல மாட்டானா, அவன் அரைவாயால் சொன்னாலே போதும். அதே சாக்கில் வேலையை விட்டு விடலாமே' என்று எண்ணினாள். ஆனால் மகாதேவன் அவளிடம் அது விஷயமாக ஒன்றுமே சிரத்தை காட்டிப் பேசவில்லை.

அன்று கையில் சுமக்க முடியாமல் சுமந்து அடுக்கு நோட்டுப் புத்தகங்களுடன், தளர்ந்த நடையுடன் பள்ளிக்கூடத்தில் நுழைந்தாள் கமலா. வாசற்புறத் தாழ்வாரத்தை அவள் கடந்த போது, "அம்மா! நீங்கள் இங்கு உபாத்தியாயினியாக இருக்கிறீர்களா? தலைமை உபாத்தியாயினியைப் பார்க்க வேண்டும் நான். எப்போது பார்க்கலாம்! நீங்கள் அழைத்துப் போகிறீர்களா!" என்றாள் அங்கு நின்றிருந்த ஒரு பெண்.

"எதற்கு!" என்றாள் கமலா.

"வேலை விஷயமாகக் கேட்க வந்திருக்கிறேன்!" விதி இழைத்த குறையைப் 'பளிச்'செனத் தோற்றுவிக்கும், வெறிச்சோடியிருக்கும் நெற்றியுடன், சோகமும், ஏழ்மையும் உருவாகியிருந்த எளிய தோற்றத்துடன் நின்றிருந்த நிலையிலும் அவள் முகத்திலும், பேச்சிலும், சாந்தமும் குழைவும் மரியாதையும் மறைந்துவிடவில்லை. கமலா நோட்டுப் புத்தகங்களை வைத்துக் கொண்டு அங்கிருந்த பெஞ்சு ஒன்றில் அமர்ந்தாள். "உட்காருங்கள்!" என்றாள், அந்த பெண்ணிடம் அன்புடன். அவள் கீழே தரையில் மரியாதையாக உட்கார்ந்தாள்.

"வேண்டாம்! வேண்டாம்! இப்படி என் பக்கத்தில் உட்காருங்கள்!" என்று பெஞ்சியைச் சுட்டிக் காட்டிய கமலா, "உங்களுக்கு ஆதரவு யாரும் இல்லையா! நீங்கள் ஏன் வேலைக்கு வரும் அவசியம் ஏற்பட்டது!" என்று கேட்டாள்.

அந்தப் பெண் 'உம்' என்று நீண்டதொரு பெருமூச்செறிந்தாள். "கைப்பொருள் ஏதும் இல்லாத நிலையில் என்னை நிறுத்திவிட்டு என் கணவர் நிம்மதியாகக் கண்ணை மூடிவிட்டார். என் மைத்துனரும் அவர் மனைவியும் என்னையும் என் காலைச் சுற்றிக் கொண்டிருந்த என் இரு குழந்தைகளையும் ஆதரிப்பதாகக் கூறிப் பொறுப்பேற்றுக் கொண்டனர்; ஆனால் எஸ். எஸ். எல். ஸி. படித்து முடித்திருந்த நான் வேலை ஏதேனும் ஏற்றுக் கொண்டு கொஞ்சமேனும் பணம் சம்பாதித்துக் கொண்டு வந்தால்தான் என்ற கண்டிப்புடன் தான்! உடனே நான் உபாத்தியாயினிப் பயிற்சியில் சேர்ந்தேன். அப்பப்பா! அந்த இரண்டு வருடகாலம் முடிவதற்குள் நான் இருந்த நிலைமையை நீங்கள் அறிந்தால் ரொம்பவும் பரிதாபப் படுவீர்கள்! என் வறண்ட மனத்துக்கு அன்பு ததும்பப் பேசி ஆறுதலளிக்கும் ஒரு ஆத்மா வீட்டில் கிடையாது. அருளில்லார்க்கு அவ்வுலகமில்லை; பொருளில்லார்க்கு இவ்வுலகில் இடம் இல்லை என்ற வார்த்தையை எனக்காகத்தான் எழுதி வைத்தார்களோ என்று தோன்றிற்று. நீங்கள் சொன்னால் நம்புவீர்களோ, நம்ப மாட்டீர்களோ! வளரும் பிஞ்சுக் கொடிகளை எந்தப் பக்கம் சுற்றி விடுகிறோமோ அதைச் சார்ந்து படருவதைப் போன்று, என் குழந்தைகளை என்னிடம் அண்ட விடாமல் என் மைத்துனரும், அவர் மனைவியும் புத்தி போதித்து வளர்த்ததில் அவைகளின் அன்புக்கும் ஏங்கும் ஆத்மாவாக நான் ஆகி விட்டேன். நான் என்ன மாற்றாந்தாயா, அந்த இளம் உள்ளங்களின் போக்கைத் தவறாகப் புரிந்து கொண்டு அவைகளுக்குச் சாபமிடுவதற்கு! அவை நான் பெற்ற குழந்தைகள். என்னாலியன்ற வரை சந்தர்ப்பமேற்படும் போதெல்லாம் புத்தி புகட்டி நயமாய் வார்த்தை கூறித் திருத்துவேன். நம் கையே நம் கண்ணைக் குத்தினால்! கையும் நம்முடையது, விரலும் நம்முடையது தானே!

"கடைசியில் ஒரு வழியாகப் பயிற்சி முடிந்துவிட்டது. தலைமை உபாத்தியாயினியிடம் வேலை கேட்க வந்திருக்கிறேன். என் துயர சகாப்தத்துக்கு என்று விடிவு நாளோ!" அந்த பெண்ணின் கண்கள் அருவி போன்று கண்ணீரைப் பெருக்கின.

கமலா அசைவற்ற கற்சிலையாய் உட்கார்ந்திருந்தாள். ஒருநாளுமில்லாமல் அவள் உள்ளத்தை ஏதோ ஒரு வேதனை ஆக்கிரமித்துக் கொண்டு வதைத்தது. "இத்தகைய துயர நிலையில் நீங்கள் எப்படியம்மா நாட்களைத் தள்ளுகிறீர்கள்!" என்று பரிவுடன் கேட்டாள். அந்தப் பெண் வறண்ட புன்னகை யொன்று புரிந்தாள். வாயிலிருந்து வார்த்தை வரவில்லை.

"நான் என்ன மாற்றாந்தாயா? அந்த இளம் உள்ளங்களின் போக்கைத் தவறாகப் புரிந்து கொண்டு அவைகளுக்குச் சாபமிடுவதற்கு!" என்ற வார்த்தைகள் கமலாவின் நெஞ்சில் 'சொரேல்' என உறைத்து நெருஞ்சி முள்போல் குத்தி வதைத்தது. அசைவற்றுத் திக்பிரமையடைந்து உட்கார்ந்திருந்த கமலா முடிவில் ஏதோ தீர்மானத்துக்கு வந்து விட்டவளாக, "நீங்கள் வாருங்கள்! தலைமை உபாத்தியாயினியிடம் நான் சிபாரிசுசெய்கிறேன்!" என்றாள் முகமலர்ச்சியுடன்.



அக்டோபர் மாதம் பதினாறாந்தேதி குந்தக்கல் தமிழ்ச் சங்கத்தார் மகா கவி பாரதியார் விழாவை மிகச் சிறப்பாகக் கொண்டாடினர். இந்த விழாவுக்குத் திரு அ. ம. ஜகதீசன் தலைமை வகித்தார். விழாவில் பேசிய பாரதி அன்பர்களையும் தமிழ்ச் சங்கத்தாரையும் மேலே படத்தில் காணலாம்.

---

வேலையிலிருந்து ராஜினாமா கோரி, அந்த வேலையைப் புதிதாக ஒரு பெண்ணுக்குச் சிபாரிசு செய்யும் கமலாவை வியப்புடன் ஏறிட்டு நோக்கினாள் தலைமை உபாத்தியாயினி.

"கமலா! உங்கள் புதிய தீர்மானம் எனக்குச் சிறிது வருத்தமும், பெரு மகிழ்ச்சியையும் தான் அளிக்கிறது. உங்கள் உடல் நிலையில், உங்களால் இனித் தொடர்ந்து வேலை செய்வது கடினம்தான்" என்று தலைமை உபாத்தியாயினி புன்சிரிப்புடன் கூறிய போது •கமலாவின் முகம் வெட்கத்தால் சிவந்தது. அவள் மேலும் தொடர்ந்தாள்: "உங்கள் கணவருக்கு வருவாய் போதாமல், குழந்தை குட்டிகளும் டஜன் கணக்கில் இருந்தால் ஏதோ வேலை செய்வதில் அர்த்தம் இருக்கிறது. பசி ஏப்பக்காரர் ஒருவருக்குப் புளி ஏப்பக்காரராகிய நாம் விட்டுக் கொடுக்க வேண்டும் என்று வேலையை ராஜினாமா செய்த உங்கள் பெருந்தன்மை பாராட்டத் தக்கது! உங்கள் வேலையை நான் இந்தப் பெண்மணிக்குக் கொடுத்து விடுகிறேன்" என்று முகமலர்ச்சியுடன் கூறி முடித்தாள் தலைமை உபாத்தியாயினி.

வேலை கேட்க வந்த பெண் கமலாவுக்குத் தன் நன்றியைத் தெரிவிப்பதற்குள் திக்கு முக்காடிப் போய் விட்டாள்.

சிந்தனை வேகத்துடன் போட்டியிடும் நடையுடன் தன்னை மறந்து நடந்து வந்த கமலா தன் வீட்டு வாசற்படியில் காலை எடுத்து வைக்கும் போது கிரிஜா ஓடி வந்து, "சித்தி, இன்றைக்கு நீ என்ன இவ்வளவு சீக்கிரம் வந்து விட்டாய்! பள்ளிக்கூடத்தில் என் நினைவு வந்து விட்டதா!" என்றாள் களங்கமற்ற உள்ளத்துடன்.

"அடி என் சமர்த்துக் கண்ணே!" என்று கிரிஜாவை அணைத்தவாறே உள்ளே பிரவேசித்த கமலா வேலைக்காரியிட மிருந்து குழந்தையை வாங்கி அருமையாக முத்தமிட்டுத் தோளில் சாத்திக் கொண்டாள். பிறகு குழந்தையைக் கீழே இறக்கி விட்டு விட்டுப் பரபரப்புடன் அடுப்பைப் பற்றவைத்து நல்ல டிபனும், காப்பியும் தயாரித்துக் கிரிஜாவுக்குக் கொடுத்து விட்டுக் குழந்தையுடன் கூடத்தில் வந்து அமர்ந்தாள்.

"சித்தி! எனக்குத் தம்பிப் பாப்பா பிறக்கப் போகிறானாம்! அடுத்தகத்து மாமி சொன்னாள். நிஜம்தானே!" என்றாள் கிரிஜா.

"ஆமாம் கிரிஜா, ஆமாம்!" என்று பதிலிறுத்தவாறே உள்ளே நுழைந்த தன் கணவன் மகாதேவனைக் கண்டு எழுந்து நின்றாள் கமலா.

கிரிஜா வாசலுக்கு ஓடிவிட்டாள். "என்னை மன்னியுங்கள்! நான் வேலையை இன்று ராஜினாமா செய்து விட்டேன். இனி நம் குழந்தைகள் தான், அவைகளின் நலன் தான் என் கொள்கை, குறிக்கோள். உங்களுக்குச் சரியாய் வாதாடி அகம்பாவ மடைந்த என் ஆணவம் அடங்கி விட்டது!" என்றாள் கமலா தழுதழுத்த குரலில்.

"அடடா! அதென்ன கமலா அப்படி! இந்த தீபாவளிக்கு உன் சம்பளமும் வரும் நன்றாகக் கொண்டாடலாம் என்று பார்த்தால் நீ வேலையை ராஜினாமா செய்து விட்டாய்! உடம்பு கஷ்டத்தையும் பாராமல் நீ வேலைக்குப் போய்த்தான் ஆகணும். அதிகப்படி பணம் வந்தால் அஜீரணமாகப் போய்விடுமா என்ன! வீட்டிலும் பாடுபட்டு வெளியிலும் உழைக்கும் சாமர்த்தியம் பெண்களுக்குக் கிடையாதா என்ன!" என்றான் மகாதேவன் விஷமச் சிரிப்புடன், அவள் முன் தன்னிடம் கூறிய மிடுக்கு தொனிக்கும் வார்த்தைகளை அப்படியே ஒப்பித்தவாறே.

இந்த மூன்று தோல்வியின் சாயலைக் கண்ட போது கமலா கொட்டிய கண்ணீர் ஆனந்தக் கண்ணீர்தான். நாணத்தின் ரேகை படரப் புன்முறுவல் பூத்த அவள், "ஒரே ஒரு வேண்டுகோள்! இத்தனை நாள் நான் சம்பாதித்த பணத்தைப் பாங்கியிலே கட்டி யிருக்கிறேன்! அதை எடுத்து இந்தத் தீபாவளிக்குப் பரிசாக நம்ம கிரிஜாவுக்கு ஒரு மல்லிகை மொட்டு மாலை பண்ணிப் போடணும். அது என்......"

"...மசக்கை ஆசை! அப்படித்தானே! தேவியின் உத்தரவுகள் என்னென்னவோ, வரிசையாகச் சொன்னால் அப்படியே நிறைவேற்ற அடியேன் சித்தமாக இருக்கிறேன்" என்று ஆசையும், பரிவும் பொங்கக் கூறிய மகாதேவன் கமலாவின் முகவாயை அன்புடன் பற்றி அசைத்தான்.

# ஹாஸ்யக் களஞ்சியம்



"போட்டோ ஐயா! அவருக்குச் சிரித்துப் பழக்கமில்லே. இவ்வளவு புன்சிரிப்பு போதுமா?"



"நீங்கள் எதைச் சொன்னாலும் பெரித பண்ணி விடுகிறீர்கள்! அது என்ன உங்கள் உடம்போடு பிறந்த சுபாவமோ?"






"புதிதாக இரண்டு கிராமபோன் ரிக்கார்டு வாங்கி வைத்திருந்தேனே. நீ பார்த்தாயா?"



"அந்த அம்மாள் தலேயில் எவ்வளவு பூ வைத்துக் கொண்டிருக்கிறாள், பாரு!"

"சரி, பார்க்கிறேன்; தலே எங்கே இருக்கு?"





"ஒழே இறங்கு. ஐயா! அது சாமான் கொண்டு போவதற்கு மட்டுந்தான்!"



"அதோ போகிருரே. அவர்தான் வானிலை அறிவிப்பாளர். மழை நிச்சயமாக வராது என்று சொல்லி விட்டுத் தவிக்கிருர்!"



சாமா



"ஒழே இறங்கு. ஐயா! அது சாமான் கொண்டு போவதற்கு மட்டுந்தான்!"

"அதோ போகிருரே. அவர்தான் வானிலை அறிவிப்பாளர். மழை நிச்சயமாக வராது என்று சொல்லி விட்டுத் தவிக்கிருர்!"



சாமா

"விமலா! பின்னுல் திரும்பிப் பார்த்துக்கோ. எவ்வளவு வாயைத் திறக்கணும் என்று!"








## 7. வரவேற்பு உபசாரம்

பிறகு உமாவும் பிரபாகரனும் வாய்க்காலைக் கடந்தார்கள். வாய்க்காலில் நிறையத் தண்ணீர் போய்க் கொண்டிருந்ததால் அவர்களுடைய உடைகள் கொஞ்சம் நனைந்து விட்டன.

ஒழுங்கான பாதை வழியாகப் போகாமல் குறுக்கு வழியாகப் போனதினால் பிரபாகரனும் உமாவும் வெகு சீக்கிரத்தில் சோர்வடைந்தார்கள். கொஞ்ச தூரம் நடப்பதும் பிறகு எங்கேயாவது உட்காருவதுமாக மெதுவாகப் போய்க் கொண்டிருந்தார்கள்.

நடுப்பகல் வந்தது. உமாவினால் நடக்க முடியவில்லை. "அண்ணா, எனக்கு மயக்கமாக இருக்கிறது. இனி மேல் என்னால் ஒரு அடிகூட நடக்க முடியாது. பசியோ காதை அடைக்கிறது. உடனே குடிக்கக் கொஞ்சம் தண்ணீர் கொடுத்தால் தான் நடக்க முடியும்" என்று சொல்லிக் கொண்டே 'தொப்'பென்று கீழே உட்கார்ந்து விட்டாள் உமா.

பிரபாகரன் உமாவின் கையைப் பிடித்து மெதுவாகத் தூக்கினான். "உமா, என்ன பண்ணுவது? நம் தலைவிதி. நீ உன் கஷ்டங்களைச் சொல்லுகிறாய். நான் சொல்லாமல் மனத்தில் வருத்தப் பட்டுக் கொண்டிருக்கிறேன். அதுதான் உனக்கும் எனக்கும் உள்ள வித்தியாசம்" என்று சொல்லிக் கொண்டே தன் கண்களிலிருந்து தாரை தாரையாக வந்து கொண்டிருந்த கண்ணீரைத் துடைத்துக் கொண்டான்.

"அண்ணா, சற்று எங்கேயாவது தங்கி விட்டுச் செல்லலாமா?" என்றாள் உமா.

"சரி, அப்படியே செய்யலாம். அதோ பார்! ஒரு பெரிய தோப்பு. அங்கு ஏதாவது கிணறுகூட இருக்கும். அங்கு தங்கி இளைப்பாறி விட்டுச் செல்லலாம். அதுவரையிலும் நீ மெதுவாக நடந்து வா" என்று சொல்லியபடியே உமாவைத் தடவிக் கொடுத்தான் பிரபாகரன்.

பிரபாகரன் காட்டிக் காட்டியது ஒரு பெரிய மாந்தோப்பு. அந்தத் தோப்பில் சுமார் இரண்டாயிரம் மரங்கள் இருக்கும். பல தினுசு மாமரங்கள் துளிர்விட்டுக் காய்கள் காய்த்துப் பார்ப்பதற்கு அழகாக இருந்தன. மரங்கள் மிக அடர்த்தியாக இருந்ததால் நடுப்பகலில் தோப்பு முழுவதும் நிழலாயிருந்தது. அந்தத் தோப்பின் மத்தியில் அழகான ஒரு சிறு மாளிகையுமிருந்தது. பல சித்திர வேலைகளுடன் அழகாயிருந்தது.

அந்த மாளிகையினுள்ளே பல பெரிய ரத்தின கம்பளங்கள் விரிக்கப்பட்டிருந்தன. விலை உயர்ந்த மெத்தைகள் அமைக்கப்பட்டிருந்த சோபாக்களும், நாற்காலிகளும் போடப்பட்டிருந்தன. பெரிய பெரிய நிலைக் கண்ணாடிகள் உள்சுவர் முழுவதும் பொருத்தப்பட்டிருந்தன.

தோப்பு முழுவதும் தோரணங்களும் தோப்பின் வாசலில் இரண்டு பெரிய வாழை மரங்களும் வாழைக் குலைகளுடன் கட்டப்பட்டிருந்தன. எல்லா விதமான பழவகைகளும், குளிர்ந்த பானங்களும், விலை உயர்ந்த தின்பண்டங்களும் மாளிகையில் குடியானவர்கள் கொண்டு வைத்த வண்ணமாகவே இருந்தார்கள். மேளவாத்தியக்காரர்களும், பாண்டு வாத்தியக்காரர்களும் வாசிப்பதற்குத் தயாராக இருந்தார்கள். இரண்டு பெரிய தட்டுகளில் விலை உயர்ந்த பளபளப்பான பட்டில் பெண்மணி அணியும் உடைகளை ஒரு தட்டிலும் ஆண் தரிப்பதற்குத் தகுதியான உயர்ந்த பட்டினால் தைக்கப்பட்ட உடைகளை மற்றொரு தட்டிலும் இரண்டு குடியானவர்கள் அந்த மாளிகையின் உள்ளே கொண்டு வந்து வைத்தார்கள். அங்கு செய்திருந்த ஏற்பாட்டைப் பார்த்தால் யாரோ உயர்ந்த அந்தஸ்துள்ளவர்கள் அந்தத் தோப்புக்கு அன்று வரப் போகிறார்கள் என்று தெரிந்தது.

பிரபாகரன் உமாவின் கையைப் பிடித்துக் கொண்டு தோப்பை

ராஜி

நோக்கி நடந்து கொண்டிருந்தான். உமா ஒரு கையில் மண் கூஜாவுடன் தள்ளாடிக் கொண்டு பிரபாகரனுடன் போய்க் கொண்டிருந்தாள். இருவரும் தோப்பை நெருங்கியவுடன் உமா, "இது என்ன, இந்தத் தோப்பில் ஏதோ விசேஷம்போலக் காணப்படுகிறது! எங்கு பார்த்தாலும் தோரணங்கள், பலவித வர்ணக் காகிதங்களால் செய்யப்பட்ட கொடிகள் தொங்க விடப்பட்டிருக்கின்றன. இங்கு தங்கிச் சற்று இளைப்பாறலாமென்று பார்த்தால் அதற்கு வழி இல்லை. இப்பொழுது நாம் எங்கே தங்குவது?" என்றாள்.

அப்பொழுது ஒரு குடியானவன் வெகு வேகமாக அவர்களை நோக்கி ஓடி வந்தான். அவன் சற்று வயது முதிர்ந்தவனாகக் காணப்பட்டான். ஓடி வந்த குடியானவன் பிரபாகரனை நெருங்கி, "நீங்கள்தானே குன்றிமணித் தோட்டத்திலிருந்து வருகின்றீர்கள்?" என்று கேட்டான்.

"ஆமாம். நீ யார்? எங்களைப் பற்றி நீ ஏன் விசாரிக்கிறாய்?" என்று கோபமாகக் கேட்டான்.

"நான் இந்த மாந்தோப்பின் காவல்காரன். என் பெயர் கரியன். இந்தத் தோட்டம் அரண்மனையைச் சேர்ந்தது."

"இருக்கட்டுமே. தோப்புக்கும் எங்களுக்கும் என்ன சம்பந்தம்?"

"உங்களுக்காகத்தான் நாங்கள் காலையிலிருந்து காத்துக் கொண்டிருக்கிறோம். உங்களை வரவேற்கத்தான் ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன."

"எங்களை வரவேற்க ஏற்பாடுகளா? நீங்கள் ஏதோ தவறாக......"

"இல்லை, இல்லை. நீங்கள் இரண்டு பேரும் — அண்ணன், தங்கை — குன்றிமணித் தோட்டத்திலிருந்துதானே வருகின்றீர்கள்?" என்று கேட்டான்.

"ஆமாம்!" என்றான் பிரபாகரன்.

"அப்படியென்றால் உங்களுக்காகத்தான் இந்த வரவேற்பு ஏற்பாடு செய்திருக்கிறது. ஏன் நீங்கள் இருவர் மாத்திரம் தனியாக வந்திருக்கிறீர்கள்? இந்த இடத்துக்கு அதிகாலையிலேயே வந்திருக்க வேண்டியவர்களாயிற்றே! ஏன் இத்தனை நேரம்?" என்றான் கரியன்.

பிரபாகரனுக்கு ஒன்றுமே புரியவில்லை. இருந்தாலும் குடியானவன் கேட்டதற்கு "ஆமாம், அதிகாலையிலேயே குன்றிமணித் தோட்டத்தை விட்டுக் கிளம்பி விட்டோம். எங்களுடன் கூட யாரும் வரவில்லை. வயல் வழியாகக் குறுக்கே நடந்து வந்ததனால் நேரம் ஆகிவிட்டது" என்று சொன்னான்.

"அடாடா, முன்னதாகவே தெரிவித்திருந்தால் வண்டியைப் பூட்டி உங்களுக்கு அனுப்பி இருப்பேன்!"

"எங்களுக்காக வண்டியா? வேண்டாம், வேண்டாம். நீங்கள் எங்களை வேறு யாரோ என்று தவறாக நினைக்கிறீர்கள். நீங்கள் எதிர்பார்ப்பவர்கள் நாங்களல்ல!"

"எங்களுக்கு ஏதோ அரசன் சொல்லியபடி மரியாதைகள், வரவேற்புகள் செய்யப் போவதாகச் சொல்லுகிறீர்களே. அதை நாங்களே நம்பமுடியாத விஷயமாக இருக்கிறது. நீங்கள் சொல்லிய வரவேற்புகளை எதிர்பார்த்தே நாங்கள் இங்கு வரவில்லை!" என்றான் பிரபாகரன்.

உமா ஆச்சரியத்துடன் பிரபாகரனையும் கரியனையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

"ஆமாம். நீங்கள் சொல்லுவது உண்மையே. நீங்கள் எதிர்பார்க்காதபடி இவ்வரவேற்பு ஏற்பாடுகளைச் செய்யச் சொல்லியே உத்தரவு வந்திருக்கிறது" என்று சொல்லிக் கொண்டே கரியன், உமாவின் கையில் இருந்த மண் கூஜாவை வாங்கிக் கொண்டு, "இப்படிக் கொடுங்கள். நீங்கள் ஏன் தூக்கவேணும்?" என்றான். பிறகு தோட்டத்தில் நின்று கொண்டிருந்தவர்களுக்குக் கரியன் ஏதோ சைகை காட்டினான். உடனே அங்கிருந்த பாண்டு வாத்தியங்களும் மற்ற வாத்தியங்களும் பலத்த கோஷத்துடன் முழங்கின. பிறகு தோப்புக்குள்ளே நுழைந்தவுடன் பெரிய ரோஜா மலர் மாலைகள் பிரபாகரன் கழுத்திலும், உமாவின் கழுத்திலும் போடப்பட்டன. சந்தனம் கொடுக்கப்பட்டது.

உமாவுக்குச் சந்தோஷம் தாங்கவில்லை. அந்த வாத்திய கோஷங்களுக்கிடையே "அண்ணா, இதென்ன ஆச்



சரியமாயிருக்கிறது. நேற்று கூண்டில் அடைப்பு; இன்று அமோகமான வரவேற்பு. எனக்கு ஒன்றையுமே நம்பத் தோன்றவில்லையே!'' என்றான் உமா.

வாத்தியங்கள் முழங்கப் பிரபாகரனும், உமாவும் மாந்தோப்பிலுள்ள மாளிகைக்குள் அழைத்துச் செல்லப்பட்டார்கள். அக் கட்டிடத்திலுள்ள வேலைப்பாடுகளையும், அங்கு போடப்பட்டிருக்கும் விலை உயர்ந்த நாற்காலிகளையும் மற்றைய சாமான்களையும் பார்த்த பிரபாகரனும் உமாவும் பிரமித்துப் போனார்கள். பிறகு கரியன் அவர்கள் இருவரையும் குளிக்கும் அறைக்கு அழைத்துச் சென்றான். குளித்து விட்டுத் திரும்பி வரும்பொழுது அவர்கள் மீது 'கம்'மென்று வாசனை வீசிற்று. அவர்கள் அப்பொழுது பழைய அழுக்கடைந்த உடுப்புகளையே அணிந்து கொண்டிருந்தார்கள். அதைப் பார்த்த கரியன், "ஐயா, நான் இந்த அமர்க்களத்தில் மறந்து விட்டேன். இதோ உங்களுக்காக வைக்கப்பட்டிருக்கும் உடைகள்'' என்று பிரபாகரனுக்கும், உமாவுக்கும் தனித்தனியே ஒரு வெள்ளித் தட்டில் வைத்திருந்த உடைகளைக் கொடுத்தான். அதை அணிந்து கொண்ட பிரபாகரனும் உமாவும் அப்பொழுது ராஜ வம்சத்தைச் சேர்ந்தவர்கள் போலத் தோன்றினார்கள்! "என்ன அண்ணா இது, நாம் உடுத்திக் கொள்ளும் உடையைப் போலவே இருக்கிறது! அதுவுமல்லாமல் நமக்கு அளவு எடுத்துத் தைத்தது போல் அல்லவா தோன்றுகிறது!'' என்று பெருமை கொண்டான் உமா.

புத்திசாலியான பிரபாகரன் தான் போட்டுக் கொண்டிருந்த பழைய ஜிப்பாவின் பையிலிருந்த தங்க மாம்பழத்தை எடுத்து மறந்து போகாமல் தான் அணிந்திருந்த புதிய ஜிப்பாவின் பையில் போட்டுக் கொண்டான்.

சற்று நேரம் கழித்துப் பிரமாதமான விருந்து அவர்களுக்கு அளிக்கப்பட்டது.

"நீங்கள் மிகவும் களைப்புற்றிருப்பதால் சற்றுச் சிரம பரிகாரம் செய்து கொள்ளுங்கள்'' என்று பிரபாகரனையும், உமாவையும் அழைத்துக் கொண்டு போய்த் தயாராக வைத்திருந்த வெல்வெட் மெத்தைகள் போட்டிருந்த கட்டில்களில் படுக்கச் செய்தான் கரியன். பிரபாகரனும் உமாவும் நன்கு அயர்ந்தார்கள். அவர்கள் நன்றாகத் தூங்கி விட்டபடியால் மாலை ஐந்து 'மணி' வரையிலும் எழுந்திருக்கவில்லை. பிறகு பிரபாகரன் திடீரென்று கண் விழித்து உமாவை எழுப்பினான்.

"உமா, நாழிகை ஆகிவிட்டது. இனிமேல் நாம் இங்கே தாமதிக்கக் கூடாது. வா, காவல்காரனிடம் சொல்லி விட்டுப் புறப்படலாம்'' என்றான் பிரபாகரன்.

பிறகு பிரபாகரனும் உமாவும் கரியனிடம் விடைபெறச் சென்றார்கள்.

தம்பியின் யோசனை!

"நீங்கள் இருவரும் அரண்மனைக்குத் தானே போக வேண்டும்? அப்படியானால் சமீபத்தில் ஒரு காட்டாறு இருக்கிறது. அதைக் கடந்துதான் செல்ல வேண்டும்'' என்றான் கரியன்.

"அந்த ஆற்றை எப்படிக் கடப்பது?''

"அந்த ஆற்றைக் கடப்பதற்குப் பாலம் ஒன்றுமில்லை. ஆனால் பரிசல் இருக்கிறது. அதன் உதவியால் எளிதில் நீங்கள் அக்கரை செல்லலாம்!'' என்றான் கரியன்.

"சரி, அப்படியே போகிறோம். நீங்கள் செய்த மரியாதைகளுக்கு உங்களுக்கு மிக்க வந்தனம். உங்களை நாங்கள் மறக்கவே மாட்டோம். நாங்கள் சென்று வருகிறோம்'' என்று கைகூப்பி வணங்கினான் பிரபாகரன்.

உமாவும் ஒரு கையில் மண் கூஜாவை எடுத்துக் கொண்டு கரியனிடம் விடை பெற்றுக் கொண்டான்.

"நீங்கள் நடந்து போகக் கூடாது. கேளுங்கள்! இதோ வண்டி வந்து விட்டது. உங்களைப் பரிசல் துறைக்கு அழைத்துப் போகச் சொல்கிறேன்'' என்று கரியன் கைகூப்பிய வண்ணம் சொன்னான்.

பிரபாகரனும் உமாவும் வண்டியில் ஏறிக் கொண்டார்கள். உடனே "சற்று இருங்கள், இதோ வருகிறேன்'' என்று சொல்லிவிட்டு, கரியன் பெரிய மாம்பழங்களாக நான்கு மாம்பழங்கள் கொண்டு வந்து, "இந்தத் தோப்பிலே உள்ள ரகங்களில் எல்லாவற்றையும்விட இந்த மாம்பழங்கள் உயர்ந்த ரகத்தைச் சேர்ந்தவை. நீங்கள் எடுத்துக் கொண்டுபோய் வழியில் சாப்பிடுங்கள்!'' என்று மிகவும் ஆசையுடன் கொடுத்தான்.

பிரபாகரனும் உமாவும் ஆளுக்கு ஒரு மாம்பழம் எடுத்துக் கொண்டார்கள். இரட்டைக் குதிரைகள் பூட்டப்பட்ட வண்டி பரிசல் துறையை நோக்கி டக்டக் என்று வேகமாகச் சென்றது. மாந்தோப்பில், காலை முதல் ஏற்பட்டிருந்த பரபரப்பு குறைந்து எப்பொழுதும் போல் அமைதி நிலவ ஆரம்பித்தது. (தொடரும்)




## 34. சூழ்ச்சி விளைவிற்று!

ராஜாஜி

பரதனுக்கு விஷயம் இப்போது விவரமாகத் தெரிந்தது. எவ்வளவு பெரிய அநியாயம் நடந்து விட்டது என்பதை உணர்ந்து, தாங்க முடியாத கோபமும் துக்கமும் மேலிட்டுத் தன் தாயைப் பார்த்துச் சொல்லலானான் :

“என்ன காரியம் செய்து விட்டாய்? இந்த ராஜ்யத்தை ஏற்றுக் கொள்ளும்படி எனக்குச் சொல்லவும் உனக்குத் தோன்றிற்றே! தகப்பனையும் அண்ணனையும் இழந்துவிட்ட எனக்கு ராஜ்யாதிகாரம் என்ன வேண்டியிருக்கிறது? தந்தையை உயிர் மாள வைத்து, ராமனையும் காட்டுக்கு அனுப்பிவிட்டு என்னை அரசு புரியச் சொல்லுகிறாயே! ரணகாயப் படுத்திவிட்டு அதன் மேல் உப்புப் போட்டு வேதனை செய்கிறாயே! தசரத மகாராஜாவுக்குப் பத்தினியாக வந்து சேர்ந்தாயே! புத்தி கெட்டுப் போய் உன்னை அவர் அடைந்தார். நெருப்பை மடியில் கட்டிக் கொண்டார். என் தந்தையைக் கொன்று விட்டாயே! கௌசல்யையும் சுமித்திரையும் இறக்கத்தான் போகிறார்கள். உன்னிடம் அவ்வளவு அன்போடிருந்த ராமனை, ஆஹா! நீ எப்படித்தான் வனத்துக்கு அனுப்பினாயோ! பெரிய தாயார் கௌசல்யை உன்னை உடன்பிறந்த சகோதரி போல எண்ணி நடத்தி வந்தாளே. அவளுடைய வயிற்றில் பிறந்த அருமை மகனைக் காட்டுக்கு அனுப்பிவிட உனக்கு எப்படித்தான் எண்ணம் உண்டாயிற்றோ? ராமனிடத்தில் நான் வைத்திருக்கும் அன்பு உனக்குத் தெரியாமல் போய்விட்டதா? உன் துராசை உன் மூளையை நாசம் செய்து விட்டது. என் உயிரைப் போலுள்ள ராமனைக் காட்டுக்கு அனுப்பிவிட்டு எனக்குச் சந்தோஷம் ஊட்டப் பார்த்தாயே, உன் மடமையை என்னென்று சொல்லுவேன்? மகா பராக்கிரமசாலியான தந்தை மன்னன், ராமலக்ஷ்மணர்களைத் தாம் பெற்ற பெரும் பக்க பலமாக எண்ணி வந்தாரே? அவர்களைக் காட்டுக்குத் துரத்திவிட்டு, என்னை இந்த ராஜ்யப் பொறுப்பை ஏற்று நடத்தச் சொல்லுகிறாயே, இது என்னால் முடியுமா? முடிந்தாலுங்கூட நான் ஒப்புக் கொள்வேனா? ஒருநாளும் உன் ஆசை நிறைவேறாது. நான் நிறைவேற்றவும் மாட்டேன்! நீ இவ்வளவு பெரிய பாவச் செயல் புரிந்துவிட்ட பிறகு உன்னை என் தாயாகப் பாவிக்க முடியாது. உன்னை நான் நீக்கிவிட்டேன். பரம்பரையாக ராஜகுலங்களில் வழங்கிவரும் முறையைப் புறக்கணித்து இளையவனுக்குப் பட்டம் கட்டும் எண்ணம் உனக்கு எப்படித் தோன்றிற்று என்பதை என்னால் ஊகிக்க முடியவில்லை. உலகமெல்லாம் நம்மைக் குற்றம் கூறும் என்பது உனக்குத்



தெரியவில்லையே! ராஜாக்களுக்கெல்லாம் இது பொது விதி. நம்முடைய குலத்திலும் இதுவே முறை. உன் எண்ணத்தை நான் ஒருநாளும் பூர்த்தி செய்ய மாட்டேன். வனம் போய் அண்ணனைத் திரும்ப அழைத்து வரப் போகிறேன். அவனுக்கே பட்டம் சூட்டி என் உள்ளம் மகிழ நான் அவனுக்கு அடிமை செய்து வருவேன். உன் எண்ணம் நிறைவேறாது.''

இவ்வாறு பரதன் தாயைப் பார்த்துக் கோபத்தினால் வாய் குளறப் பேசினான். வரவர துக்கம் அதிகரித்து விட்டது. இப்படிச் செய்து விட்டாளே, தனக்கு அழியாப் பழி உண்டாக்கி விட்டாளே என்ற பெரும் ஆத்திரத்தில், அவள் தாய், தான் அவள் மகன் என்ற உணர்ச்சியைத் தன் மனத்திலிருந்து முற்றிலும் அகற்றி விட்டான். அதன் காரணமாகவே துக்கமும் கோபமும் பரதனுக்கு அதிகரித்து விட்டது. குகையில் சிங்கம் கர்ஜிப்பது போல் கர்ஜித்து, தாயை மிகக் குரூரமான மொழிகளால் நிந்திக்கலானான். பரதனுடைய சுபாவமும், ராமனிடம் அவனுக்கிருந்த அளவிலாத அன்பும், தந்தையை இழந்த துக்கமும், என்றும் எதிர் பாராத பெரும்பழி வந்துவிட்ட சங்கட நிலையும் — ஆகியவற்றை யெல்லாம் வைத்துப் பார்த்தால் பரதனுடைய உணர்ச்சி வேகமும் அதனின்று பிறந்த வசை மொழிகளும் நமக்குப் பொருள்படும். ஏதோ சாஸ்திரம் படித்த கல்மனப் பண்டிதர்களைப் போல் நாம் பரதன் பேசியதை அளந்து பார்க்கக் கூடாது. இம்மாதிரியான கட்டங்களிலே தான் கவியுள்ளம் சுடர் விட்டுப் பிரகாசிக்கிறது. இதை வால்மீகியிலும் பார்க்கலாம்; கம்பர் கவியிலும் பார்க்கலாம்.

* * *

பொறுக்க முடியாத கோபாவேசத்தில் எழுந்து, தாயைப் பார்த்து உரத்த குரலில் மீண்டும் பரதன் பேசலானான்:

"நீ நாட்டுக்கு உதவாதவள்; நாட்டை விட்டு வெளியேற வேண்டியவள், கொடியவள், கெட்ட வழியைப் பின்பற்றி தருமத்தைக் கைவிட்டவள், நான் உன்னைப் பொறுத்த வரை செத்தேன் என்று வைத்துக் கொள். அரசனை யமனிடமும், ராமனைக் காட்டுக்கும் அனுப்பிய உன்னை வெறுக்காதவர் யார்? கொலையாளியாய்ப் போனாய். இந்தக் குலத்தைப் பாழாக்கி விட்டாய். நீ நரகமே யடைவாய். எனது அன்புக்குரிய தந்தை சென்ற உலகத்துக்கு நீ போகமாட்டாய். கோர பாதகம் செய்த உன்னைக் காண உன் மகனான நானே நடுங்குகிறேன். தாயுருவத்தில் வந்த என் மகா சத்துருவே! புருஷனைக் கொன்ற கொலை பாதகியே! உனக்கும் எனக்கும் இனி பந்தம் அறுந்து விட்டது. தர்மராஜாவான பாட்டனார் அசுவபதி யரசனுடைய பெண்ணல்ல நீ, ஒரு அரக்கி. குலத்தைக் கெடுக்க அவர் வயிற்றில் நீ பிறந்தாய். சத்தியமும் தருமமும் மனித உருக் கொண்ட என் அண்ணனைக் காட்டுக்குத் துரத்தி விட்டாய். என் தந்தையும் உயிர் நீத்தார். இரு விதத்தில் எனக்குத் தீங்கிழைத்தாய்.

"கௌசல்யா தேவியின் ஒரே குழந்தையான ராமனைக் காட்டுக்கு போகச் செய்த நீ எந்த நரகத்துக்குப் போவாயோ! தாயின் உள்ளம் உனக்குத் தெரியாமற் போயிற்றே! புத்திரன் தாயின் உடலில் ஒரு பாகம் அல்லவா? தாயின் ஒவ்வொரு அங்கத்திலும் ஒரு பகுதியைக் கொண்டு உண்டான ஜீவனாயிற்றே! தாய்க்கும் மகனுக்கும் உள்ள இந்த உயிர்த் தொடர்பு உனக்குத் தெரியாதா? உயிரின் உயிராகிய மகனைக் காட்டுக்கு அனுப்பித் தாய் உள்ளத்துக்கு நீ விளைவித்த பெருந் துக்கத்துக்கு என்ன தண்டனை கொடுத்தால் தகும்?

"காமதேனுவுக்குக் கோடிக் கணக்கில் புத்திரர்கள் இருக்க, ஏதோ இரண்டு மாடுகள் ஏருக்குக் கட்டப்பட்டு, ஒரு

மூர்க்கக் குடியானவனால் துன்புறுத்தப் படுவதைக் கண்டு, 'ஐயோ 'இந்தக் குழந்தைகள் வெய்யிலின் கொடுமை தாங் காமல் வயலில் கீழே விழுந்து விட்ட போதிலும், இந்த மூர்க்கன் இன்னும் இம்சிக்கிறானே' என்று காமதேனு கண் ணீர் சிந்தியது உனக்குத் தெரியாதா? தேவராஜன்மீது அந்தக் கண்ணீர்த் துளி விழுந்து அதன் சுவாசனையைக் கண்டு இது சுரபியின் கண்ணீராகவே இருக்க வேண்டும் என்று தெரிந்து கொண்டு வருந்தின னல்லவா? கோடி புத்திரர் களைப் படைத்த சுரபி இரண்டு புத்தி ரர்களின் கஷ்டத்தைப் பொறுக்க முடிய வில்லையே! கௌசல்யைக்கு நீ செய்த கொடுமை உனக்குத் தெரியவில்லையா? ஒரு மகனைப் பெற்றாள்; அந்த மகனை வனத்துக்கு அனுப்பி விட்டு, அதனால் நீயும் நானும் சுகம் அடைவோம் என்று எண்ணினாய், அரக்கியே! நீ பெரும் துக்கம் அடைந்து சாவாய் என்பது நிச்சயம். இறந்த பின்னும் துக்கமே உன் பங்கு. தந்தைக்குச் செய்ய வேண்டிய உத்தர கிரியைகளை முடித்து விட்டு, நான் வனம் சென்று, வீரன் ராமன் காலில் விழுந்து இராஜ்யத்தை அவனிடம் ஒப்பு வித்து விட்டு, நீ எனக்குச் சம்பாதித்துத் தந்த பெரும் பழியைப் போக்கிக் கொள் வதற்காக ராமனுக்குப் பதில் நான் தண்டகாரணியத்தில் விரதம் பூண்டு வாசம் செய்வேன். நீ செய்த பாவத்தின் பாரத்தை என்னால் தாங்க முடியவில்லை. நீ உண்டாக்கிய கண்ணீர் வெள்ளத்தை என்னால் பார்க்க முடியவில்லை. நீ என்ன பிராயச்சித்தம் செய்து தப்புவாய்? கழுத் துக்கு உறி போட்டுக் கொண்டு உயிர் துறப்பாயா? அல்லது நெருப்பில் விழுந்து உயிர் விடுவாயா? அல்லது நீயே வன வாசம் செய்து தண்டகாரணியத்தில் ஆயுள் முழுதும் கழிப்பாயா? எப்படி யானாலும் சரி, ராமனிடம் சென்று இந்தப் பூமண்டலாதிபத்யத்தை அவ னிடம் ஒப்புவித்து எனக்கு நீ ஏற் படுத்தித் தந்த தோஷத்தைத் தீர்த்துக் கொள்ளப் போகிறேன்.''

இப்படித் தாயைக் கோபித்து மிகக் கொடிய முறையில் வசை மொழிகள் பொழிந்தான். காட்டில் புதிதாகப் பிடிக்கப்பட்ட யானையைப்போல் பெரு மூச்செறிந்தான் அவன் கண்களினின்று ரத்தக் கண்ணீர் பெருகிற்று.

**இன்னணம் இனையன**
**இயம்பி யானும்இப்**
**பன்னரும் கொடுமனப்**
**பாவி மா(டு)இரேன்**
**துன்னரும் துயர்கெடத்**
**தூய கோசலை**
**பொன்னடி தொழுவன்என்(று)**
**எழுந்து போயினன்**

''இவள் பக்கத்தில் நிற்க முடியவில்லை. என் துக்கத்தைச் சொல்லிக் கொள்ளக் கோசலைத் தாயிடம் போகிறேன்'' என்று பெரிய அன்னையின் இல்லம் சென்றான்.

கைகேயினுடைய மனக்கோட்டை அழிந்தது. தன்னுடைய ஆசை ஒரு விநாடியில் புகைந்து போனதைக் கண் டாள். கீழே விழுந்து பரிதபித்தாள்.

* * *

ராமாயண பாத்திரங்களில் பரதனைப் போன்ற ஒரு பரிசுத்த விக்கிரகம் வேறு இல்லை. வட நாட்டுக் கிராமங்களில் மக்கள் மிகவும் அனுபவிப்பது சித்திர கூடத்தில் ராம, பரத சந்திப்புத்தான். ராமாயணக் கதையில் இதுவே முக்கிய மான பாகமாக அவர்கள் கருதி, பெரிய திருவிழா கொண்டாடுகிறார்கள். யார் எத்தனை பாவச் செயல்கள் செய்யத் துணிந்தாலும், ஒரு சிலர் தருமத்தைக் காக்க இருக்கவே செய்கிறார்கள். பேராசையும் பொறாமையும் நிறைந்த உலகத்தில் பரஸ்பர நம்பிக்கையும் தைரியமும் அன்பும் உண்டாக்கித் தந்து மக்களை அறவழியில் நிறுத்தச் சில ஆத்மாக்கள் இருந்து கொண்டே வரு வார்கள். தருமத்துக்கு ஆபத்து இல்லை.

## 35. பரதனுடைய உறுதி

பரதன் வந்து விட்டான் என்கிற சமாசாரம் அந்தப்புரமெல்லாம் பரவி விட்டது. தன் துக்கத்தைத் தீர்த்துக் கொள்ள வழி தெரியாமல் தவித்துக் கொண்டிருந்த கௌசல்யை இதைக் கேட்டதும் ''பரதனிடம் போகலாம், வா!'' என்று சுமித்திரையையும் அழைத் துக் கொண்டு புறப்பட்டாள். அவர்கள் இரண்டு அடிகூட எடுத்து வைத்திருக்க மாட்டார்கள், அதற்குள் பரதனே, உன் மத்த கோலத்தில் ராமனுடைய தாயிடம் சரணம் அடைய வந்து விட்டான்.

கௌசல்யை எண்ணினாள், ராஜ்யம் எளிதில் தனக்குக் கிடைத்து விட்ட களிப்பில் மூழ்கி, பட்டாபிஷேகம் செய்து கொள்ள பரதன் அவசரமாகவே கேகய

காட்டிலிருந்து வந்து விட்டான் என்று. எவ்வளவு பிசகு!

வசிஷ்டர் தலைமையில் மந்திரிகளும் சபை கூடி, இறந்துபோன மன்னனுக்குப் பரதனைக் கொண்டு உத்தரகிரியைகளை நடத்தி விட்டு அவனுக்குப் பட்டாபிஷேகம் செய்துவிட வேண்டுமென்று முடிவு செய்திருந்தார்கள் அல்லவா? ஆகையால் பரதனைக் கண்டதும் வீர புருஷனையும் அருமை மகனையும் இழந்த கௌசல்யை தீனஸ்வரத்தில் இவ்வாறு சொன்னாள்:

"பரதனே, யாதொரு இடையூறும் பயமும் இல்லாமல் செய்யப்பட்ட ராஜ்ய பதவி உனக்காக இதோ, காத்திருக்கிறது. கைகேயி சம்பாதித்து உனக்குத் தந்திருக்கிறாள். பெற்றுக்கொண்டு சுகமாக ஆள்வாயாக. தந்தைக்காக நீ மூட்டும் தீயில் நானும் விழுந்து மன்னன் சென்ற உலகத்துக்குப் போய் விடுகிறேன்" என்றாள்.

கொடிய விஷம் போன்ற இந்த மொழிகளைக் கேட்ட பரதன் கீழே விழுந்து அவள் பாதங்களைப் பிடித்துக்கொண்டு பேச முடியாதவனாகக் கிடந்தான்.

"பரதனே, நீயே என்னை அழைத்துப் போய் என் வீர குமாரன் எங்கே தவ வாழ்க்கை நடத்துகிறானோ அங்கே கொண்டு போய் விட்டு விடு" என்றாள் கௌசல்யை.

* * *

தாய் கௌசல்யையின் கொடிய மொழிகளைக் கேட்டு வேதனை தாங்காமல் மூர்ச்சையடைந்த பரதன், சற்று நேரம் கழித்துக்கொஞ்சம் தெளிந்ததும் எழுந்து, "தாயே, ஒரு பாவமும் அறியாத என்னை ஏன் இப்படியெல்லாம் துன்பப்படுத்துகிறாய்? வெகு தூரத்தில் ஒரு விஷயமும் தெரியாதவனாக இருந்தேன் என்பது உனக்குத் தெரியாதா? இங்கே நடந்த சூழ்ச்சியும் பாவமும் எனக்கு ஏதும் தெரியாது. அண்ணன் ராமனிடம் நான் வைத்துள்ள அன்பு உனக்குத் தெரியாதா? இந்தக் கொடுமையை நான் அவனுக்குச் செய்திருப்பேனா? இது உனக்குத் தெரியாதா? நான் அடைந்த சகல அறிவும், பெற்ற ஞான சம்பத்தும் எல்லாம் நாசமாகப் போகட்டும். இந்தத் தீச் செயலில் எள்ளளவாவது எனக்குப் பங்கிருக்குமானால் உலகத்தில் யார் எந்தப் பெரும் பாவம் செய்து அதன் பயனை அனுபவிக்கிறார்களோ, அந்தப் பாவமும் கர்ம பலனும் எனக்கு வந்து சேரட்டும். சத்தியம் செய்கிறேன், தாயே! ஒரு நாளும் இந்த விஷயத்தில் நான் கலந்தவன் அல்ல; ஆசைப் பட்டவன் அல்ல!"

இரு கைகளையும் உயரத் தூக்கி துஷ்ட மனிதன் செய்யக் கூடிய சகலவித பாவங்களையும் ஒன்றன் பின் ஒன்றாகக் கூறி அந்தப் பாவம் தன் மேல் விடியக்கடவது, இந்தச் சூழ்ச்சிக்குத் தான் சம்மதித்திருந்தால், என்று கோர சபதம் செய்தான்.

தன்னைப் பெற்ற தாய் செய்த சூழ்ச்சியின் பயனாகப் பெரிய லாபத்தைப் பெற்ற ஒரு மகன் தனக்கு ஒன்றுமே தெரியாது என்று நிரூபிப்பது அந்தக் காலத்திலும் கடினமாகத்தான் இருந்தது. இந்த நிலையில் அப்பாவியான பரதன் சபதங்கள் செய்து அலறி அலறி அழுதான். அரசு இழப்பதை விடவும், வனம் போவதை விடவும் இவ்வளவு நாட்கள் பிரியமாயிருந்த தாயான கௌசல்யை சாட்டிய பழி குற்றமற்ற பரதனுக்குப் பயங்கர நரக வேதனையைத் தந்தது. ராமனுக்குச் செய்யப்பட்ட அநீதியினால் ராமன் துக்கப்படவில்லை. பரதனுக்குச் செய்த அநீதி மிகப் பெரிது.

பரதனுடைய உள்ளத்தை இப்போது கௌசல்யை கண்டாள். தான் எண்ணியது தவறு என்று உணர்ந்தாள். தன் மடியின்மீது அவன் தலையை எடுத்து வைத்து, "அன்புக்குரிய மகனே! உன் தூய உள்ளத்தில் உண்டாகியிருக்கும் துக்கத்தைப் பார்த்து என் சோகம் இரு மடங்காகப் பொங்குகிறது. நாம் என்ன செய்ய முடியும், குழந்தாய்? விதியின் வசப்பட்டவர்களாக இருக்கிறோம். புண்ணியவான்களுக்குரிய பதவிகளெல்லாம் உனக்கு இந்த உலகத்திலும் மேலுலகத்திலும் உண்டாகக் கடவது" என்று ஆசீர்வதித்து ஆறுதல் அடைந்தாள்.

முதலில் சந்தேகப்பட்டாள் — சூழ்ச்சியில் பரதனும் கலந்திருப்பான் என்று அல்ல—பரதனுடைய மனத்தில் ஆசையிருந்திருக்கும், அதை அடைந்ததில் பரதனுக்குத் திருப்தி இருக்கும் என்று. பின்னர் பரதனுடைய உள்ளத்தின் கல்மஷமற்ற பான்மையைக் கண்டு இரு மடங்கு திருப்தியடைந்தாள். ஒரு மகன் காட்டுக்குப் போனாலும் இத்தகைய ஒரு மகன் கிடைத்தான் என்று மகிழ்ச்சியடைந்தாள். இந்த இடத்தில் கம்பர் மிக அழகாகச் சொல்லுகிறார்:

தூய வாசகம்
சொன்ன தோன்றலே
தீய கானகம்
திருவின் நீங்கி, முன்
போயி னான்தன்முன்
போந்து ளான்என
ஆய காதலால்
அழுது புல்லினாள்.

பட்டத்திலிருந்து நீக்கப்பட்டு, காட்டுக்குப் போன ராமனே திரும்பி வந்து அவனைக் கட்டித் தழுவிக் கொள்வதாகவே எண்ணிக் கோசலை பரதனை எடுத்து, ஆனந்தக் கண்ணீர் விட்டு, அணைத்துக் கொண்டாள்.

மக்களின் உள்ளத்தில் ஏற்படும் பலவித உணர்ச்சிகளைக் கவிஞர்கள்தான் காண்பார்கள். அவற்றைப் பளிச்சென்று காண்பிக்கத் தகுந்த மொழிகளையும் அவர்கள்தான் காண்பார்கள்.

“உன் முன்னோர்கள் பலர் அரசு புரிந்து பெரும்புகழ் பெற்றிருக்கிறார்கள். ஆனால் அரசு வேண்டாம் என்று சொல்லும் உனக்குச் சமானமானவர் அவர்களில் ஒருவருமே இல்லை. நீதான் மன்னர்களுக்குள் மன்னன், பரதனே!” என்று சொல்லி, கோசலை விம்மிவிம்மி அழுதாள்.

முன்னை நம்குல
முதலு ளோர்கள்தாம்
நின்னை யாவரே
நிகர்க்கும் நீர்மையார்?
மன்னர் மன்னவா!
என்று வாழ்த்தினாள்
உன்ன உன்னநைந்(து)
உருகி விம்முவாள்.

கம்பர் கண்ட கோசலையும் பரதனும் பாரத நாட்டு மக்களின் உள்ளத்தில் என்றென்றும் நிலைத்து வாழ்க! அந்தப் பண்பும் நீடூழி வாழ்க!

* * *

இறந்து போன மன்னனுக்கு வழக்கப்படி செய்ய வேண்டிய உத்தரக் கிரியைகள் கிரமமாகச் செய்து முடித்தார்கள். ஆறாத துக்கத்தில் மூழ்கிய பரத சத்ருக்னர்களை வசிஷ்டர் முதலான அறிஞர்கள் சமாதானப் படுத்திக் கொண்டு வந்தார்கள்.

மன்னன் இறந்த பதினான்காவது நாள் மந்திரிகள் முதலியவர்கள் சபை கூட்டி பரதனை வணங்கி, “நம்முடைய பெருந்தகை மன்னன் சுவர்க்கம் சென்று விட்டான். ராம லக்ஷ்மணர்கள் ராஜ்யத்தை விட்டு விட்டுப் போய் வனத்திலிருக்கிறார்கள். நாயகனற்ற இந்த ராஜ்யத்தின் தலைமையை இந்தச் சந்தர்ப்பத்தில் தாங்கள் ஏற்றுக் கொள்ளுவதில் தவறு ஒன்றுமில்லை. ஆகவே ஒப்புக்கொண்டு எங்கள் அரசனாகப் புகழ் பெற்று விளங்குவீராக! மகுடாபிஷேகத்துக்கு வேண்டிய எல்லா மங்களப் பொருள்களைச் சேர்த்து வைத்தும், மற்ற சகல ஏற்பாடுகள் செய்தும், நகரத்துப் பிரமுகர்களும் ராஜ குலத்தவர்களும் காத்திருக்கிறார்கள். ராஜ்யத்தை ஏற்றுக் கொள்வீராக. இது உம்முடைய முன்னோர்களின் ராஜ்யம். அபிஷேகம் செய்து கொண்டு எங்களைக் காப்பாற்றுவீராக!” என்றார்கள்.

இதைக் கேட்ட பரதன் பட்டாபிஷேகத்துக்காக வைக்கப்பட்டிருந்த சாமக்கிரியைகளையெல்லாம் வலம் செய்து கை கூப்பி வணங்கிவிட்டு, அவ்விடம் கூடியிருந்த மகாஜனங்களுக்குச் சொன்னான்:

“மூத்த குமாரனுக்கு உரிமையான ராஜ்யத்தை என்னை ஒப்புக் கொள்ளும்படி குல வழக்கத்துக்கு விரோதமாக நீங்கள் விரும்புவது நியாயமில்லை. உங்களுக்கு எல்லா மங்களங்களும் உண்டாகுக. ராமசந்திரன் எனக்கு மூத்தவன். அவன் இருக்கும் அரண்யத்துக்கு நான் சென்று அவனுக்கு அங்கேயே ராஜ்யாபிஷேகம் செய்து வைத்து, ராம லக்ஷ்மணர்களை அயோத்தியைக்கு அழைத்து வரத் தீர்மானித்திருக்கிறேன். இதற்கு வேண்டிய பரிவாரங்களைத் திரட்டி எல்லா ஏற்பாடுகளையும் செய்வீர்களாக. இவ்விடமிருந்து வனத்துக்குப் போகப் பாதை சீராக அமைக்க வேண்டும். எல்லாத் தொழிலாளர்களையும் திரட்டுங்கள். நான் அபிஷேகம் செய்து கொள்ள மாட்டேன். இது என் பிரதிக்ஞை” என்றான்.

ராஜகுமாரன் சொன்னதைக் கேட்டு, சபையில் கூடியிருந்தவர்கள் எல்லோரும் தங்களையும் அறியாமல் பெரு மகிழ்ச்சியடைந்து ஆரவாரம் செய்தார்கள்.

எல்லோரும் பரதனுடைய யோசனையை ஒப்புக்கொண்டு பெரும் படை பரிவாரத்தோடு ராஜகுமாரன் வனம் சென்று ராமனைச் சந்திக்க எல்லா ஏற்பாடுகளும் செய்தார்கள்.

* * *

வனப் பிரதேசத்தை நன்றாய் அறிந்தவர்கள், கிணறு, வாய்க்கால் வெட்டுகிறவர்கள், சுரங்கம் போடுகிறவர்கள்,

தெப்பம், படகு முதலியவற்றைக் கட்டத் தெரிந்தவர்கள், கல்த் தச்சர்கள், யந்திரம் செய்பவர்கள், சீக்கிரமாகப் பெரு மரங்களை வெட்டத் தெரிந்தவர்கள், மேடு பள்ளங்களை ஒழுங்கு படுத்தத் தெரிந்தவர்கள், சுண்ணும்பு வேலைக்காரர்கள், காட்டு வழியில் செல்லப் பயிற்சி பெற்றவர்கள், இன்னும் இத்தகையோர் பலரும் கூடிய ஒரு பெரிய தொழிலாளர் கூட்டம் வேண்டிய ஆயுதங்களோடு முன்னுல் சென்று எல்லா வேலைகளும் வெகு துரிதமாகச் செய்தார்கள். 'ராமனை அழைத்து வருவோம்' என்று எல்லா வேலையாட்களுக்கும் உற்சாகம். வெகு வேகமாகப் பாலங்கள் கட்டப்பட்டுவந்தன. மரங்கள் வெட்டப் பட்டன. வெகு துரிதமாகச் சேனையோடு ராஜகுமாரன் போவதற்குத் தகுந்த பாதை தயார் செய்யப் பட்டது. அங்கங்கே மேடு பள்ளம் சமப்படுத்தி, ஈரப்பிரதேசங்களில் ஜலம் வற்றவெட்டி விட்டு, வழியில் பெரும் படை தங்குவதற்கு விடுதிகளும் குடிக்கும் தண்ணீர் வசதிகளும் எல்லாவித சவுகரியங்களும் அமைத்து விட்டார்கள்.

* * *

இவ்விதம் வனம் செல்ல எல்லா ஏற்பாடுகளும் பரதன் சொல்லியபடி நடந்து கொண்டிருந்தாலும், வசிஷ்டரும் மந்திரிகளும் முறைப்படி பெரிய சபை கூட்டினுர்கள். கூட்டி பரதனுடைய மாளிகைக்குத் தூதர்களை அனுப்பி அவனை அழைத்தார்கள். அழைப்புக்கு வந்த பரிவாரத்தின் நாத கோஷங்களைக் கேட்டு பரதன் மிகவும் வருந்தினுன். " அதை நிறுத்துங்கள் " என்று சொல்லியனுப்பி விட்டு, தம்பி சத்ருக்னனைப் பார்த்து, " ராஜ்யம் வேண்டாம் என்று சொல்லிவிட்ட என்னை இவ்விதம் துன்புறுத்துகிருர்களே, தாய் செய்த சூழ்ச்சியின் பயனைப் பார்! இந்தப் பழியைச் சுமக்க என்னைத் தனியே விட்டு விட்டு, தந்தை தசரதர் சுவர்க்கம் போய் விட்டாரே. இந்த ராஜ்யம் அரசனில்லாமல் தவிக்கிறது. மாலுமியில்லாத கப்பலைப் போல் அலைந்து ஆடுகிறது " என்று சொல்லித் துக்கப்பட்டான்.

களங்கமற்ற பரதன் வருகிருன் என்று மிக்க ஆவலுடனும் சந்தோஷ ஆரவாரத்துடனும் சபையில் எல்லாரும் வாயிலைப் பார்த்தவண்ணமாக இருந்தார்கள். சந்திரோதயமானுற்போல் பரதன் சபையில் பிரவேசித்தான். கூடியிருந்த பெரியோர்களை நமஸ்கரித்து, பரதன் தனது ஆசனத்தில் போய் அமர்ந்தான்.

"மேன்மை பெற்ற மகாராஜாவான தந்தையும் உங்கள் சகோதரன் ராமசந்திரனும் உங்களுக்கென்று தந்திருக்கும் ராஜ்யத்தை ஒப்புக் கொண்டு முறைப்படி எங்களை ரட்சிப்பீர்களாக" என்று வசிஷ்டர் சொன்னதைக் கேட்டதும், பரதன் உள்ளம் ராமனிருக்குமிடம் சென்று விட்டது. அவன் கண்களினின்று கண்ணீர் பெருகிற்று.

வாலிபனுன பரதன் சபை நடுவில் உரக்க அழுது விட்டு வசிஷ்டரைப் பார்த்து நிந்தித்துப் பேசினுன் :

" நான் நல்ல முறையில் வளர்க்கப் பட்டவன். குலத்துக்குரிய பண்பாட்டையும் பெற்றவன். எனக்கு உரிமையற்ற பொருளை நான் எப்படி அபகரிப்பேன்? தகாத காரியத்தைச் செய்யச் சொல்லுகிறீர்களே, இது வியப்பாக இருக்கிறது. தசரதனுடைய புத்திரன் ஒருவன் இதைச் செய்ய ஒப்புக் கொள்ளுவானு? இந்த ராஜ்யம் ராமனுடையது, மூத்தவன், மேலானவன், தர்மாத்மா, திலீபன் நஹுஷன் ஆகியவர்களுக்குச் சமானமானவன். அவனல்லவோ இந்த ராஜ்யத்துக்கு உரிய அரசன்? ஆரியனுக்குத் தகாத ஒரு காரியத்தை என்னைச் செய்யச் சொல்லுவது சரியல்ல. இங்கிருந்து வனத்திலிருக்கும் ராமனுக்குக் கை கூப்பி வணங்குகிறேன். அவனே அரசன், அவனே அரசனுகத் தக்கவன், நானல்ல!"

இந்தப் பேச்சைக் கேட்ட சபையோர் இவனல்லவோ பெருந்தகை என்று ஆனந்தக் கண்ணீர் சொரிந்தார்கள்.

மீண்டும் பரதன் சொன்னுன் : "அரசனுன ராமனை என் பேச்சால் சம்மதிக்கும்படி செய்ய முடியா விட்டால் நான் அங்கேயே வனத்திலிருந்து தவமிருப்பேன். நீங்கள் பெரியோர்கள் எல்லாரும் எப்படியோ சகல உபாயங்களையும் உபயோகித்து பலவந்தமாகவேனும் ராமனை அயோத்திக்குக் கொண்டு வந்து பட்டம் சூட்ட வேண்டியது உங்கள் கடமை."

இப்படிச் சொல்லிவிட்டு அருகிலிருந்த சுமந்திரனைப் பார்த்து வனம் போவதற்குத் துரிதமாக எல்லா ஏற்பாடுகளும் செய்யும்படி கட்டளையிட்டான். நகரமெல்லாம் ஆரவாரித்து மகிழ்ந்தது. ராமன் வந்தே விட்டான் என்கிற உணர்ச்சிபெற்று மகிழ்ந்தார்கள். பரதன் எப்படியாவது ராமனை அழைத்து வருவான் என்று நம்பினுர்கள்.



# எல்லாம் கோடிட்டவை?



ஆம்...எமது கோடிட்ட துணிகளால் நாங்களே பெருமித மடைகிறோம். சகல ரகங்களையும் உங்கள் வாடிக்கைக் கடையில் காணுங்கள்.



## காலிகோ ஷர்ட்டிங்





தயாரிப்பவர்கள் :

காலிகோ மில்ஸ், அஹமதாபாத்



SHILPI CA/ 116



# கோகிலா

ரமணலால் வஸந்தலால் தேசாய்

மொழிபெயர்ப்பு : ரா. வீ

## 26. தந்தையும் தனயனும்

பிராணலாலின் சொல்லைக் கேட்ட ஜகதீஷ் சற்று நேரம் திகைத்துப் போனான். இதென்னடா இது. வம்பாக இருக்கிறது? மொட்டைத் தாதன் குட்டையில் விழுந்தான் என்ற கதையாகப் பேசினால் என்ன பதில் சொல்வது என்று சிந்தனையில் ஆழ்ந்தான். அவன் முகத்தில் ஆச்சரியக்குறி தாண்டவமாட மௌனம் சாதித்து விடவே, பிராணலாலே பேச்சைத் தொடர்ந்தார். "எசமானருக்கு உங்கள் மீது கருணை பிறந்திருக்கிறது, தெரியும் அல்லவா?" என்றார்.

தமது எசமானரின் சுபாவம் எப்பொழுதுமே எளியவர்களிடத்தில் கருணை புரிவதுதான் என்பதைப் பிராணலாலினால் மறக்க முடியவில்லை. செய் நன்றி மறக்காத அவர், ஜகதீஷின் உள்ளத்திலும் அவ்வெண்ணத்தைப் படிய வைக்க முயன்றார். அவரது அந்த முயற்சியில் என்ன தவறு?

"தாங்கள் சொல்லத்தான் தெரிந்து கொண்டேன். ஆனால் எதற்காகக் கருணை பிறந்திருக்கிறது என்பதைத்தான் புரிந்துகொள்ள முடியவில்லை!" என்றான் ஜகதீஷ்.

"மிஸ்டர்! உங்களுக்குத் தெரிய நியாயம் இல்லைதான். இதற்காக உங்கள் நண்பர் எவ்வளவு முயற்சி எடுத்துக் கொண்டிருக்கிறார், தெரியுமா?" என்று சிரித்தவாறே கேட்டார் பிராணலால்.

"எனக்கு எதுவுமே தெரியாது!"

"எதுவுமே தெரியாதா? என்ன, மிஸ்டர்! நாங்கள் ஒரு பத்திரிகை ஆரம்பிப்பதாக இருக்கிறோமே, அதுகூடத் தெரியாதா?" என்று ஆச்சரியத்துடன் கேட்டார் பிராணலால்.

"ஊஹூம்!"

"என்ன மிஸ்டர் இது! எங்கள் எசமானர் கருணை கூர்ந்து பத்திரிகை நடத்தும் பொறுப்பை உங்களிடம் ஒப்படைக்க விருக்கிறார். தெரியாது என்கிறீர்களே!"

"என்ன செய்வது? தெரியவில்லையே!"

"சரி, இப்பொழுதாவது தெரிந்து கொள்ளுங்கள். அப்புறம் உங்கள் சம்பள விஷயமாகப் பேசி ஒரு முடிவுக்கு வரும் பொறுப்பை எசமானர் என்னிடம் ஒப்படைத்திருக்கிறார்!"

"உங்கள் எசமானருக்கும் உங்களுக்கும் மிக்க நன்றி. ஆனால் இந்தத் தொழிலில் எக்காரணத்தைக் கொண்டும் ஈடுபட வேண்டாம் என்று நான் முன்பே முடிவு கட்டி விட்டேன்!" என்றான் ஜகதீஷ்.

"என்ன?"–வியப்பு மிகுதியில் பிராணலால் வாயைப் பிளந்தார்.

"ஸார்! நான் முன்னால் இந்தத் தொழிலில் தான் இருந்தேன். ஆனால் இத் தொழிலில் உண்மையை விற்று விடும்படியான பல இக்கட்டான கட்டங்கள் வந்து சேருகின்றன. என்னால் அதைப் பொறுக்க முடியவில்லை. அதனால் இந்தத் தொழிலில் இறங்குவதில்லை என்ற தீர்மானத்துடன்..."

"அடாடா! என்ன மனுஷ்யர் ஐயா நீங்கள்? வீண் பேச்சில் பொழுதை வீணாக்குகிறீர்கள்! உங்கள் வேலையைப் பார்த்துக் கொண்டு போவீர்களா? என்னவோ இல்லாத ஊர்க் கதையைப் பேசிக் கொண்டு..."—பிராணலால் கொஞ்சம் கடுமையாகவே வார்த்தைகளை வீசிவிட்டார். அவர் சுபாவமே அப்படி. சிற்சில சமயம் என்ன பேசுகிறோம் என்று புரியாமலே கூடப் பேசுவார். அதனால் யாருமே அவர் பேச்சைத் தப்பர்த்தம் செய்து கொண்டு சிரமப்பட்டது கிடையாது.

ஜகதீஷும் அவர் வார்த்தைகளைக் கேட்டுச் சிரித்தான். நல்ல வேளையாக அவனும் தப்பர்த்தம் எடுத்துக் கொள்ளவில்லை. "ஸார்! எனக்கு வேலை தேவைதான். இல்லை என்று சொல்லவில்லை. ஆனால் வேறு வேலை ஏதாவது இருந்தால் சொல்லுங்கள். இந்தப் பத்திரிகைத் தொழிலைத் தவிர, வேறு எந்த வேலையாயிருந்தாலும் ஏற்கச் சித்தமாயிருக்கிறேன்!" என்றான்.

"சம்பள விஷயத்தில் உங்களுக்கு ஏதாவது ஆட்சேபணை இருக்குமானால் சொல்லுங்கள். அதை நிவர்த்தி செய்து விடலாம். எங்கள் எசமானருடைய சம்பந்தம் உங்களுக்கு ஒரு நாளும் கெடுதலாக முடியாது. இது நிச்சயம். எனவே, நான் சொல்வதைக் கேளுங்கள். ஆட்சேபணை சமாதானத்துக்கு இடம் கொடாதீர்கள்" என்றார் பிராணலால்.

"இது எனக்குத் தெரிந்த விஷயம்தான். ஏனெனில் என் நண்பன் ரமேஷ்தான் தினம் தினம் உங்களைப் பற்றியும் உங்கள் எசமானரைப் பற்றியும் வாயாரப் புகழ்கிறானே!"

"அப்பொழுது நான் சொல்வதைக் கேட்ப தற் கென்ன? பேசாமல் இந்த வேலையை ஏற்றுக் கொள்ளுங்கள்!"

"இதோ பாருங்கள்! மூடி மறைத்துப் பேசுவதில் பயன் இல்லை. எனக்கு ஏற்கெனவே இத்துறையில் எதிர்ப்புக் கொஞ்சம் அதிகம். என்னை நியமித்தால் எனக்கு எதிராகப் பலர் கட்சி கட்டிக் கொண்டு கிளம்பி விடுவார்கள். இப்பொழுதே வெளியில் என்னைப் பற்றிப் பேச்சு ரொம்பவும் அடிபடுகிறது. அதனால் யாராவது கொஞ்சம் பெரிய மனிதர்களாகப் பார்த்து இந்த வேலையை ஒப்படைக்கிறது தான் உங்களுக்கு நல்லது என்பேன்!" என்றான் ஜகதீஷ்.

"இதெல்லாம் உங்களை யார் கேட்டார்கள்? என்னைக் கேட்டால் நீங்களும்தான் பெரிய மனிதர் என்பேன். எதற்காகத் தன்னைத் தானே குறைத்துப் பேசிக் கொள்ளுகிறீர்கள்?" என்றார் பிராணலால். அதே சமயம் சந்திரகாந்த் அறையின் அரைக் கதவைத் திறந்து கொண்டு எட்டிப் பார்த்தான். அவனைப் பார்த்த பிராணலால், "என்ன, சந்திரகாந்த்! வா, வா! இதோ, பார்! இவரோடு கூடத்தான் நீ வேலை செய்ய வேணும். என்ன, தெரிந்ததா?" என்றார்.

சந்திரகாந்த் பிராணலாலுக்கு ஒரே பிள்ளை. அவனை ஆலைக்கு அழைத்து வரச் சொல்லி ஆள் அனுப்பியிருந்தார். தந்தையும் தனயனுமாகிலும் பிராணலாலுக்கும் சந்திர காந்துக்கு மிடையே குண வேறுபாடுகள் ஏகமாக இருந்தன. சந்திரகாந்தின் சுபாவத்தைக் கவனித்தால் தந்தையின் பெயரை எடுத்து விடுவான் என்று இரு பொருள்படத்தான் யாருமே பேசுவர். ஒரே பிள்ளையானதால் பிராணலால் அவனை மிகவும் இடமும் செல்லமும் கொடுத்து வளர்த்திருந்தார். அதனால் அளவுக்கு மீறிய தான்தோன்றித்தனம் அவனிடம் ஊறி விட்டது. எனவே, அவர் கனவு கண்டு கொண்டிருந்ததுபோல் அவன் உருப்படியான பிள்ளையாகத் திகழவில்லை. அவன் நாளைக்கு நாலு தடவை நலுங்கிக் கசங்காத நல்லாடைகள் உடுத்துவான்; ஆறு தடவைகளுக்குக் குறையாமல் தேநீர் அருந்துவான். காலை வேளைகளில் கண் மூடி இரண்டு மணி நேரம் இளைப்பாறுவதையும் மாலை வேளைகளில் காற்றாட உலாவப் போய் வருவதையும் அவன் தன் தினசரி வழக்கங்களில் ஒன்றாக்கிக் கொண்டிருந்தான். வீட்டுக்குத் திரும்பி வரும் விஷயத்தில் அவனுக்கு நேரம் பொழுது கிடையாது. பத்து, பதினொன்று, பன்னிரண்டு, ஒன்று என்று கூடச் சில நாட்கள் மணி ஓடி விடும். சந்திர காந்துக்காகச் சற்று மெதுவாகத்தான் போவோமே என்று அந்தப் பாழும் கடிகாரத்துக்குத் தோன்றுவதில்லை. 'தான் உண்டு, தன் வேலை உண்டு' என்று அது, தன்பாட்டுக்குப் பிறர் சௌகரியம் பாராமல் பொழுதைப் போக்கிக் கொண்டிருக்கும்.

இரவு வேளைகளில் தன்னந் தனியாக வர வேண்டி யிருக்கிறதே என்று சந்திரகாந்த் அஞ்சிச் சாவதில்லை. சினிமாக் கம்பெனிக் காரர்கள், நாடகக் கழகத்தார்கள், நடிகர்கள், நடிகைகள் எல்லோரையும் அவன் நன்கு அறிந்திருந்தான். அவர்களுடன் நட்புரிமை பாராட்டுவதிலேயே அவன் தன் பொழுதைப் போக்கி வந்தான் என்று சொன்னால்கூடத் தவறாகாது. நாடகக் கழகங்களிலோ, சினிமாக் கம்பெனிகளிலோ சேர்ந்து விடவேண்டும் என்றுகூட அவனுக்கு ஆசையாக இருந்தது. வெளி வியாபகம் அதிகம் ஆக ஆக அவன் செலவுகளும் கட்டுக்கு மீறிப்போய் விட்டன. பிராணலால் தம் விஷயத்தில் ஒரு வருஷத்துக்குச் செலவு செய்யும் தொகை அவன் விஷயத்தில் ஒரு மாதத்துக்குக் கூடப் பற்றும் பற்றாததாக இருந்தது.

நாளடைவில் அவனிடம் இல்லாத துர்ப் பழக்கங்களும் தீய குணங்களும் படிந்தன. அவற்றுக்கு ஆக்கம் அளிக்கக் கூடிய பல சாதனங்களும் இருக்கவே, அவை நாள் தோறும் வளர்ந்தன. அவை வளர்ந்ததனால் செல்வாக்குக் குறைந்தது. செல்வாக்குக் குறையவே நல்லோர் சகவாசத்துக்கு மூடு விழாவும் தீயோர் சகவாசத்துக்குத் துவக்க விழாவும் ஏக காலத்தில் நடந்தன. எல்லாமாகச் சேர்ந்து கொண்டு சந்திர காந்தைத் தீமையே உருவானவனாக்கி விட்டன.

ஆரம்பத்தில் அன்பு காரணமாகத் தனயனின் ஒவ்வொரு செய்கையிலும் தந்தை கெட்டிக்காரத் தனத்தையே கண்டார். அவனுடைய கெட்டிக்காரத்தனம் நல்ல காரியங்களில் உபயோகப்படாமற் போன பொழுதிலும் தந்தையின் பிள்ளைப் பாசம் நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டே போயிற்று. குற்றங் காணவேண்டிய இடத்திலும் குணத்தையே கண்டது; தனயன் செய்யும் தவறுகளைத் தடுத்து நிறுத்துவதற்குப் பதிலாக இடம் கொடுத்துப் பாதுகாப்பு அளித்தது. 'சிறு பிள்ளைதானே? தவறுவது யாருக்குமே சகஜம். நாளடைவில், தானாகச் சீர்திருந்தி விடுவான். இந்தத் தடவை போனால் போகிறான்!' என்று மன்னித்து விடும் மாண்பைத் தான் அவர் பெற்றிருந்தார்.

யாராவது சந்திரகாந்தைப் பற்றிக் கோள் சொல்லிக் கொண்டு வந்தால் கூடப் பிராண லாலுக்குப் பிடிப்பதில்லை. உலகம் வேண்டுமென்றே தம் பிள்ளையிடம் குறை கண்டு குரோதம் பாராட்டுகிறது என்று எண்ணுவார்; அவர்கள் பேச்சில் அசிரத்தை காட்டுவார். அதன் பலனாக அவனுடைய குணக் கேடுகள் வளர்ந்தன. தீய குணங்கள் தனயனிடம் மலையாக வளர்ந்த பின்னர்தான் பிறர் பேச்சில் அசிரத்தை காட்டிய தந்தைக்குப் புத்தி வந்தது. இவ்வளவு நாட்கள் இவற்றைப் பொருட் படுத்தாமல் அஜாக்கிரதையாக இருந்து விட்டோமே என்ற பச்சாத்தாப உணர்ச்சியும் ஏற்பட்டது. ஆனால் அப்பொழுது அவனிடம் பெருகி

# நீங்கள் இன்று புரோடெக்ஸ் உபயோகித்தீர்களா?

நீங்கள் நாள் முழுதும் புதுமையுடனும்
வாசனையுடனும் இருக்க, உயர்ந்த,
புதிய புரோடெக்ஸ் ஆல்-பர்பஸ் டாய்லட்
பவுடர். மென்மையும், நறுமணமும்
சேர்ந்த புரோடெக்ஸ் குடும்ப முழுதுக்கும்
வெப்பத்தில் குளுமையும்
இனிமையும் தருகிறது.



ஸ்நானத்துக்குப் பின்
வாசனைப் பூஷணம். ஈரத்தை
உறிஞ்சி புதுமை தருகிறது.



குளுமை! குதூகலம்!
கோடையின் கொடுமையில்



நேர்த்தியும் மென்மை!
யும்-குழந்தைக்கு ஏற்றது.



மிக எடுப்பானது
உங்கள் வதனத்தை அழகு
படுத்தும் பவுடர்.




# புரோடெக்ஸ் ஆல் பர்பஸ் டாய்லட் பவுடர்



மண்டையைப் பிளக்கும் தலைவலியா?

# ஸாரிடன்

உட்கொள்ளுங்கள்

இப்பொழுது புதிய, சுகாதார முறையிலுள்ள
மைக்கா காகித பாக்கிங்கில் கிடைக்கும்

ஒரு வில்லை



விட்ட கேடுகள் களையக் கூடிய நிலைமையில் இருந்தால் அல்லவா? எனவே, அதிருப்தியையும் ஆங்காரத்தையும் காட்டி அவனைக் கண்காணிக்கத் தொடங்கினார். ஆயினும் அவர் முயற்சி பலனளிக்கவில்லை.

தகப்பனார் தடுக்கத் தடுக்கச் சந்திரகாந்தின் பிடிவாதம் அதிகரித்தது. மேலும் தீய செயல்கள் புரியத் தலைப்பட்டான். அதனால் பிராணலால் வெளிப்படையாகவே அவனைப் பற்றிப் புகார் கூறினார்; கடிந்தார். எப்படியாவது அவன் நல் வழியில் திருந்தினால் சரி என்று எண்ணித் தமக்குத் தெரிந்த சாம, தான, பேத, தண்டங்களைக் கையாண்டார்.

ஏதாவது வேலை கற்றுக் கொடுக்கும் நோக்கத்துடன் கொஞ்ச நாட்கள் தமது மேற்பார்வையிலே அவனை வைத்துக் கொண்டார். கொஞ்ச நாட்கள் ஏற்றுமதி இறக்குமதி இலாக்காவில் போட்டுப் பார்த்தார். அப்புறம் சில நாட்கள் ரமேஷின் மேற்பார்வையில் விட்டு வைத்தார். ஆனால் ஓரிடத்திலும் அவன் மனமொன்றி வேலை செய்யவில்லை. தறிதலையாகத் தன் இச்சைப்படி திரிபவனுக்கு எங்கேயாவது வேலையில் மனம் செல்வது உண்டா? அதன் பலனாக அவனுடைய ஒவ்வொரு காரியமும் பிராணலாலுக்குத் தொந்தரவாகவே முடிந்தது. கடைசியில் அவனே அவருக்கு ஒரு பெரிய பிரச்னையாகி விட்டான்.

பத்திரிகை ஆரம்பிப்பது என்ற பேச்சு எழவே, பிராணலால் அவனை ஜகதீஷுடன் கூடச் சேர்த்து விட்டுப் பார்க்கலாம் என்று தீர்மானித்தார். அதற்காகவேதான் அவர் அவனை அங்கே வரச் சொல்லியிருந்தார். ஜகதீஷ் தங்கு தடையின்றி உடனே அந்த வேலையை ஒப்புக்கொண்டு விடுவான் என்றே அவர் எண்ணினார். 'ஒரு வேளை ஜகதீஷ் கொஞ்சம் நல்ல சம்பளமாக எதிர் பார்ப்பான். அப்பொழுது அவன் விரும்பும் தொகை நம்மால் கிடைப்பதாகப் பெயர் பண்ணி விட்டால், அவன் நம் செயலுக்கு நன்றி பாராட்டுவான். அப்புறம் நன்றிக் கடன் பட்ட பின் அவன் நம் சொல்லைக் கேட்டுத்தானே ஆக வேண்டும்?' என்றும் மனக்கோட்டை கட்டிக் கொண்டிருந்தார்.

ஆனால் ஜகதீஷ் பத்திரிகை நடத்தும் பொறுப்பைத் தன்னால் ஏற்றுக் கொள்ள முடியாது என்று தீர்மானமாகவும் தெளிவாகவும் மறுத்து விட்டான். நம் நாட்டிலே காந்தி அடிகள் நாட்டுப் பற்றை மட்டுமா புது உருவம் கொடுத்து வளர்த்தார்? பத்திரிகைத் தொழிலையும் அல்லவா புதிய ஆதரிசத்தின் அடிப்படையில் நிறுவி விட்டார்? நீதியையும் நேர்மையையும் கடைப்பிடிக்கும் விஷயத்தில் பத்திரிகையாளரின் பொறுப்பு எத்தகையது என்பதையும் அல்லவா வரையறுத்து விட்டார்? அவர் வரையறுத்த அந்தக் கொள்கையைக் கடைப்பிடிக்க முடியும் என்று தோன்றாத வரையில் அந்தத் தொழிலைப் பஹிஷ்கரித்தே தீருவது என்று ஜகதீஷ் முடிவு கட்டி விட்டான். அதன் காரணமாகப் பிராணலால் கொண்டிருந்த நம்பிக்கையில் மண் விழுந்தது.

இதே சமயம் கீழே பேரிரைச்சல் கேட்டது; ஏதோ கலவரத்துக்கு அடிகோலப்படுவது போன்ற கூக்குரல் எழுந்தது.










ஆலைக்கு வெளியே சுற்றிக் கொண்டிருந்த தொழிலாளிகளின் கும்பல் திடீரென்று ஆலைக் காம்பவுண்டுக்குள் நுழைந்து விட்டது. கலவரத்துக்குக் காரணம் என்னவென்று தெரியவில்லை. ஆனால் மனேஜர், சாந்திப்பிரியன், சுகபால் மூவரும் மோட்டாரிலிருந்து இறங்கிக் கூட்டத்தைக் கலைக்க முயன்று கொண்டிருப்பதுமட்டும் தெரிந்தது. மோட்டாரைச் சுற்றி ஏகமாகக் கூட்டம் கூடியிருந்தது. ஒருவன் மூச்சு வாங்க ஓடி வந்து, "எசமான்! குலேமா அம்மாவின் கார்மீது தொழிலாளிகள் கல் எறிகிறார்கள். மோட்டாரை மேலே நகரவொட்டாமல் தடுத்து நிறுத்திக் கொண்டிருக்கிறார்கள்!" என்று சொன்னான்.

அதைக் கேட்டதும் ஜகதீஷ் சட்டென்று எழுந்து நின்றான். "நீங்கள் உட்காருங்கள். நான் போகாமல் காரியம் நடக்காது போலிருக்கிறது!" என்று கூறிய பிராணலால் தமக்கே உரிய வேகத்தில் 'கிடு கிடு' வென்று கீழே இறங்கி ஓடினார்.

சந்திரகாந்த் எழுந்து அறைக்குள் இங்கும் அங்கும் நடை போடலானான். அடிக்கொரு தடவை முன்பின் மிகவும் தெரிந்தவன் போல் ஜகதீஷைப் பார்த்தான். பிறகு சிறிது நேரம் கழித்து, "ஏன் மிஸ்டர்! சிகரெட் பிடிக்கிறீர்களா?" என்று கேட்டான்.

ஜகதீஷ் வேண்டாம் என்று மறுத்தான்.

"எங்கள் அப்பா மிக உயர்ந்த சிகரெட் தான் பிடிப்பது வழக்கம். உங்களுக்கு வேண்டுமானால் ஒன்று தருகிறேன். பிடித்துப் பார்த்து விட்டு அப்புறம் சொல்லுங்கள்!" என்று சொன்ன சந்திரகாந்த் பிராணலாலின் மேஜைமீதிருந்த சாவிக் கொத்தை எடுத்துக் கொண்டான். பிறகு மேஜையின் இரண்டு டிராயர்களையும் திறந்தான். ஆனால் அதில் சிகரெட் கிடைக்கவில்லை. அதனால் அவன் ஜகதீஷை ஒரு முறை ஏற இறங்கப் பார்த்து விட்டு, "இந்தக் கிழம் சிகரெட்டுகளைக் கூட இரும்புப் பெட்டியில் வைத்துப் பூட்டத் தொடங்கிவிட்டது போலிருக்கிறது!" என்று கூறினான். அப்பொழுது அவன் குரலில் அலுப்பும் சலிப்பும் தாண்டவமாடின.

"வேண்டாம், சார்! எனக்காக நீங்கள் வீண் சிரமம் எடுத்துக் கொள்ள வேண்டாம். ஏனெனில் நான் சிகரெட் பிடிப்பதேயில்லை!" என்றான் ஜகதீஷ்.

அதற்குள் வெளியே குழப்பமும் கூச்சலும் மேலும் அதிகரித்து விட்டன. ஜகதீஷ் எழுந்து மொட்டை மாடிப் பக்கம் சென்றான். மோட்டார் மெதுவாகக் காரியாலயத்தை நோக்கி முன்னேறி வந்து கொண்டிருந்தது. மோட்டாருக்குப் பின்னால் பாதுகாப்பை உத்தேசித்து மூன்று சிந்துக் காவலர்கள் தோட்டா நிரப்பிய துப்பாக்கியைத் தூக்கிப் பிடித்த வண்ணம் வந்து கொண்டிருந்தனர். அவர்களுக்குப் பின்னால் நின்ற கூட்டம் முண்டியடித்து முன்னேற முயற்சித்துக் கொண்டிருந்தது. சுகபாலும் மனேஜரும் கும்பலை

முன் வர வொட்டாமல் தடுத்து நிறுத்த முயன்று கொண்டிருந்தனர். அதே சமயம், "யாராவது துணிச்சலுடன் முன்னேறினால், அப்புறம் அவன் உயிர் அவனுக்கு இல்லை. ஆமாம், சொல்லி விட்டேன்!" என்று பிராணலால் உரக்க அதட்டிக் கொண்டிருந்த குரல் கேட்டது.

"இப்படி யெல்லாம் குறும்பு செய்யாதீர்கள் என்று நான் உங்களுக்கு எத்தனை தடவை படித்துப் படித்துச் சொல்லி யிருக்கிறேன்? ஆனால் நீங்கள் காதில் வாங்கிக் கொண்டால்தானே? இம்மாதிரிச் செய்கைகளி லெல்லாம் இறங்கினால் உங்கள் கட்சிதான் பலவீனம் அடையும். எனக்கு என்ன?" என்று மனோஹர் தொழிலாளிகளுக்கு உபதேசிக்கத் தொடங்கினான். அவன் அப்படிப் பேசியபொழுது ஒரு புறத்தில் சிலர் சேர்ந்து கெக்கெலி கொட்டி நகைத்தனர்.

அதைக் கண்ட சுகபாலுக்கு ஆத்திரம் எல்லை மீறி வந்தது. அதனால் "மோட்டார் மேல் கல் எறியும் பொழுது உங்களுக்கு வெட்கமா யில்லை? எங்கள்' சொல்லைக் கேட்காவிட்டால் இப்பொழுதே நாங்கள் உங்கள் கட்சியை விட்டுவிடுவோம்!" என்று நடுவில் புகுந்து உரக்கக் கூவினான். அடுத்த கணம் தொழிலாளர்கள் கூட்டத்தின் ஒரு புறத்திலிருந்து ஒரு கல் சுகபாலின் காலடியில் வந்து விழுந்தது. இன்னொரு கல் மோட்டாரின் கூரையைப் பதம் பார்த்தது. அதைக் கண்ட பிராணலால் நறநற வென்று பற்களைக் கடித்தார். சிந்துச் சிப்பாய்கள் துப்பாக்கியை இன்னும் உயரத் தூக்கிப்பிடித்துக் கூட்டத்தை அதட்டிப் பயமுறுத்திப் பார்த்தனர். ஆனால் கூட்டம் அதற்கெல்லாம் அஞ்சிச் சாகவில்லை. நாலடிகள் முன்னேறி வந்து விட்டது. அதே சமயம் கூட்டத்தைக் கீறிக் கொண்டு ஜுகல் கிஷோர் ஆவேசத்துடன் முன்னே வந்தான். முன்னேறிக் கொண்டிருந்த நான்கைந்து தொழிலாளர்களை முழங்கை முட்டினால் பலமாக ஒரு இடி இடித்துப் பின் நகர்த்தினான். "ஜாக்கிரதை! யாராவது முன்னேறி வந்தால் வாலை ஒட்ட நறுக்கி விடுவேன்!" என்று கூறி முகத்தைக் கடு கடு வென்று வைத்துக் கொண்டு கம்பீரமே உருவாக நின்றான்.

ஜுகல் கிஷோரின் ஆவேசம் ததும்பும் அடக்கு முறைச் சொற்களைக் கேட்ட தொழிலாளிகள் பிரமித்துப் பின் நகர்ந்து நின்றனர். ஒரு கணம் என்ன செய்வது என்று தெரியாமல் திகைத்தும் நின்றனர்.

மொட்டை மாடியில் நின்ற வண்ணம் இந்தக் காட்சியைப் பார்த்துக்கொண்டு நின்ற ஜகதீஷை அணுகிச் சந்திரகாந்த் தோள் மீது கை வைத்தான். ஜகதீஷ் சட்டென்று துணுக்குற்றுத் திரும்பினான்.

"ஸார்! இன்று நீங்கள் போகலாம். உங்கள் காரியம் இன்று முடியாது. இன்னொரு நாள் பார்த்துக் கொள்ளலாம். அப்பா இப்பொழுதுதான் சொல்லி யனுப்பி யிருக்



ராஜாஜி அவர்களின் பேத்தியும், சென்னை கல்வி இலாக்கா டெபுடி இன்ஸ்பெக்டர் ஸ்ரீ வி. கே. சேஷாத்திரி அவர்களின் புதல்வியுமான செல்வி லீலாவுக்கும், தேவகோட்டை நகரசபை அங்கத்தினரும், பிரபல வக்கீலுமான ஸ்ரீ எஸ். சீனிவாச அய்யங்கார் அவர்களின் புதல்வன் செல்வன் எஸ். பார்த்தசாரதிக்கும் சென்ற அக்டோபர் 28-ம் தேதி சென்னையில் வெகு சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. வாழ்க புதுமணத்தம்பதிகள்!

கிறார்!" என்று கூறினான் சந்திரகாந்த் அவனைப் பார்த்து.

சந்திரகாந்திடம் இச் செய்தியை அவன் தந்தை எப்படிச் சொல்லியிருப்பார் என்பது ஜகதீஷுக்குச் சரியாக விளங்கவில்லை. பிராணலாலோ கீழே போயிருந்தார். அதனால் இவன் இங்கிருந்த வண்ணமே ஒரு வேளை கதை கட்டி விட்டிருப்பானோ என்று ஜகதீஷ் எண்ணினான். இருந்தாலும் அவன் சட்டென்று அப்படித்தான் என்று முடிவு கட்டிவிட முடியாதல்லவா?

ஜகதீஷுக்கு மறுபடியும் பத்திரிகைத் தொழிலில் ஈடுபடச் சிறிதும் இஷ்டமில்லை. வேறு ஏதாவது வேலைக்குக் கேட்டுப் பார்க்கலாம் என்றாலோ, அது அன்றே முடியக் கூடிய காரியமாகத் தோன்றவில்லை. அதனால் நாம் இப்பொழுது வீட்டுக்குப் போய் அப்புறம் வந்து பார்த்துக்கொண்டால் என்ன என்று எண்ணினான். அதற்கேற்றாற் போல் சந்திரகாந்தும் அவனை அவசரப்படுத்தினான். ஜகதீஷை அங்கிருந்து சீக்கிரம் போய் விடுமாறு அவன் சொன்ன இன்னொரு காரணமும் அந்த நேரத்துக்குச் சரியாக ஒத்துக் கொண்டது. "வெளியே குழப்பம் வர வர அதிகமாகிக் கொண்டிருக்கிறது. இரவு வரை கூட நீடிக்குமோ என்று தோன்றுகிறது. அதற்குப் பின் பிரமுகர்கள் இன்றே கூடி வேலை நிறுத்தம் சம்பந்தமாக ஒரு முடிவுக்கு வருவதாக இருக்கிறார்கள். அதனால் நீங்கள் காத்திருந்து பிரயோஜனம் இல்லையென்று தான் எனக்குத் தோன்றுகிறது. நீங்கள் போவதாயிருந்தால், நான் பின்புறத்துக் கதவைத் திறந்துவிடச் சொல்கிறேன். அப்பா வந்ததும் நீங்கள் வெகு நேரம் காத்திருந்து பார்த்ததாகவும் அப்புறம் போய் விட்டதாகவும் சொல்லி விடுகிறேன்!" என்றான்.

ஜகதீஷுக்குக் கீழே நடந்து கொண்டிருக்கும் குழப்பக் காட்சிகளைக் காண வேண்டும் என்ற ஆசையில்லை. மோட்டார் பங்களாவுக்கு அருகில் வந்து நின்றதையும் அதிலிருந்து குஸுமாவும் சாந்திப் பிரியனும் சௌக்கியமாக இறங்கியதையும் அவன் தன் கண்களாலேயே கண்டான். அதனால் பின்புற வழியாகப் போய் விடலாம் என்று சந்திரகாந்த் சொன்ன ஆலோசனை அவனுக்குப் பிடித்தது; சரியென்றும் பட்டது. எனவே, அவன் புறப்படச் சம்மதித்தான்.

சந்திரகாந்த் அவனை அழைத்துக் கொண்டு பின்புற வாசற் பக்கம் சென்றான். ஆலைக்குள் நுழைவதற்கு முக்கியமான தலைவாசலைத் தவிர வேறு ஒரு வாசலும் இருந்தது. ஆலை மதில் சுவரை ஒட்டினாற்போல் காரியாலயக் கட்டிடம் ஒன்று புதிதாக ஆரம்பிக்கப்பட்டுப் பூர்த்தியாகாமல் அரை குறையாக இருந்தது. அந்தக் கட்டிடத்துக்கென்று வைக்கப்பட்ட வாசல் அது. அவ்வழியே பொதுச் சாலைக்குப் போகலாம்; வரலாம். ஆனால் அந்தக் கதவு பெரும்பாலும் பூட்டப்பட்டேதான் இருந்தது. தேவையான சந்தர்ப்பங்களில் அதைத் திறந்து உபயோகப் படுத்திக் கொள்வதும் உண்டு.

வெளியிலே நடந்து கொண்டிருந்த குழப்பம் காரணமாகப் பிராணலாலுடன் வந்த பிரமுகரை அந்த வழியாக வெளியே அனுப்ப வேண்டும் என்று யாராவது சொன்னால் அதில் வியப்புறுவதற்கோ ஆட்சேபணை செய்வதற்கோ இடம் ஏது? அதுவும் அவரை வழியனுப்பப் பிராண லாலின் பிள்ளையே நேரில் வந்திருக்கும் பொழுது யார் வாயைத் திறக்கப் போகிறார்கள்? அதனால் காவலாளி பதில் பேசாமல் சாவியை எடுத்து வந்து கதவைத் திறந்து விட்டான். அப்பொழுது அந்த வாசலில், வேலை நிறுத்தத்தில் பங்கு எடுத்துக் கொள்ள விரும்பாத, விரும்பியும் இயலாத சில தொழிலாளர்கள் மட்டும் நின்று கொண்டிருந்தார்கள்.

அவ்வழியே வெளியே வந்து கொண்டிருந்த ஜகதீஷ் தூரத்திலிருந்த தலைவாசல் வழியே ஒரு பெருங் கும்பல் ஆலைக்குள் நுழைவதைக் கண்டான்.

"கலவரம் குறையுமா, வளருமா?" என்ற கேள்வி ஜகதீஷின் உள்ளத்தில் எழுந்தது. அந்தக் கேள்வி இருதயத்தைக் குடைய அவன் சாலையில் நடக்கலானான். சிறிது தூரம் சென்ற அவன் தற்செயலாகப் பின்புறம் திரும்பிப் பார்த்தான். அப்பொழுது யாரோ ஒருவன் வேகமாகச் சைக்கிளில் எதிர்த் திசையில் போய்க் கொண்டிருப்பது தெரிந்தது. அந்த ஆசாமி யார் என்பதும் அவனுக்குப் புரியாமல் இல்லை. அவன் பிராணலாலின் பிள்ளை சந்திரகாந்தாயிருந்தால், அவனுக்கு என்ன வந்து விட்டது? **(தொடரும்)**



## நீங்கள் இன்று உங்கள் பற்களை

# மக்ளீன்

## செய்தீர்களா?



ஆம் நான் இன்று என் பற்களை மக்ளீன்ஸ் பற்பசையைக் கொண்டு சுத்தம் செய்தேன். வசீகரம் வாய்ந்த புன்னகைக்கு ஆரோக்கியமான பற்கள் அத்தியாவசியம் ஆகையால் தான் நான் பிரிதி தினமும் இரு முறை எனது பற்களை மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசையைக்கொண்டு சுத்தம் செய்கிறேன். மக்ளீன்ஸிலுள்ள ஒரு தனிப்பட்ட பொருள் பற்களின் மேல் படிந்துள்ள மங்கலான பூச்சை நீக்கி பற்களுக்கு இயற்கையாக ஒளிரும் வெண்மையைக் கொணர்கிறது. அதிக வெண்மையான பற்கள், கெட்டியான ஈரு மற்றும் நறுமணமுள்ள சுவாசத்திற்கு மக்ளீன்ஸ் பற்பசையையே உபயோகியுங்கள்.

"...மக்ளீன்ஸ் பற்பசை இப்பொழுது கடைகளில் விற்கப்படும் எல்லா ரகங்களை விட மிக உயர்ந்தது."




MTY-39-TAM

க்ளோரோபில் சேர்ந்தும் கிடைக்கும்




# போட்டோ தொழிலில் 60 வருஷ சிறந்த சேவை









**கேவாபான் 33**

பகல் வெளிச்சத்திற்கும் செயற்கை வெளிச்சத்திற்கும் சிறந்தது இந்த மின்னல்வேக பாங்ரோமாடிக் பிலிம்.

**கேவாகுரோம் 30**

பகல் வெளிச்சத்திற்கு மிகவும் உகந்தது ஆர்தோ குரோமாடிக் பிலிம்.

இவை விபரங்களுக்கும் "கேவார்ட்" எக்ஸ்போஷர் கால்குலேட்டருக்கும் கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதவும்:

## *Allied Photographics Limited*

அல்லீட் போட்டோகிராபிக்ஸ் லிமிடெட்

(மெயில் டிபார்ட்மெண்ட்) கஸ்தூரி பில்டிங்ஸ், ஜாம்ஷெட்ஜி டாடா ரோடு, பம்பாய்-1

கிளை ஆபீஸ்கள்: பம்பாய் - கல்கத்தா - மதராஸ் - புது டில்லி



# திரும்பி வந்த உதவி

நா. ராமச்சந்திரன்

கங்காதரனைப் பற்றிப் பேசும்போதெல்லாம் அவருடைய அருமையான குணங்களைப் பற்றி யாருமே சொல்லாமல் இருப்பதில்லை. ஆனால் அவருடைய குணச் சிறப்புகளைப் பேற்றிப் பேசும் புண்ணியவான்கள் எல்லாம் கங்காதரனுடைய உதவிக்கு வருகிறார்களா என்றால் அது தான் கிடையாது. எப்போதும் கஷ்டத்தின் வாயிலிலேயே நின்று கொண்டிருக்கும் அவரைக் கை தூக்கி விட இன்று வரை யாரும் முன் வரவில்லை. சந்தர்ப்பமும் துணை செய்யவில்லை.

நல்ல மன -மிருக்கிறது. செய்ய வேண்டும் என்று துடிப்பு இருக்கிறது. ஆனால் வகைதான் இல்லை கங்காதரனுக்கு. மத்தியதர குடும்பத்தைச் சேர்ந்த அவருக்கு மட்டும் எல்லா வாய்ப்புகளும் கிட்டி விடுமா!

கங்காதரனுக்கு ஒரு பாங்கியில் வேலை. இருபது வருஷம் சர்வீஸ். இருநூறு ரூபாய் சம்பளம்.

மற்றவர்கள் கஷ்டப்பட கங்காதரன் சகிக்கவே மாட்டார். தான் கஷ்டப்படும்போது, "ஐயோ! இப்போது நான் கஷ்டப்படுகிறேனே" என்று எண்ணிக் கொள்ளவும் மாட்டார். 'தனக்கு மிஞ்சித்தான் தானதர்மங்கள்' என்ற சித்தாந்தம் அவர் ஏற்றுக் கொள்ளாத ஒரு கொள்கை.

ஒருநாள் கங்காதரன் இப்படித்தான் ஏதேதோ சிந்தித்துக் கொண்டு மயிலாப்பூர் கடற்கரையில் உலவிக் கொண்டிருந்தார். கவிந்திருந்த வானமும், நீலப்பட்டைப் போல் விரிந்து நின்ற கடலும் ஏதேதோ தத்துவங்களை விளக்கிக் காட்டிக் கொண்டிருப்பது போல அவருக்குத் தோன்றியது. ஆனால் கடல் அலைகள் ஓயாமல் அடித்துக் கொண்டிருக்கும் காரணம் மட்டும் எவ்வளவு சிந்தித்தும் அவருக்கு விளங்கவில்லை. இப்படி நீண்ட நேரம் உட்கார்ந்திருந்தவரின் அமைதியை ஒரு சிறு பையன் கலைத்தான்.

"ஸார்...வணக்கம்......" என்றான் சிறுவன்.

கங்காதரன் அவனைக் கூர்ந்து கவனித்து விட்டு, "நீ திருநாவுக்கரசு அல்லவா......! எங்கே வந்தாய், அரசு!" என்றார் அன்பு ததும்ப.

"என் அதிர்ஷ்டம் இங்கே வந்தேன், ஸார். உங்களைப் பார்க்காவிட்டால் நேராக இன்றிரவே உங்கள் வீட்டுக்கு வருவதாக இருந்தேன். என் நல்ல காலம் உங்களை இங்கே பார்த்தேன்" என்றான் திருநாவுக்கரசு நன்றியறிதலோடு.

"என்ன விசேஷம்! அப்பா சௌக்கியம் தானே! கடிதம் எழுதிக் கொண்டிருக்கிறாரா!" என்று கேட்டார் கங்காதரன்.

"அப்பா சௌக்கியம்தான், சார். இரண்டு மாசமாகப் பணம் அனுப்பவில்லை. ரொம்பவும் கஷ்டப்படுகிறோம். எனக்கும் அம்பிக்கும் பள்ளிக்கூடச் சம்பளம் கட்டவில்லை. பெயரை எடுத்து விடுவோம் என்று ஆசிரியர் பயம் காட்டிக் கொண்டிருக்கிறார். இதைத் தவிர வீட்டு வாடகை, பால், தயிர், மளிகை எல்லோருக்குமே பாக்கி நிற்கிறது. உங்களைத்தான் அம்மா பார்க்கச் சொல்லி ஒரு ஐம்பது ரூபாய் கேட்கச் சொன்னார்கள். நீங்கள்தான்......" பையனின் கண்களில் கண்ணீர் ததும்பியது. பாவம், அவன் விக்கி விக்கிப் பேசினான்.

கங்காதரன் மௌனமாக இருந்தார். திருநாவுக்கரசின் தந்தை மல்லிகேசுவரனை அவர் நீண்ட நாட்களாக அறிவார். இருவரும் இணை பிரியாத நண்பர்கள். வளமாக வாழ்ந்த குடும்பம் இன்று சிதைந்து போய் விட்டதை எண்ணும்போது அவர் இதயம் விம்மியது.

"அரசு! பணத்தை நாளைக்கு அனுப்பி வைக்கிறேன். கவலைப்படாமல் அம்மாவை இருக்கச் சொல்லு. இப்போது நீ வீட்டுக்குத் தானே போக வேண்டும்! வா போகலாம்" என்று அவனை அழைத்துக்கொண்டு எழுந்திருந்தார்.

திருநாவுக்கரசிடம் எட்டணாக் காசு கொடுத்து அவனை பஸ்ஸில் ஏற்றிவிட்டுத் தாம் போகவேண்டிய பஸ்ஸுக்காகக் காத்துக் கொண்டு நின்றார் கங்காதரன். பஸ்ஸில் ஏறிய பிறகு தமக்காகக் காத்துக் கொண்டு நிற்கும் பெருத்த அவமானத்தை அவர் அப்போது உணரவில்லை.

"தண்டையார்ப் பேட்டைக்கு ஒரு டிக்கட்டு" என்று சொல்லிக் கொண்டே பையைத் தடவிய கங்காதரன் திடுக்கிட்டுப் போனார். பையில் ஒன்றே காலணாதான் இருந்தது.

டிக்கட்டை நீட்டிக் கொண்டிருந்த பஸ் கண்டக்டர் நாலரையணா சில்லறைக்காகக் காத்துக் கொண்டிருந்தான்.

கங்காதரனுக்கு ஒன்றும் புரியவில்லை. திருநாவுக்கரசுவுக்கு எட்டணா கொடுத்தவுடன் தமக்கும் காசு கணிசமாக இருக்கும் என்று தான் அவர் எண்ணினார். கணக்கு அவரை ஏமாற்றி விட்டது.

"அப்பா, என்னிடம் சில்லறையில்லை. பஸ்ஸை நிறுத்திக் கொண்டால் இறங்கி விடுகிறேன்" என்றார் கங்காதரன் பணிவாக.

கண்டக்டருக்கு வெற்றி யல்லவா கிட்டிவிட்டது! 'படிச்சவங்கள் எல்லாம் இப்படிச் செய்தால் எப்படி! பஸ்ஸில் ஏறுவதற்கு முன் சில்லறையைப் பார்க்க வேணும். உங்க மாதிரி நாலு பேர் வந்தால் நமக்குப் போதும் போதும் என்றாகி விடுகிறது. சரி. அந்த ஒரு அணாவைக் கொடுத்துவிட்டு அடுத்த 'ஸ்டாப்பில்' இறங்கி விடுங்கோ" என்றான் உரத்த குரலில்.

கண்யமுள்ள நாலு பேருக்கு மத்தியில் கண்டக்டர் இம்மாதிரி சத்தம் போட்டவுடன் கங்காதரனின் தேகம் கூனிக் குறுகி விட்டது. அவமான உணர்ச்சியில் பாதிக்கப் பட்ட அவர் முகம் கருங்கி விட்டது. 'நாம் பேசுவதற்கு இப்போது ஒன்றுமில்லை' என்று தமக்குள் சொல்லிக் கொண்டே ஒரு அணாவைக் கண்டக்டர் கையில்




வைத்துவிட்டு அடுத்த 'ஸ்டாப்'பில் இறங்கிக் கொண்டார் கங்காதரன்.

மயிலாப்பூர் எங்கே; தண்டையார்ப் பேட்டை எங்கே! அவ்வளவு தூரம் நடந்தாக வேண்டும் அவர்! இல்லா விட்டால் பையிலுள்ள மீதிக் காசு காலணாவை வைத்துக் கொண்டு அவர் என்ன செய்ய முடியும்!

மீதிக் காலணா தம்மிடம் இருக்கிறது என்ற நினைவு வந்த போது கொஞ்சம் பெருமையாகக் கூட இருந்தது கங்காதரனுக்கு. அது ஏதோ அவசியத்துக்காகத் தான் தம் பையில் இருக்கிறது என்று எண்ணிக் கொண்டார். அதன் அவசியமும் உடனே வந்து விட்டது!

கண்ணுக்குத் தென்பட்ட பலசரக்குக் கடையில் அந்தக் காலணாவுக்குக் கற்பூரம் வாங்கினார் கங்காதரன். எதிரில் மூச்சந்தியில் பேசும் வம்பு தும்புகளுக்கெல்லாம் சாட்சியாக நின்றிருக்கும் சாட்சி விநாயகருக்கு அந்தக் கற்பூரத்தை ஏற்றி வைத்து விட்டு, "விநாயகப் பெருமானே! ஜனங்கள் எல்லோரும் ஒருவருக்கொருவர் பழகும் போது மரியாதையாகவும் கண்யமாகவும் பழக வேண்டும். இதற்கு நீ ஏதாவது வழி செய்ய மாட்டாயா!" என்று பிரார்த்தித்து விட்டுத் தண்டையார்ப்பேட்டையை நோக்கி வேகமாக நடந்தார்.

★

அந்த மாதம் முழுதும் அமைதியாகத்தான் போய்க் கொண்டிருந்தது. கடைசி நாள் தான் கங்காதரனுக்குச் சோதனை நாளாக அமைந்தது. அவருடைய ஐந்து வயதான கடைசிப் பையனுக்கு நாலைந்து நாளாகக் காய்ச்சலாக இருந்தது; திடீரென்று முற்றி விட்டது. இரண்டு நாட்களாக டாக்டர் வந்து ஊசி போட்டு விட்டுப் போனார். இனிமேல் குணமாகிவிடும் என்று தேறுதல் வேறு சொன்னார். ஆனால் கடைசியில் ஜுரம் அதிகமாகி விட்டது. பையனுக்கு ஆகாரமே இறங்கவில்லை. காலையிலிருந்து ஒரே பட்டினி.

"நான் சொன்னால் கோபம் வரும். அந்தப் பின்னே திருநாவுக்கரசுக்கு ஐம்பது ரூபாய் பணம் கொடுத்தீர்களே. அது இப்போ கிடைக்குமா! நம்ம கிட்டே அந்தப் பணம் இப்போது இருந்தால் வைத்தியம் செய்யலாமல்லவா!" என்றாள் அவர் மனைவி கோதை ஆத்திரமாக.

"கோதை! சம்பந்தா சம்பந்தமில்லாமல் பேசாதே. நம்ம குழந்தைக்கு வியாதி வரும் என்று எனக்கு அப்போது தெரியுமா! கஷ்டப்படுகிறார்களே என்று கொடுத்தேன். அதில் என்ன தப்பு!"

"நீங்க எப்போதும் அப்படித்தான். மத்தவங்க கஷ்டங்களைக் கண்டு இரக்கப்படுவீர்கள். உங்கள் கஷ்டத்தைப் பார்த்து யார் இரக்கப்படுவாங்க! 'இந்தா ரூபாய்' என்று கொடுக்க யார் முன் வருகிறார்கள்!" ஆத்திரத்தில் படபட வென்று பேசிய கோதைக்கு மேல் மூச்சு வாங்கியது.

இவர்கள் இப்படித் தர்க்கமாடிக் கொண்டிருக்கும் போது ஜுரமடித்துக் கொண்டிருக்கும் பையன், "அம்மா அம்மா" என்று முனகிக்கொண்டிருந்தான். அவன் விலாப்புறங்கள் துருத்தி போல் சிறுத்துப் பருத்துக் கொண்டிருந்தன.

"சரி! நேற்றே டாக்டர் ஆரஞ்சுப் பழ ரஸம் கொடுக்கச் சொன்னார். அதையாவது வாங்கிக் கொண்டு வாருங்கள். நான் யாரையாவது பணத்துக்குக் கேட்டுப் பார்க்கிறேன்" என்று சொன்னாள் அவர் மனைவி கோதை.

கையில் ஒரு ரூபாய் பணத்தை எடுத்துக் கொண்டு மனச் சோர்வுடன் கோட்டும் சட்டையுமாக வெளியே கிளம்பினார் கங்காதரன்.

# உயர் பதவிக்கு உகந்தவன்










## ஸெவன் ஓ'க்ளாக் பிளேடுகளால் உங்களுக்கு என்ன அனுகூலம்

பணம் மிச்சமாகிறது. டக்கான தோற்றம்.
க்ஷவரசுகம். பரிசுத்தத்தன்மை.
வெற்றிக்கான மார்க்கம்.

தினசரி ஸெவன் ஓ'க்ளாக் பிளேடுகளால்
க்ஷவரம் செய்துகொள்ளுங்கள்.

# 7 o'clock BLADES





நாதஸ்வர ராஜா திருவெண்காடு திரு டி.பி. சுப்பிரமணிய பிள்ளையின் பௌத்திரியும், மாயூரம் எஸ். பி. ஸி. ஏ. இன்ஸ்பெக்டர் திரு டி. துரைராஜுவின் புதல்வியுமான செல்வி கஸ்தூரி பாய்க்கும் சிதம்பரம் திரு நரசிம்மன் அவர்கள் குமாரர் செல்வன் நடராஜரத்னம், பி. எஸ். ஸி., அவர்களுக்கும் அக்டோபர் மீ 22உ மாயூரத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. நகரிலுள்ள பிரமுகர்களும் நண்பர்களும் வந்திருந்து தம்பதிகளுக்கு ஆசி கூறித் திருமணத்தைச் சிறப்பித்தார்கள். வாழ்க மணமக்கள்!

பத்துத் தப்படிகள் தாண்டியிருப்பார். "ஹிஹி" என்று யாரோ சிரிக்கும் சத்தம் கேட்டது. கங்காதரன் பார்வையைச் சப்தம் வந்த திக்கை நோக்கி செலுத்தியபோது, பாங்கி பியூன் மாணிக்கம் அடக்க ஒடுக்கமாக அவர் முன் வந்து நின்றான்.

"என்னடா மாணிக்கம்!"

"உங்களைத்தான் சார், கண்டு கிட்டுப் போகலாம் என்று வந்தேன். வீட்டில் மாமியார் மாமனார் எல்லோரும் கும்பலாக வந்து விட்டாங்க, சார். வடிக்க அரிசி கிடையாது. ஏதாச்சும் பணம் கொடுத்தால் தேவலே" என்று பல்லைக் காட்டினான் மாணிக்கம்.

கங்காதரன், "என்னிடம் பணம் இப்போது இல்லேடா. மாசக் கடைசி. நாளைக்குத்தான்" என்று சமாதானம் சொன்னார்.

"சாமி, அப்படிச் சொல்லலாமுங்களா! நீங்க இல்லே என்று சொல்லி விட்டால் அவ்வளவுதான். என் மானமே போய் விடும்..." என்று கூறிக் கொண்டே கங்காதரனின் கால்களைப் பிடிக்க வந்து விட்டான் மாணிக்கம். கங்காதரனுக்குத் தரும சங்கடமாகி விட்டது. பேசாமல் கையிலிருந்த ஒரு ரூபாயில் எட்டணாவை மாணிக்கத்திடம் கொடுத்து விட்டு மேலே நடந்தார்.

பாக்கி யிருந்த எட்டணாவில் கால் டஜன் ஆரஞ்சுப் பழம் தான் வாங்க முடிந்தது. பழத்தைச் சீக்கிரம் வீட்டில் கொண்டு வந்து சேர்க்க வேண்டும் என்று அவசரம் அவசரமாக நடந்து கொண்டிருந்தார் கங்காதரன்.

"நமஸ்காரம், சார்..."

கங்காதரன் எதிரில் ஒரு வாலிபன் நின்று கொண்டிருந்தான். அந்த வாலிபனைக் கங்காதரனுக்குத் தெரிய வில்லே. யாராயிருக்கும் என்று யோசனை செய்து கொண்டிருந்தார்.

"என்னைத் தெரிய வில்லையா சார், உங்களுக்கு! உங்களை கம்ப பேட்டை சங்கீத சபாவில் அடிக்கடி பார்த்திருக்கிறேன். உங்களுக்குச் சங்கீதம் என்றால் உயிர். நன்றாக அனுபவிப்பீர்கள்......" இன்னும் ஏதேதோ சொல்லிக் கொண்டு போனான் அவன். கங்காதரனுக்குத் தன்னை அந்த யுவன் புகழ்ந்து பேசுகிறான் என்று தெரிந்து விட்டது.

"உங்களுக்கு என்ன வேண்டும்! என்னை வானளாவப் புகழ்கிறீர்களே" என்று கேட்டார்.

"ஒன்றுமில்லே சார். ஒரு ஐந்து ரூபாய் பணம் தேவை. வீட்டில் என் பெண்ணுக்கு ஒரே காய்ச்சல். சாத்துக்குடிப் பழம் வாங்கிப் போக ஒரு நாலணுக் காசு இல்லே. மாசக் கடைசி பாருங்கள்" என்று இழுத்தான் அந்த யுவன்.

கங்காதரனுக்கு எல்லாம் விசித்திரமாக இருந்தன. கையிலிருக்கும் பழத்தைப் பார்த்துத் 'தாருங்கள்' என்று கேட்பதற்குப் பதில் அவன் ஏதேதோ சுற்றி வளைத்துப் பேசுவதாக அவருக்குப் பட்டு விட்டது. அடுத்த கணம் அவர் ஒன்றுமே யோசியாமல், "இந்தாப்பா, என்னிடம் இப்போது இந்த மூன்று ஆரஞ்சுப் பழங்கள்தான் இருக்கின்றன. வேறு பணம் ஒன்றுமில்லே" என்று கூறிவிட்டு மூன்று ஆரஞ்சுப் பழங்களையும் அந்த வாலிபனின் கையில் வைத்து விட்டு நகர்ந்து விட்டார்.

இலையுதிர் காலத்தில் பொலபொல வென்று இலைகள் யாவும் உதிர்ந்த பிறகு மரம் கம்பும் கிளையுமாகக் காட்சி தருவதைப்போல் கங்காதரன் தம் உணர்ச்சிகளை யிழந்து மொட்டை மரம் போல் நகர்ந்து கொண்டிருந்தார். 'குழந்தை வீட்டில் எவ்வாறு இருக்கிறதோ!' என்ற எண்ணம் தோன்றும்போதெல்லாம் சரீரத்தை யாரோ பந்துபோல் தூக்கி எறிவதைப்போல் இருந்தது. மனைவியின் முகத்தில் எப்படி விழிப்பது என்று நினைத்தபோது வெட்கம் பிடுங்கித் தின்றது.

கங்காதரன் வீட்டு வாசலில் திருநாவுக்கரசு நின்று கொண்டிருந்தான். அவனைப் பார்த்த போதே கங்காதரனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. "பணம் கிணம் கேட்க வந்துவிட்டானோ!" என்று சந்தேகம் ஏற்பட்டது.

கங்காதரனைப் பார்த்தவுடன் "வணக்கம் சார்" என்றான் திருநாவுக்கரசு.

கங்காதரன் பேசாமல் தலையை ஆட்டினார்.

"உங்களைப் பார்க்கத்தான் சார் வந்தேன். அப்பா கடிதாசு எழுதி யிருந்தார். உங்களிடம் வாங்கியிருந்த ஐம்பது ரூபாயைக் கொடுக்கச் சொல்லி எழுதி யிருந்தார். பணத்தைக் கையுடன் கொண்டு வந்திருக்கிறேன், சார்" என்றான் திருநாவுக்கரசு.

கங்காதரன் கண்கள் அகல விரிந்தன. கண்களில் ஏனோ கண்ணீர் ததும்பியது.

"உங்களுக்கு அவர் கடிதம் எழுதவில்லையா, சார்! ஏதோ பழங்கள் அனுப்பி யிருப்பதாக எங்களுக்குக் கடிதம் எழுதி யிருந்தாரே!"

"பழங்களா! ஒன்றும் வரவில்லையே!" என்று வியப்புடன் சொன்னார் கங்காதரன்.

அப்போது 'பூம் பூம்' என்று காரின் ஹாரன் சத்தம் கேட்டது. ரயில்வே டெலிவரி மோட்டாரான அவ்வண்டி கங்காதரன் வீட்டுக்கு எதிரே நின்று இரண்டு கூடைகளைக் கீழே இறக்கிவிட்டு அப்பால் சென்றது.

கங்காதரன் கூடை யொன்றைப் பிரித்தார்!

கூடை நிறைய ஆரஞ்சுப் பழங்கள் மஞ்சள் வெய்யிலில் பிரகாசித்தன!

கங்காதரன் மெய் மறந்து பரவசமாகிவிட்டார்!

# The murphy parade of Beauty...



Model TB221 4-valve dry battery radio set.

Model TA222 5-valve AC radio set.

Model TU222 5-valve AC/DC radio set.



Model TA226 7-valve AC radio set — fully bandspread, 8-bands, and magic eye.



Model TA224 5-valve AC radio set, fully bandspread, 8-bands

Model TB227 7-valve dry battery radio set fully bandspread, 8-bands.



Model TU196 6-valve AC/DC radio set, fully bandspread, 8-bands.

## murphy radio

*Better value for your money*




Member of the Radio Manufacturers' Association of India.

EVEREST MR. 54.32




# வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

## உங்களுக்கு ஜீவாதார வீரியத்தை...

## துரிதமாக அளிக்கிறது!



வாழ்நாளில் ஏற்படும் சகல இடையூறுகளையும் தவிர்க்கத் தயாராயிருங்கள்! வாட்டர்பரீஸ் காம்பவுண்டை உட்கொண்டு செளக்யமாயிருங்கள்...நல்ல யோசனை சக்தியைப் பெறுங்கள்...நன்ருக வேலை செய்யுங்கள்... நல்ல தோற்றத்தைப்பெறுங்கள்!

தினசரி அதிகப்படி ஆகாரமாக நாவிற்கினிய வாட்டர்பரீஸ் காம்பவுண்டை உட்கொள்ளுங்கள்...தினசரி வாழ்க்கைக்குத் தேவையான ஜீவாதார வீரியத்தைப் பெறுங்கள்!




வலிமை தரும் வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் ஓர் ருஜுவாக்கப்பட்ட ஆரோக்கிய டானிக். அது உங்களை சுறுசுறுப்புள்ளவர்களாகவும் கடின வேலைகளைச் செய்ய லாயக்குள்ளவர்களாகவும் செய்கிறது. தினசரி உட்கொண்டால், உங்கள் தேகத்துக்குத் தேவையான விசை வேகத்தை யளிக்கிறது. களைப்பு, இருமல், ஜலதோஷம் முதலியவைகளை எதிர்க்கும் வன்மையை அளிக்கிறது.

வாட்டர்பரீஸ் காம்பவுண்டை உட்கொண்டு புதிய மகிழ்வுறும் புருஷராயிருங்கள்...உங்கள் குடும்பத்தினர் அனைவருக்கும் ஒரு ருஜுவான ஆரோக்கிய டானிக்காகும் **ஆரோக்கியத்தைத் தரும்**

## வாட்டர்பரீஸ் காம்பவுண்டை

## உங்களை செளக்யமாக வைக்க உட்கொள்ளுங்கள்

272



# மங்கையின் திருமணம்

கிரிஜா



எங்கள் தாம்பத்தியத்தில் எத்தனையோவித ஏமாற்றங்களுக்குப் பிறகு, அன்று ஆகாச ராஜனுக்கு அலர்மேல் மங்கை கிடைத்தாற் போல-ஒரு அழகிய பெண் குழந்தை பிறந்தாள். அலர்மேல் மங்கையின் அருளால் பிறந்த குழந்தைக்குப் பெயரும் அலர்மேல்மங்கை என்றே வைக்கப்பட்டது. எங்களை இல்வாழ்க்கையில் இன்பத்தை மலரச் செய்ய வந்து பிறந்த அந்தப் பெண் குழந்தை, என் கணவருக்குக் கிடைத்தற்கரிய பசும் பொன்னாகவே தோன்றினாள். அவள் அழுவதையோ, ஏதாவது ஒன்று வேண்டுமென்று ஏங்குவதையோ கண்டு அவர் சகிக்கவே மாட்டார். பெண் எதை விரும்புகிறாளோ அதை யாதொரு ஆட்சேபணையுமின்றி அந்த நிமிஷமே வாங்கித் தந்து விடுவார்.

தந்தையின் அசாத்திய செல்லத்தில் பெண் பெரும் பிடிவாதக்காரியாக வளரலானாள்.

பெண்ணின் பிற்கால வாழ்வை எண்ணும்போது என் தாயுள்ளம் வேதனையடையும். இதை என் கணவருக்கு எடுத்துச் சொல்லியும் அவர் அதை ஏற்கத் தயாராயில்லை.

நாட்கள் சென்றன. பதினைந்தாவது வயதை அடைந்து விட்ட மங்கையைப் பருவம் தன் மென் கரங்களால் அலங்கரிக்கத் தொடங்கி விட்டது. பெண்ணின் எழிலைக் கண்டு பூரித்த என்னுள்ளம் அவளது அடக்கமற்ற தன்மையை எண்ணித் துன்புற்றது. இப்பொழுதுதான் என் கணவரும் விழித்துக் கொண்டார். ஆயினும், வயது வந்த பெண்ணைச் சொல்லவும் முடியாமல், மெல்லவும் முடியாமல் திணறினார்.

“எப்படியாவது ஒருவனிடம் ஒப்படைத்து விட்டால் அவளது குணம் படிமானத்துக்கு வந்து விடும்” என்று தீர்மானித்த அவர், அதி தீவிரமாக வரன் தேடத் தொடங்கினார். பெண்ணின் ஜாதகத்தைக் கையில் எடுத்துக் கொண்டு கிளம்பிய போதுதான் வரன் தேடுவது அவ்வளவு சுலபமானது அல்ல என்பது அவருக்குப் புரிந்தது. அத்துடன் பெண்ணின் குணம் வேறு அதற்குக் குறுக்காக நிற்கவே, அவர் திடுக்கிட்டு நின்றார். ஆயினும் முயற்சியை எப்படி விட முடியும்!

அன்று வெளியூர் சென்றிருந்த என் கணவரிடமிருந்து அவசரத் தந்தி ஒன்று வந்தது. தந்தி வரன் விஷயமாகத்தான் அடித்திருந்தார்.

அன்று பகல் பன்னிரண்டு மணிக்குப் பிள்ளை வீட்டாருடன் பெண் பார்க்க வருவதாகத் தந்தி கொடுத்திருந்தார். தந்தி தாமதித்துக் கிடைத்ததால் அவர்கள் வர இன்னும் ஒரு மணி நேர அவகாசமே இருந்தது.

‘அடடா! இந்தப் பெண் எங்கே!’ என்ற படபடப்புடன், பரபரப்பாக ஸ்டேஷனுக்குக் காரை அனுப்பினேன். வேலைக்காரர்களை அழைத்து, நாலு புறமும் சென்று மங்கையைத் தேடி உடனே அழைத்து வரும்படி சொல்லி விட்டு உள்ளே சென்றேன்.

ஸ்டேஷனுக்குச் சென்ற காரும் வந்தவர்களைச் சுமந்து கொண்டு வந்து விட்டது. முதலில் உள்ளே நுழைந்த என் கணவர் பெண்ணைக் காணாமல் என்னைப் பார்த்துப் பல்லைக் கடித்தார். நான் என்ன செய்வது!

வந்தவர்களுக்கு ஏதோ ஒருவித சாக்கைச் சொல்லி டிபன் கொடுத்து, நாழியைக் கடத்த வீட்டைச் சுற்றிக் காட்டத் தொடங்கினோம். நாங்கள் பங்களாவின் பின் பக்கத்துத் தோட்டத்தை யடைந்து அந்தக் கொய்யா மரத்தடிக்கு வந்தபோது, மரத்திலிருந்து எங்கள் மத்தியில் ‘பொத்’தென்று குதித்தாள் மங்கை. அவளைத் தொடர்ந்து அவள் சிநேகிதிகளும் குதித்தனர்.

திடுக்கிட்ட அனைவரும் அப்படியே நின்று விட்டோம். கலகலவென்று சிரித்த மங்கை, “பயந்து விட்டீர்களா, அப்பா!” என்றாள், அன்னியர்கள் இருக்கிறார்கள் என்ற அச்சம் சிறிதுமின்றி.

கோபமடைந்த பையன், “இப்படிப் பிசாசைப் போலப் பெண்கள் குதித்தால் யார்தான் பயப்பட மாட்டார்கள்!” என்றான் ஏளனமாக.

மங்கையின் முகம் சிவந்தது. பையனின் பக்கம் திரும்பியவள், “உங்கள் ஊரில் பிசாசு இப்படித்தான் இருக்குமோ!” என்று கேட்டாள்; பிறகு என் பக்கம் திரும்பி, “அம்மா, இந்தப் பயந்தாங்கொள்ளிப் பையன் யாரம்மா!” என்றாள்.

பையனுடைய முகம் கோபத்தால் சிவந்தது. என் கணவரது முகம் அவமானத்தால் கறுத்தது. வீணாக விஷயத்தை வளர்த்துவானேன்!

" உங்களுடைய நல்ல குணத்துக்கு இப்படி ஒரு பெண்..." என்று வார்த்தையை முடிக்காமலே வண்டியேறி விட்டார்கள் வந்தவர்கள்.

★

ஐந்தில் படியாததைப் பதினைந்தில் படிய வைக்க முடியுமா ! என் கணவருக்கு ஏற்பட்ட கோபத்தில் ஒரேயடியாகப் படிய வைக்க முற்பட்டு விட்டார். 'வீட்டை விட்டுப் படியிறங்கினால் காலை ஒடித்து விடுவேன்' என்று பயமுறுத்தினர். அவருக்கு வந்த ஆத்திரத்தில் ஒரேயடியாக அதட்டி மிரட்டினர்.

தந்தையின் திடீர் மாறுதலைக் கண்டு கலவரம் கொண்ட மங்கை விஷயம் விளங்காமல் திகைத்தாள். பக்குவப்படாத அவள் உள்ளத்தில் ஒன்றுமே பதியவில்லை.

இப்பொழுது நான்தான் முழு மூச்சுடன் பொறுப்பை மேற்கொள்ள வேண்டி வந்தது. மிகமிக மென்மையாக என் மகளது உள்ளத்தைப் பக்குவத்துக்குக் கொண்டு வர முயன்றேன். ஒரேயடியாகக் கட்டுப்பாட்டைப் பிரயோகம் செய்யாமல் சில விஷயங்களில் அவள் இச்சைப்படி விட்டும், சிலவற்றை அவளுக்குப் பக்குவமாக எடுத்துப் புகட்டி அடக்கியும், நளினமான அவளது பெண் உள்ளத்தைப் பண்படுத்தி, வருங்காலக் கனவுகளைப் புகுத்தி அவள் உள்ளத்தை வளம் மிக்க பூஞ்சோலையாக்கப் படாதபாடும் பட்டேன். எனது இடைவிடா முயற்சியில் ஒரு அளவு வெற்றியும் காணத் தொடங்கினேன்.

இப்பொழுது நான் என் கணவரது கடுங் கோபத்தைப் பொறுமையாகவும், பெண்ணின் பொருமலை மிக நிதானமாகவும் சமாளித்து, இருவரையும் அவரவர் மனப்படி அரவணைத்துக் கொண்டு போக வேண்டி வந்தது.

★

அன்று எங்கள் ஊரே அமர்க்களப் பட்டது. அரிதினும், அரிதாக எங்கள் ஊரில், தமிழ் விழா அல்லவா நடக்கப் போகிறது! அதுவும் அன்று இரவு சிறந்த நாடகம் வேறு ! கேட்க வேண்டுமா கொண்டாட்டத்துக்கு ! ஊரே தமிழ் முழக்கத்தால் நிரம்பிக் களையுடன் விளங்கியது.

முன்போல அப்பாவின் கட்டுப்பாடின்றி இருந்திருந்தால் மங்கையைக் கட்டிப் பிடிக்கவே முடியாது. அவளும் அவள் தோழிகளும்தான் விழாப் பந்தலின் முன்னணியில் நிற்பார்கள். ஆனால் இன்றோ அவள் அப்பா

சிறு சலசலப்பும், 'உஸ், உஸ்' என்ற சத்தமும் எழுந்து, எழுந்து மறைந்து கொண்டிருந்தன. ஆனால் மேடையில் ஏறிப் பேசியவர்கள் அனைவரும், பெண்கள் பக்கமிருந்தே சத்தம் வருவதாக எண்ணி அடிக்கடி அப்பக்கம் பார்த்துக் கையமர்த்திக் கொண்டிருந்தனர். ஆயினும் சத்தம் என்னவோ இருந்து கொண்டேதான் இருந்தது. இச்சமயம் தான் என் பெண் மங்கையின் வாழ்வையே வளமாக்கிய அந்தச் சம்பவமும் நடந்தது.

நாங்கள் உட்கார்ந்திருந்த பக்கத்துக்கு நேர் எதிரில் ஆண்கள் உட்கார்ந்திருந்தனர். அவ்வரிசையின் முன்னால் இரு இளம் வாலிபர்கள் உட்கார்ந்து விழா நிகழ்ச்சிகளைக் கவனித்துக் கொண்டிருந்தனர். அவர்களுள் ஒருவன் அழகும், வசீகரமும் நிரம்பியவனாய் இருந்தான். அவனது அழகிய விழிகள் அடிக்கடி பெண்கள் உட்கார்ந்திருந்த பக்கம் சுற்றித் திரும்பியது. அதையடுத்து அவன் முகத்தில் குறும்புப் புன்னகையொன்று மிளிர்ந்து மறைந்த வண்ணம் இருந்தது. சத்தம் அதிகரித்த போது அவ்விளைஞன் தன் நண்பனிடம், " எங்கே போனாலும் இந்தப் பெண்களின் உபத்திரவம் தான். அழுகிற குழந்தையையும் கொண்டு வந்து விடுகிறார்கள் " என்று அலுத்துக் கொண்டான்.

உண்மையில் அப்போது பெண்கள் பக்கம் சத்தமே யில்லை. சத்தம் வந்ததெல்லாம் பெண்கள் உட்கார்ந்திருந்த இடத்துக்கு முன்னாலிருந்தும், பக்க வாட்டிலிருந்தும்தான்.

அப்படியிருக்க அப்பையன் பெண்களைக் குறை கூறியதைப் பொறுக்க என்னாலேயே முடியாத போது, இளமைத் துடிப்புள்ள மங்கையால் எப்படி முடியும் ! அவள் முகம், 'ஜிவ்'வென்று சிவந்து விட்டது.

" நீங்கள் சொல்வது தவறு ; நன்றாகக் கவனித்துக் கேளுங்கள். சத்தம் பெண்கள் பக்கமிருந்து வரவேயில்லை " என்று கூறினாள் மங்கை.

வாலிபன் பேச, மங்கை பேச இருவருக்கும் கடுமையான தர்க்கம் நடக்கத் தொடங்கியது.

அப்போது அவன் நண்பன் உஸ், உஸ் என்று அவனை அடக்கவே, அவன் தன் கவனத்தை மேடைக்குத் திருப்பினான். நானும் மங்கையை அடக்கவே அவளும் உள்ளுக்குள் பொருமியபடி சும்மா இருந்தாள்.

சல சலப்பும் சத்தமும் சமுத்திர அலைபோல எழுந்து கொண்டே யிருந்தன. தலைவர்கள் பன்முறை வேண்டியும் அது அடங்கவில்லை. அப்போது மேடைமீது ஏறிப் பேசிக் கொண்டிருந்த

# இதோ உங்களுக்கொரு லாபகரமான முதலீடுத் திட்டம்

**பதினைந்து வருடங்களுக்கு மாதாமாதமும்
வருமானவரி கழிவின்றி நல்ல வருமானம் பெறுவதற்கு**

## ஒரு அன்னியுடி சர்டிபிகேட் வாங்கிவிடுங்கள்

| வெளியீடு விலை | மாத வருமானம் | தவணைமல் |
|---|---|---|
| ரூ. 3,500/- | பிரதி மாதமும் ரூ. 25/- | 15 வருட காலத்திற்கு ஒவ்வொரு மாதமும், முதலீடு தேதியி லிருந்து ஒரு மாதம் பூர்த்தியான தேதி முதல் ஆரம்பித்து வழங்கப்படும். திருப்பிக் கொடுக்கப்படும் மூலதனத்தின் ஒரு பகுதியும், சுமார் 3½ சத விகிதம் தொடர் வட்டியும் சேர்ந்ததே இந்த மாதாந்தரத் தொகையாகும். |
| ரூ. 7,000/- | பிரதி மாதமும் ரூ. 50/- | |
| ரூ. 14,000/- | பிரதி மாதமும் ரூ. 100/- | |
| ரூ. 28,000/- | பிரதி மாதமும் ரூ. 200/- | |

இந்த சர்டிபிகேட்டுகளில் முதலீடு செய்யக்கூடிய உயர்ந்தபக்ஷத் தொகை:—

வயது வந்த நபர் ஒருவருக்கு ரூ. 28,000
வயது வந்த இரு நபர்கள் கூட்டாக வாங்கினால் ரூ. 56,000
ஒவ்வொரு மைனரின் சார்பிலும் ஒரு கார்டியன் வாங்கக்கூடியது

கும் ஹைதராபாத் ஸ்டேட் பாங்கின் கிளைகளிலும், மைசூர், மாண்டியா, சித்தல் துர்க்கம், சிக்மகளூர், ஷிமோகா, டும்கூர், மற்றும் ஹாஸனிலிருக்கும், பாங்க் ஆப் மைசூர் லிமிடெட் கிளை ஆபீஸ்களிலும், இந்தியாவில் இதர ஊர்களிலுள்ள இம்பீரியல் ப



## யாழ்ப்பாணத்தில் ஒரு கலா மண்டபம்

யாழ்ப்பாணத்திலே இலக்கியச் சொற்பொழிவுகளையும் சமய விரிவுரைகளையும் கேட்டுத் தெவிட்டிப் போன மண்டபம் ஒன்று உண்டாயின் அது வண்ணை வைத்தீஸ்வர வித்தியாலய மண்டபந்தான் என்பதை ஈழத்து மக்களும் தமிழ் நாட்டுப் பேரறிஞர்களும் பத்திரிகை ஆசிரியர்களும் அறிவார்கள். சென்ற ஆண்டு வரைக்கும் இந்த மண்டபம் வெறும் கீற்றுக் கொட்டகையா யிருந்தது. இன்று அதே இடத்தில் புதியதொரு கலா மண்டபம் கவினுற அமைந்து வானுற ஓங்கி நிற்கிறது. வைத்தீஸ்வர வித்தியாலயத்தினர் சென்ற வருடம் கலைவிழா நடத்தினர். பொதுமக்கள் உதவிய பணத்தைக் கொண்டு புதியதொரு கலா மண்டபத்தையும் வகுப்பறைகளையும் அமைத்தனர்.

இப்புதிய கலா மண்டபம் எழுபத்தையாயிரம் ரூபாய் செலவில் நிறுவப் பெற்றுள்ளது. அழகிய முகப்புடனும் எழுதக வேலை நிறைந்த தூண்களுடனும் சோபித்து விளங்கும் இம்மண்டபத்தை ஸ்ரீமத் சுவாமி யதீஸ்வரானந்தர் திறந்து வைத்தார். மேனாடுகளில் இந்து மதப் பணியாற்றிய இச்சுவாமிகள் இப்போது பங்களூரிலுள்ள இராமகிருஷ்ண சங்கத்தின் தலைவராக விளங்குகிறார். இவ்விழாவில் பங்கு பற்றுவதற்காகத் திருச்சிராப்பள்ளியிலிருந்து தர்ம சக்கரம் ஆசிரியர் ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்களும் வந்திருந்தார்கள். கலைவாணி உறையும் கோயிலாக விளங்கும் இக்கலாமண்டபம் என்றும் நின்று நிலவுக!

— **அருமணி.**

[வைத்தீஸ்வர வித்யாலயக் கலா மண்டபத் திறப்பு விழாவின்போது வித்யா அதிபர் திரு ச. அம்பிகைபாகன் எல்லாரையும் வரவேற்பதையும், சுவாமி யதீஸ்வரானந்தர் குத்துவிளக்கு ஏற்றி கலாமண்டபத்தைத் திறந்து வைப்பதையும், நடராஜப் பெருமான் சந்நிதியாக விளங்கும் வித்யாலயக் கலா மண்டப மேடையில் சுவாமி சித்பவானந்தர் பேசுவதையும் படத்தில் காணலாம்.]

---

காரணத்தால் ஜனங்கள் இருந்த இடத்தை விட்டு அசைய மறுத்து விட்டனர்.

அவ்வாலிபனின் நண்பன் எழுந்து வெளியே செல்ல விரும்பினான். "இரண்டரை மணி நேரம் இப்படியே உட்கார்ந்திருந்தால் பயித்தியமே பிடித்து விடும்" என்று வாதித்த நண்பனைச் சமாதானப்படுத்தி உட்கார வைத்த வாலிபன், "இதோ பார், எழுந்தால் அப்புறம் இடம் நமக்கு இல்லை. உன் பொழுதைக் கழிக்க நான் ஒரு அழகான கதை சொல்லுகிறேன் கேள்" என்று கூறிவிட்டுக் கதையைச் சொல்ல ஆரம்பித்தான்.

நாடகம் ஆரம்பமாகும் வரையில் பொழுது போக வேண்டாமா! அவனது கதையைக் கேட்பதற்கு நானும் தயாரானேன்.

முதலில் சுவாரஸ்யமின்றி வேறு பக்கம் பார்த்துக் கொண்டிருந்த மங்கையின் கவனத்தைக் கூடச் சுண்டியிழுத்தது அந்த வாலிபனின் கதை. சுற்றி யிருந்த அனைவருடைய கவனமும் இப்போது வாலிபன் மீது திரும்பியது.

இப்படி எங்களை மெய்மறக்கச் செய்த அக் கதை, ஸ்ரீயப்பதியாய் ஏழுமலையில் எழுந்தருளியுள்ள ஸ்ரீனிவாசப் பெருமான், அலர்மேல் மங்கையின் அழகிய திருக்கரம் பற்றி அவரை மணந்த வைபவத்தைப் பற்றிய கதையே. இந்த அழகான தெய்வத் திருக்கதையை வாலிபன் தன் கற்பனை மெருகுடன் சொல்லத் தொடங்கினான்:

சௌனகாதி முனிவர் சூத முனிவரை நோக்கி, "திருவேங்கடத்து இறைவனைப் பற்றிச் சொல்லுங்கள்" என்றதும், சூத முனிவர் ஆரம்பித்தார்:

ஸ்ரீ ராமாவதாரத்தில், பிராட்டி எம்பெருமானால் சுகத்தை விடத் துன்பத்தையே அதிகம் கண்டார். அண்ணலைப் பிரிந்து அவதியுற்றார். லவ குசர்களைப் பெற்றுப் பருவம் வரும்வரை அவர்களை மிகவும் கஷ்டப்பட்டுப் பாதுகாத்தார். பொறுமையும் தாய்மையும் ஓர் உருவாய் நின்று பெருமானின் தாமரைத் தாள்களைப் பணிந்த பொழுது, பெருமான் பிராட்டியின் பொறுமையை மீண்டும் சோதித்தார்.

"நெருப்பில் குளித்து வா!" என்று பணித்தார். தேவியின் பொறுமை எல்லை மீறியது. துக்கத்தால் துடிக்கும் தன் உள்ளத்தைத் தாங்கிய வண்ணம், தன் தாயான பூமிதேவியைத் தழுவி மறைந்து விட்டார். பெருமான் மீண்டும் தனியனானார்.

அனலெனத் தகிக்கும் அப் பிரிவைத் தாங்க முடியாமல் தவித்த பெருமான், ஸ்ரீதேவியின் நினைவைச் சிந்தையிலும், அவள் உருவைத் தம் மார்பகத்திலும் பதித்தவராய், 'ஸ்ரீனிவாசன்' என்ற திருநாமத்துடன் திருமலைக்கு எழுந்தருளினார்.

இவ்விதம் திருவின் பிரிவால் வாடும் இறைவனைக் கண்டு வருந்திய தேவர், பிரம்மன், அரன், முனிவர் ஆகியோர் ஒன்று கூடிப் பிராட்டியைத் துதித்து நிலவுலகில் அவதரித்திடுமாறு வேண்டினர். சிந்தை மிக்க சீதாப் பிராட்டியும் மனம் இளகி, அவர்கள் வேண்டுகோளை ஏற்று, அழகிய பெண் குழந்தையானார். அக் குழந்தையைத் தாமரை மலர்மீது தாங்கிய வண்ணம் பூமி மாதா காத்திருந்தார்.

சந்திர வம்சத்தில் தோன்றிய மித்திர வர்மனின் புதல்வன், வியன் என்பான் தன் அழகிய மனைவி தரணி என்பவளுடன், தொண்டை மண்டலத்தில் நாராயணபுரத்திலிருந்து எட்டுத் திக்கும் விளங்க அரசு புரிந்து வந்தான். அவ் வியன் அறநெறி வழுவாது அரசு புரியும் போது ஒரு யாகம்

செய்வதற்காகத் தவசியரும், வேந்தரும் புடை சூழச் சென்று ஆரணி நதிக்கரையில் பொன் கலப்பையினாலே உழத் தொடங்கினர். அப்போது மின்னற்கொடி தோன்றினாற்போல ஒளியுடைய ஒரு பெண் குழந்தை தோன்றக் கண்டு, வியன் அதிசயமும் பெரு மகிழ்ச்சியும் அடைந்தான்.

பின்னர் அரண்மனையடைந்த மன்னன் அம் மதலைக்கு, "அலர்மேல் மங்கை" என்ற திரு நாமமும், பத்ம மலரில் கிடந்ததால், 'பத்மினி' என்ற திருநாமமும் வைத்து வளர்த்து வந்தான்.

சில மாதங்களில் வியன் மனைவி தரணி கருவுற்று மன்மதனும் நாணும்படியான தொரு புதல்வனைப் பெற்றான். வியன் அம்மதலைக்கு "வசுதாசன்" என்று நாமமிட்டு வளர்த்து வந்தான்.

ஒருநாள் பத்மினி தன் தோழிமார்களுடன் அழகிய பூங்கா வனத்துக்குச் சென்று மலர் கொய்து விளையாடிக் கொண்டிருந்தாள். அப்போது ஒரு பெரும் யானை ஆர்த்து வந்து அம் மங்கையரை அணுகவே, அலறி நடுங்கிய அவ் வழகியர், கடுகி ஓடி மலர் வனத்தின் மூலை யொன்றில் பதுங்கி நின்றனர்.

அப்போது, பளிங்கு போன்ற வெண்ணிற முடைய குதிரையில், ஆயிரம் மன்மதர் ஓர் உருக் கொண்டு வந்து விட்டார்களோ என்று எண்ணும் படியான அற்புத அழகு வாய்ந்த ஒரு அரசிளங் குமாரர் அவ்வழகிய வனத்துள் நுழைந்தார். கையில், வில்லும், அம்பும் இலங்கத் தோன்றிய அவ்விளங் குமரரைக் கண்ட யானை அடங்கி யொடுங்கி அவ்விளைஞருக்கு வணக்கமும் செய்து வனத்தை விட்டு அகன்றது.

தன்னைக் கண்டு அதிசயித்து நிற்கும் அப் பெண் திலகங்களை அணுகிய அவ்வழகன், "மங்கையீர்! நீங்கள் யார்!" என்றான்.

அழகனைக் கண்டு மதிமயக்கம் கொண்டாலும் ஆணவத்தை விடாத அப்பெண்டிர், அவ்வண்ணலை நோக்கி, "வில்லுடன், எம் வனத்தில் வேட்டையாட வந்த நீர் யார்! அதை முதலில் கூறும்" என்றனர்.

புன்னகை புரிந்த அவ்வடிவழகன் மெல்லக் குதிரையினின்றும் இறங்கி, "என் பெயர் கண்ணன் என்பர்; இருப்பு வேங்கடம். விலங்கு வேட்டைக்காக இங்கு வந்தேன்" என்றார்.

பத்மினியின் தோழிகள், "ஐயா! இவ்வனத்திலும் இதை யொட்டியுள்ள காட்டிலும் விலங்கு வேட்டை செய்தல் கூடாது. இது எம் ஆகாச ராஜன் ஆணைக்குட்பட்ட இடம்; ஆதலால் நீர் விரைவாய் வெளிச் செல்க" என்றார்கள்.

அதற்கு அம் மன்மத ரூபன், "இதோ நிற்கும் உங்கள் தலைவியின் பேரும், ஊரும், குலமும் உரைப்பீராயின் நான் இங்கிருந்து போய் விடுகிறேன்" என்றான்.

வெகுண்டெழுந்த பெண்களுள் ஒருத்தி, "இவள் எம் ஆகாசராசன் அருந்தவப் புதல்வி; நீர் உடனே இவ்விடம் விட்டுச் செல்லாவிடில் எம் அரசன் உம்மைச் சிறைப் படுத்துவார்" என்றாள்.

அதைக் கேட்ட கண்ணன் "விலங்குகளை வேட்டையாட வந்த நான் உங்கள் தலைவியின் வாள் விழிகளால் வேட்டையாடப் பட்டேன். அழகெல்லாம் திரண்டெழுந்து வந்த உங்கள் தலைவியை எவ்வாறு பிரிந்து செல்வேன்!" என்றான்.

அதைக் கேட்டு அனல் போலச் சிவந்தன செல்வி பத்மினியின் கண்கள். அவள் தன் தாமரை மலர்க் கைகளில் வைத்திருந்த அத்தனை வண்ண மலர்ச் செண்டுகளையும் அந்த ஆடவன் மீது விட்டெறிந்தாள். அவள் தோழிகளும் அனலெனச் சினந்து, அங்குள்ள பூச்செடிகளை வேருடன் களைந்து கண்ணன் மீது வீசி எறிந்தனர்.

ஏற்கெனவே மலர்மகளின் கயல் விழியால் அடியுண்டு மயங்கிய அக்கண்ணன், அவள் கரத்தினின்றும் வந்து விழுந்த மலர் மழையில் நனைந்து மெல்ல மெல்ல அவ்விடம் விட்டுக் கிளம்பி வேங்கடம் அடைந்தான்.

அலர்மேல் மங்கையின் மையலினால் வாடிய மாதவன் தேக நிலையைக் கண்டு மனம் மிகவும் இளகிய வகுள மாலிகை, "அந்தப் பெண்ணைக் கண்டு பேசி உம்முடன் சேர்த்து வைப்பேன்" என்று வாக்களித்தாள். பத்மினியின் தந்தையைத் தேடித் தூது புறப்பட்டாள்.

வகுள மாலிகையிட மிருந்து எல்லா விவரங்களையும் தெரிந்து கொண்ட அரசனும் அரசியும் உடனே பிரஹஸ்பதியை அழைத்து, நல்ல நாள் பார்த்தனர். பத்மினி, வகுள மாலிகையுடன் சுகன் என்ற தூதனையும் அனுப்பி வைத்தாள்.

வகுள மாலிகையும், சுகனும் திருமலையை அடைந்து இறைவன் தாள் பணிந்தனர். வகுள மாலிகை தன் தூது பலித்ததைக் கூறினாள்.

சுகனும் "எங்கள் இளவரசி பத்மினி உம்மை அல்லும், பகலும் நினைந்து ஆவி மெலிந்துள்ளாள். அன்று மலர் வனத்திலே செண்டு கொண்டு அடித்ததை மறந்து மன்னிக்க வேண்டும் என்று மன்றாடி வேண்டுகின்றாள்" என்று கூறினான்.

திருவுள்ளம் குழைந்து, திருமுகம் மலர்ந்த திருமால், எல்லையில்லா மகிழ்ச்சியுடன் பத்மினியை மணக்கத் தமது சம்மதத்தைத் தெரிவித்தார்.

சுகன் மீண்டு வந்து, ஏழுமலை இறைவன் சொன்ன அமுத வார்த்தைகளைச் சொல்லி, அவர் தம் அடையாளமான துளசி மாலையையும் பத்மினியிடத்திலே சேர்த்தான். பத்மினி மகிழ்ந்து மெய் சிலிர்க்கத் துளசி மாலையை வாங்கி மார்போடு அணைத்து ஆனந்தக் கூத்து ஆடி அகமகிழ்ந்தாள்.

வர்ணிக்க இயலாத சிறப்புடன் மணவிழா முடிந்த பின், மங்கை நல்லாளுடன், ஏழுமலையான் திருமலைக்குச் சென்றார்.

இன்றும் ஏழுமலைநாதன் பக்தர் துயர் துடைத்து, பாமரருக்கு அருள் புரிந்து வருகின்றார் என்று சூத முனிவர் கூறித் திருக் கதையை முடித்தார்.

★

**வா**லிபன் கதையை முடிப்பதும், மேடையின் அலங்காரம் முடிவதும் ஒன்றாக இருந்தது. வாலிபன் சொன்ன அந்த அழகிய தெய்வக் கதை என் உள்ளத்தையே கொள்ளை கொண்டது. அது மட்டுமா? அப் பையனது களை சொட்டும் முகமும், அவனது புத்தி சாதுர்யமும் என் மனத்தைக் கவர்ந்தன. "நம் பெண்ணுக்கு இப் பையன் கிடைத்தால்...... சே! சே! இதென்ன! அவன் யாரோ, நாம் யாரோ!" என்று என் மனத்தை நானே சமாதானம் செய்து கொண்டேன்.

அன்று என் கணவர் அளவற்ற சந்தோஷத்துடன் உள்ளே நுழைந்தார். ஏதாவது நல்ல வரன் கிடைத்திருக்கும் என்று எண்ணிய நான் மெள்ள அவரை அணுகி விசாரித்தேன்.

அவர் சொன்னார்: "இந்த வரன் நிச்சயமானால் நம் மங்கையைவிட அதிர்ஷ்டசாலி வேறு யாருமே இருக்க மாட்டார்கள். பையன் லக்ஷணமாக இருக்கிறான். சட்டக் கல்லூரியில் படிக்கிறான். மங்கை மட்டும் சரியாக நடந்து கொண்டாளானால் நம் கவலை தீர்ந்து விடும்."

எப்படியாவது இந்த வரன் முடிய வேண்டுமென்ற பிரார்த்தனையுடன் மங்கைக்கு வேண்டிய

# இந்தியன் பாங்க், லிமிடெட்

(ஸ்தாபிதம் : 1907)



தலைமை ஆபீஸ்: "இந்தியன் பாங்க் பில்டிங்ஸ்", வடக்கு பீச் ரோடு, மதராஸ்-1

தென் இந்தியாவில் எல்லா முக்கிய இடங்களிலும், பம்பாயிலும் புது டில்லியிலும் சப் ஆபீஸ்கள், கிளைகள் இருக்கின்றன.

**மூலதனம்**

| | | | |
|---|---|---|---|
| அங்கீகரிக்கப்பட்டது | ... | ரூ. | 1,00,00,000 |
| வழங்கப்பட்டது | ... | ரூ. | 72,00,000 |
| செலுத்தப்பட்டது | ... | ரூ. | 57,80,000 |
| ரிசர்வ் & இதர நிதிகள் | ... | ரூ. | 76,00,000 |
| டெபாஸிட்டுகள் | ... | ரூ. | 23·71 கோடிகள் |

எல்லாவிதமான பாங்கிங் அலுவல்களும் செய்யப்படும்

என். கோபால அய்யர், செக்ரடரி

# பாதத்திலுள்ள புண்கள் நான்கு நாட்களிலேயே குணமடைகின்றன

## குத்து வலியும் நமைச்சலும் 7 நிமிஷங்களில் நிறுத்தப்படுகிறது

உங்கள் பாதங்கள் அதிகமாக வெறுப்படையுமாறு நமைச்சல் எடுக்கிறதா? வெடித்துக் காயமடைகின்றனவா? பாதங்களின் மேலும் விரல்களுக்கிடையிலும் கொப்பளித்து வெந்திருக்கிறதா? மேலும் கொப்புளங்களை உண்டாக்குகின்றனவா? ரத்தம் கசியும்படி பாதங்கள் புண்ணுகின்றனவா? இது ஏதோ கிருமி அல்லது தோலில் ஏற்படும் அழுகல் என்பதையும் இவற்றை ஒழித்தாலன்றி, உபாதைகளிலிருந்து விடுதலை பெற முடியாதென்பதையும் நீங்கள் உணர வேண்டும்.

## மூலகாரணத்தையே அழிக்கிறது

களிம்புகளோ தைலங்களோ அதிக குணத்தை அளிப்பதில்லை. உபாதைக்கு மூல காரணத்தை அவை கொல்லுவதோ வெல்லுவதோ கிடையாது. அதிர்ஷ்டவசமாக, டாக்டர்கள் சிபார்சு செய்யும் நிக்ஸோடெர்ம் (Nixoderm) இருக்கிறது. ஒரு பிரபல ஆங்கில சரும நிபுணர் தயாரித்தது; பிரபல மருந்து வியாபாரிகளால் இறக்குமதி செய்யப்படுவது. நிக்ஸோடெர்ம் (Nixoderm) உங்கள் பாத உபாதையைப் போக்கிவிடும் என்பதற்கு உத்தரவாதம். அதன் மூன்று முக்கிய குணங்களாவன: (1) பாதங்களில் ஏற்படும் உபாதைக்கும், படைக்கு மூல காரணமான கிருமிகளையும், அவற்றை வளர்க்கும் இதர புழுக்களையும் கொன்றுவிடுகிறது. (2) நமைச்சலை நிறுத்தி சருமத்தை ஏழே நிமிஷங்களில் குளிர்வுறச் செய்து



அமைதியளிக்கிறது. (3) சருமத்தைச் சுத்தமாகவும் வழவழப்பாகவும் மிருதுவாகவும் செய்கிறது.

## பரிசீலனைக்கு உத்தரவாதம்

இன்றே நிக்ஸோடெர்ம் (Nixoderm) வாங்குங்கள். இன்றிரவே போட்டுப் பார்த்தால் மறு நாள் காலை அற்புதமான தேர்ச்சி ஏற்படும். நாலு நாட்களில் பாதத்தில் ஏற்படும் உபாதைகளும் தீர்ந்துவிடும். சருமம் சுத்தமாகவும், வழவழப்பாகவும் மிருதுவாகவும் ஆகும். தொடர்ந்து மூன்று நாள் போட்டும் பாதங்களில் ஏற்படும் நமைச்சல், கொப்புளங்கள் குணமடையா விட்டால் நிக்ஸோடெர்ம் (Nixoderm) மதிப்பை இழந்ததாகிறது. இந்த உபத்திரவத்தின்பேரில் நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம் இதுதான். ஏழு நாட்களுக்கு நிக்ஸோடெர்ம் (Nixoderm) போட்டுப் பரீட்சை செய்து பாருங்கள். திருப்தி ஏற்படாவிடில் காலிப் பெட்டியைத் திருப்பிக் கொடுத்தால் பணத்தைத் திரும்பப் பெறுவீர்கள். உங்கள் மருந்து வியாபாரியிடம் இன்றே நிக்ஸோடெர்ம் (Nixoderm) வாங்குங்கள். அதற்கு அளிக்கப்பட்டிருக்கும் உத்தரவாதமே உங்களைப் பாதுகாக்கும்.

புத்திமதிகள் சொல்லி வைத்தேன். பெண்ணைப் பார்க்க வரும் தினமும் குறிக்கப்பட்டது.

மணி நாலடித்தவுடன் சொன்னபடி அவர்களும் வந்து விட்டார்கள். எல்லாரும் கூடத்தில் வந்து உட்கார்ந்தவுடன் என் கணவர் உள்ளே வந்து மங்கையை அழைத்து வரும்படி கூறினர்.

மங்கையை அழைத்துக் கொண்டு வந்த நான் அவர்களை நமஸ்கரிக்கும்படி சொல்லி விட்டு நிமிர்ந்தேன். பையனைப் பார்க்கும் ஆவலுடன் நிமிர்ந்தவள் அப்படியே ஸ்தம்பித்து விட்டேன். எந்தப் பையனுடன் தமிழ் விழாவில் மங்கை மரியாதையின்றி வாக்குவாதம் செய்தாளோ, அதே பையன்தான் உட்கார்ந்திருந்தான். எனக்குத் 'திக்'கென்றது. அசட்டுப் பெண்! அத்தனையும் குட்டிச் சுவர்தான் என்ற முடிவுக்கு நான் வந்து விட்டேன்.

நமஸ்காரம் செய்து விட்டு நிமிர்ந்த மங்கையும் திகைத்து விட்டாள். அவள் உடல் நடுங்கியது. அவளது மனத் துடிப்பு பளீரென முகத்தில் தெரிந்தது. நெற்றியில் முத்து முத்தாக வியர்வை துளிர்த்தது. சட்டெனச் சமாளித்துக் கொள்ள முடியாது திணறியவள், மெள்ளக் கால்கள் பின்னலிட விரிப்பில் வந்து உட்கார்ந்தாள்.

மங்கையைப் பார்த்துப் பரவசமடைந்த பையனின் தகப்பனர், "ஒரு பாட்டுப் பாடம்மா" என்றார் மகிழ்ச்சி ததும்பும் குரலில்.

அதிர்ச்சியடைந்து விட்ட மங்கையின் குரல் எழும்பச் சிறிது தாமதம் ஆயிற்று. பாட ஆரம்பித்த பிறகும் அவள் குரலில் நடுக்கம் இருந்தது. குனிந்த தலையை அவள் நிமிர்த்தவே யில்லை.

எனக்கு வியப்பாக இருந்தது. பயம், அடக்கம் என்பதை லட்சியம் செய்யாத மங்கை இன்று நடுங்கினள். அவள் அடக்கம் பையனின் தகப்பனரை முற்றிலும் கவர்ந்து விட்டது. "பயப்படாமல் பாடம்மா" என்று அவர் அடிக்கடி அவளுக்குத் தைரியம் சொன்னர்.

பாட்டை முடித்து விட்டு மங்கை எழுந்தாள். அப்போது பையன் தன் நண்பனிடத்தில் மெதுவாகச் சொல்வதை நான் கவனிக்கத் தவறவில்லை.

வந்தவர்கள் எழுந்து விடைபெறும்போது, பையனின் தந்தை, "பெண் லக்ஷ்மீகரமாக இருக்கிறள். ஒரு நல்ல நாள் பார்த்து எழுதுகிறேன். நிச்சயதார்த்தம் செய்து விடலாம்" என்று சொன்னர்.

என் கணவரது அகமும், முகமும் ஒருங்கே மலர்ந்தன. அவர் அளவற்ற மகிழ்ச்சியுடன் வந்தவர்களுக்கு உபசாரம் கூறி வழியனுப்பினர். அத்துடன் மறுதினமே கலியாணத்துக்கான ஏற்பாடுகளையும் செய்யத் தொடக்கி விட்டார்.

எனக்கு மட்டும் உள்ளூறப் பயம் இருக்கத்தான் செய்தது. "அலர்மேல் மங்கையின் அழகிய திருமணக்" கதையைச் சொன்ன அவ் விளைஞனின் நல்ல குணம் முன்னின்று என் பயத்தைப் போக்கினலும, கடைசிவரை நிதானமாகவும், மரியாதையோடும் பேசிய அப் பையனிடம் இக்தப் பெண்தானே மிகத் துடுக்காகப் பேசினள்? அதை எண்ணி அவன் பெண் வேண்டா மென்றும் மறுக்கலாம். இப்படி என் உள்ளம் பலவிதமாக எண்ணிக் குழம்பியது.

எதிர்பார்த்த கடிதமும் வந்தது. அதை அவசரமாகப் படித்த என் கணவர் அப்படியே அசைவற்று நின்று விட்டார்.

பரபரப்புடன் அக் கடிதத்தை வாங்கினேன்.

அதில் எழுதியிருந்தது :— "......என் பையன் ஒரே பிடிவாதமாகக் கலியாணத்தை இரண்டு மாதங்களுக்குப் பிறகு வைத்துக் கொள்ளும்படி சொல்லி விட்டான். இந்த விஷயத்தில் இதற்கு மேல் நான் செய்வதற்கு ஒன்றுமில்லை......"

இந்த இரண்டு வரிகள் தாம். தட்டிக் கழிப்பதற்குப் பையன் சரியான வழி கண்டு பிடித்து விட்டான். என் பொறுமை கூட இன்று எல்லையைக் கடந்து விட்டது. கலவரத்துடன் வந்து நின்ற மங்கை பக்கம் திரும்பி, "உன் வாயாடித் தனம் அடங்கும் வரை உருப்பட வழியே இல்லை" என்று சொல்லி விட்டு, சலிப்புடன் என் காரியத்தைக் கவனிக்கச் சென்றேன்.

எல்லாவற்றையும் துடைத்து விட்டு வெளிவரும் மங்கை அன்று தன் அறையை விட்டு வெளியே வரவே யில்லை. எனக்கிருந்த மன வேதனையில் அவள் இரவு சாப்பாட்டுக்கும் வரவில்லை என்பதைக்கூடக் கவனிக்க வில்லை.

**ம**று நாள் சாப்பாடு முடிந்து ஊஞ்சற் பலகையில் வந்து உட்கார்ந்த என் அருகில் தானும் வந்து உட்கார்ந்து கொண்டாள் மங்கை. அவள் கனிந்த குரலில், "அம்மா!" என்றாள்.

நான் நிமிர்ந்தேன். அவள் தன் தலையை நிமிர்த்தாமலே, "அம்மா! நான்....அவருக்கு... எழுதட்டுமா, அம்மா!" என்றாள்.

இதைச் சொல்வதற்குள் அவள் குரல் பலமுறை தடைப்பட்டது. நான் திடுக்கிட்டு அவளை அப்படியே அணைத்துக் கொண்டேன். என் மார்பிலே முகத்தைப் புதைத்துக் கொண்டவள் துக்கம் பிறிட விம்மிக் கதறி விட்டாள்.

என் மனம் பதறியது. "அடி, அசட்டுப் பெண்ணே! ஏன் இப்படி யெல்லாம் மனத்தை அலட்டிக் கொள்கிறாய்! இந்த வரன் இல்லா விட்டால் இன்னும் எத்தனையோ வரன்" என்று சமாதானம் கூறி, அவள் முகத்தை நிமிர்த்திக் கண்ணீரைத் துடைத்தேன்.

"இல்லையம்மா, அவரிடத்தில் எனக்கு நம்பிக்கை......" என்று மேலே வார்த்தையைத் தொடர முடியாமல் திணறினள் மங்கை.

அதே சமயத்தில் "தபால்" என்ற குரலைத் தொடர்ந்து ஒரு கவரும் வந்து விழுந்தது.

பரபரப்படைந்த மங்கை சட்டென ஓடிக் கவரைக் கையில் எடுத்தவள், அனுப்பியவரின் விலாசத்தைப் பார்த்து விட்டு அளவில்லா வியப்போடும், ஆவலோடும் கடிதத்தை உடைத்துப் பிரித்துப் படித்தாள். மங்கை அக்கடிதத்தைப் படித்தாள், படித்துக் கொண்டே யிருந்தாள். அவளது வாடிய வதனம் பூரித்தது; ஒளியும், அழகும் புத்தொளி பெற்றுப் பொலிந்தன. கன்றிப் போயிருந்த அவளது பவள உதடுகள் புன்னகையால் மலர்ந்து விரிந்தன.

என் கண்மணியின் பெரு மகிழ்ச்சிக்குக் காரணமாய் நின்ற அக் கடிதத்தைப் படிக்கும் ஆவல் கொண்ட நானும் பரபரப்புடன் எழுந்து அவள் பின்னல் நின்று கடிதத்தைப் படித்தேன்.

"மாமா அவர்களுக்கு,

அநேக நமஸ்காரம். என் அப்பா எழுதிய கடிதம் கிடைத்திருக்கலாம். என் முடிவு அவருக்குக் கோபத்தைக் கொடுத்து விட்டது.

என் படிப்புப் பூர்த்தி பெற இடையில் இரண்டு மாதங்களே பாக்கி. 'மங்கையை மணந்தவுடன் சட்டத்தையும், கல்லூரியையும் மறந்து வாதப் போரில் ஈடுபட்டு விடுவேனே?' என்ற அச்சத்தாலேயே படிப்பைப் பூர்த்தி செய்து கொண்டு மங்கையை மணப்பது என்ற முடிவுக்கு வந்தேன்.

ஆகவே சகல ஏற்பாடும் செய்து கொள்ளவும். பரீட்சை முடிந்த முதல் முகூர்த்தத்தில் மங்கையின் கையைப் பற்றுவேன். —ஸ்ரீனிவாஸன்."

# ஐம்பது வருஷ ரகசியம்



குமாரி மணியன்

அன்று ஓமலூர் பூராவிலும் ஒரே பரபரப்பாக இருந்தது. நெய்யை அளக்கும் போது, கடவுளே இறங்கி நேரில் வந்தாலும் திரும்பிப் பார்க்காத கோவில் கடை ம. க. அ. செட்டியார்கூட அந்தச் செய்தி கேட்டு அப்படியே ஒரு பலம் நெய்யை அதிகமாக வாடிக்கைக் காரருக்கு அளந்து விட்டார்!

பள்ளிக்கூடத்து ஓரத்திலே காலணாவுக்கு 'ஒரு கூறு' என்று கடலைச் சுண்டல் விற்கும் ஒழுவி சுப்பம்மாள் கூட ஈ ஓட்டுவதை மறந்து, பொக்கை வாய் திறந்தபடி அப்படியே அசந்து போனாள்!

கோவில் தர்மகர்த்தா சிவகுருநாதன் செட்டியார்தான் எல்லாரையும் காட்டிலும் அதிக அதிர்ச்சி அடைந்தவர்.

"ஆமாம்! அது எப்படி முடியும்!" "அது எப்படி முடியும்!" என்று அவர் கேட்டுக் கொண்டேயிருந்தார்.

ஆனால், "எல்லாம் ஈசன் செயல்" என்று ஒரே வார்த்தையில் முடித்து விட்டார் பல்லுப் போன தாத்தா.

அவர் சிவகுருநாதனுக்குத் தாத்தா முறை ஆகவேண்டும். கோவிலில் மணியம் வேலை பார்த்து வயதின் முதிர்ச்சி காரணமாக ஓய்வெடுத்துக் கொண்டவர். அவர் ஓய்வெடுத்துக் கொண்டே இப்போது முப்பது வருஷம் இருக்கும்.

ஆமாம். அந்தக் காலத்து மனிதர்களைக் கேட்டால்தான் மணியம் சோமு செட்டியார் பற்றித் தெரியும். தாத்தா சோமசுந்தரம்தான் அந்தக் காலத்தில் கோவில் காரியஸ்தர் சோமு, மணியம் சோமு என்று அழைக்கப்பட்டார்.

கடவுள் நம்பிக்கை வலுத்திருந்த காலம் அது; பணமும் நிறைந்திருந்த காலம் அது. ரங்கூன், பினாங்கு, மலேயா நாடுகளிலிருந்து செட்டியார்களுக்குத் தங்கு தடையின்றிப் பணம் வந்து கொண்டிருந்தது. அப்போது அதற்கு யாரும் தடை விதிக்கவில்லை.

இந்த நிலையில் ஓமலூர் 'சொக்கேசர்' பாடு மிகவும் ஜோராகத்தான் இருந்தது. சொக்கேசர் கோவில் அந்த வட்டாரத்தில் பிரசித்தி பெற்றது. அது கட்டிச் சில நூற்றாண்டுகள் இருக்கும். யாரோ ஒரு குறுநில மன்னர் கட்டியகோவில் அது.

கடல் கடந்து வியாபாரம் செய்யப் போனவர்கள் தங்கள் வெற்றிக்குச் சிவபக்தியையே துணையாகக் கொண்டு லாபத்தில் ஒரு பங்கைக் கோவிலுக்குக் காணிக்கையாகச் செலுத்தினர்; திருப்பணிகள் செய்தனர்.

இந்த விஷயங்களுக்கெல்லாம் யோசனை சொல்லும் மதி மந்திரியாக 'சோமு' விளங்கி வந்தார்.

"யோசிக்காதீங்க! அம்பாளுக்கு வெள்ளிக் கவசம் பண்ணி வையுங்க. 'அப்பச்சி' சுகமா வந்திடுவாங்க" என்பார் சோமு.

உடனே கவசம் தயாராகும். 'அப்பச்சி'யும் சுகமாக வந்து விடுவார்!

இப்படியாகத் தங்கு தடையின்றிப் போய்க் கொண்டிருந்தது அந்தப் பொற் காலம்.

★

இன்று ஓமலூரில் 'அந்தத் திடுக்கிடும் செய்தி' கேட்டு ஆச்சரியப்படாதவரே யில்லை. ஆனால் ஒருவர் மட்டும் வழக்கம்போலவே ஒன்றும் அசையாமல் அதிர்ச்சி யடையாமல் இருந்தார். அவர்தான் அந்தக் காலத்துக் காரியஸ்தர் சோமு.

அப்படி எல்லாரையும் ஆட்டி வைத்த ஆச்சரியகரமான செய்திதான் என்ன!

சொக்கேசர் கோவிலுக்கு வரும்படி மிகவும் குறைந்து விட்டது. கோவிலின் இடிந்த பிரகாரத்தைக்கூடக் கட்ட வழியில்லை. உண்டியில் பண வருவாய், கோவில் குளத்திலுள்ள தண்ணீரைப் போல் வற்றி விட்டது. செட்டியார்களிலும் பலர் நொடித்து விட்டார்கள். சொக்கேசரும் நொடித்துப் போய் விட்டார். கொழும்பு, பர்மா தகராறுகள் கடவுளைக்கூடப் பாதித்து விட்டன. இதற்கு என்ன செய்வது!

தற்போதைய தருமகர்த்தா சிவகுருநாதன் செட்டியார், கோவிலைப் புதுப்பிக்க எண்ணிப் பழைய வெள்ளிக் கவசங்கள் நான்கை உருக்கி அதைப் பணமாக்க எண்ணினார். சர்க்காரின் அனுமதி பெற்று அதை உருக்கவும் ஏற்பாடு செய்து விட்டார். அந்த நான்கு கவசங்களும் நகைகள் வைக்கும் அறையில் மிகவும் பத்திரமாக வைக்கப்பட்டிருந்தன. வெளியிலேயே ஆறேழு வெள்ளிக் கவசங்கள் இருக்கும்போது, இந்த வெள்ளிக் கவசங்களை உள்ளே பத்திரமாக வைத்த காரணம் ஒருவருக்கும் தெரியவில்லை. உள்ளே பல வருஷங்களாக இருந்த காரணத்தினாலோ, என்னவோ வெள்ளிகூட மங்கி, மிகவும் மட்ட ரக வெள்ளியைப் போல் காட்சி யளித்தது.

கோவில் பத்தர் ராமு, வெள்ளியை நன்றாக உரைத்துப் பார்த்து விட்டு, "ரொம்ப சுத்த வெள்ளியில்லை" என்றார்.

எல்லாம் தெரிந்திருந்த குருக்கள் "ஆமாம்! பார்த்த உடனேயே தான் அது தெரிகிறதே" என்று முத்திரை வைத்தார்.

அப்படிப்பட்ட மட்ட ரகமான வெள்ளியை உருக்கும்போது தான் அந்த அதிசயம் நடந்தது. ஊரெல்லாம், உலகெல்லாம் பேசப்படும் அந்த ஆச்சரியம் அப்போதுதான் தோன்றியது. உருக்க உலையிடப்பட்ட 'மட்டரக வெள்ளி' அப்படியே மாற்றுக் குறையாத தங்கமாக மாறி விட்டது.

எல்லாம் சொக்கேசர் மகிமை! வெள்ளி கூட சொக்கத் தங்கமாகி விட்டது!

வெள்ளி உருக்கப்படுவதைப் பார்க்க வந்திருந்த தருமகர்த்தா செட்டியார் அப்படியே கல்லாகச் சமைந்து விட்டார். இன்னொரு தருமகர்த்தா நாராயணசாமி ஐயர் தமது சிறு குடுமியை ஒரு தடவை தட்டி முடிந்து கொண்டார். அப்போது அவரது கைகள் நடுங்கின. அவரால் வேறு ஒன்றும் செய்ய முடியவில்லை. வக்கீலான அவர் சிக்கலான விஷயங்கள் வரும்போது இப்படித் தான் செய்வது வழக்கம். ஆனால் இந்தச் சிக்கல் அவருக்கு இறுதி வரையில் பிடிபடவேயில்லை.

குருக்கள் அப்படியே தாமும் உருகி விட்டார் என்று கூடச் சொல்லலாம். உடனே "சிவசிவா! சொக்கேசா உன் மகிமையே மகிமை! கோவில்

திருப்பணிக்கு வெள்ளியைத் தங்கமாக்கித் திருவிளையாடல் புரிந்தாயே!'' என்று பரவசம் அடைந்தார். 'ஹரஹரா', 'ஹரஹரா' என்று கன்னத்தில் அடித்துக் கொண்டு, கோவில் மணியைக் கணகணவென அடிக்க ஆரம்பித்தார்.

ராமு பத்தரால் ஒன்றும் சொல்லவே முடியவில்லை. மட்டரக வெள்ளி சொக்கத் தங்கமாக மாறியதில் · சந்தேகம் எதுவுமில்லை. உரைகல் பத்தரை மாற்று காட்டுகிறது. அந்த அதிசயத்துக்கு, குருக்கள் சொன்ன 'திருவிளையாடல்' ஒன்றுதான் காரணமாக இருக்க வேண்டும் என்று அவர் எண்ணினார்.

ஐங்கர விநாயகர் கோவிலுக்கு முன்னால் உட்கார்ந்திருந்த பத்தரின் மகனுக்கு இது மிகவும் பெரிய ஆச்சரியமாக இருந்தது. அவனுக்குப் போட்டிகளுக்குப் போடுவதற்கே மாதம் குறைந்த பட்சம் ஐம்பது ரூபாயாவது வேண்டியிருந்தது! இது தவிர, 'பங்கு மார்க்கட்' நிலவரங்கள் வேறு!

"ஆஹா! இந்த வெள்ளியை நம் வீட்டிலேயே வைத்து உருக்கியிருந்தால்...!"

ஒருவேளை பத்தர் மகன் பெரிய பிரபுவாகியிருப்பான். ஆனால் அப்போது வெள்ளி, வெள்ளியாகவே இருந்து விட்டால்—இந்தப் புதிரை விடுவிக்க முடியாமல் திணறிக் கொண்டே அவன் சிந்தனையில் ஆழ்ந்தான்.

ஐயாயிரம் ரூபாய் மதிக்கப்பட்ட கவசம், சுமார் லட்ச ரூபாய் பெறுமான தங்கமாகி விட்டது. கோவிலை இனி நன்றாகப் புதுப்பித்து விடலாம். ஊரெல்லாம் சொக்கேசர் மகிமையைப் பற்றிய பேச்சுத்தான். மைதானத்தில் நடைபெற்ற போட்டா போட்டி, காட்டா குஸ்தி பயில்வான்களைப் பற்றிக் கூட அவ்வளவு பேச்சில்லை என்றால் பாருங்களேன்!

அன்று முதல் கோவிலில் ஒரு புத்தொளி வீசத் தொடங்கியது. எல்லோரும் சுறுசுறுப்பாயிருந்தார்கள். வெள்ளி தங்கமாக மாறிய திருவிளையாடல் நடந்த அதிசயத்தினால் குருக்கள் அன்று முதல் உண்மையாகவே பக்தியோடு பூஜை செய்தார். நாயனக்காரர் உள்ளம் உருகி ஊதினார். மடப்பள்ளியில் சிக்கனமின்றிப் பொங்கலுக்கு வேண்டிய அளவு வெல்லம் போடப்பட்டது. ஈசனின் திருவிளையாடலில் இவ்வாறாக எல்லாரும் சொக்கிக் கிடந்தார்கள்.

ஆனால் சொக்கேசரின் 'ரஸவாதம்' ஒருவருக்கும் புரியாத புதிராகத்தானிருந்தது. இந்தச் செய்தி தினசரிப் பத்திரிகைகள் மூலம் எங்கும் பரவியது. "கடவுள் இல்லை என்கிறார்களே" என்று பேசினர் பலர். சொக்கேசர் உண்டியில் மறுபடியும் கொஞ்சம் கொஞ்சமாக நிரம்பி வழிய ஆரம்பித்தது.

சிவபிரானின் 'ரஸவாதத் திருவிளையாடல்' கேட்டு உலகமெல்லாம் அதிசயத்தில் ஆழ்ந்தது, ஆனால் ஒரே ஒரு மனிதரைத் தவிர. அவர்தான் பழைய மணியம் சோமு.

இந்த அதிசயத்தைக் கேட்டுத் தாத்தா சோமு செட்டியார் 'சிவ சிவா' என்று சொல்லவில்லை. கொஞ்சம்கூட அவர் ஆச்சரியப்பட்டதாகவும் தெரியவில்லை. வெற்றிலையை இடிக்கும் அவர் கை கொஞ்சங்கூடப் பதட்டத்தினால் ஆடவில்லை. ஆனால் ஒளி யிழந்திருந்த அவர் கண்களிலிருந்து மாத்திரம் கண்ணீர் வடிந்தது. முகத்தில் பிரதிபலித்த அந்த ஒளியிலிருந்து அதை ஆனந்தக் கண்ணீர் என்று நாம் தெரிந்து கொள்ளலாம்.

"சொக்கேசா! உன் பொருள் உனக்கே பத்திரமாகச் சேர்ந்து விட்டது" என்று முணுமுணுத்தார் வயது முதிர்ந்த அந்தக் கிழவர்.

பல வருஷங்களுக்கு முன்பு நடந்த அந்தச் சம்பவம் அவர் மனத்திரையில் தோன்றியது.

ஆம், அது நடந்து கிட்டத்தட்ட அறுபது வருஷங்கள் ஆகின்றன. கோவிலுக்குச் சோமு செட்டியார் வந்து அப்போது பத்து வருஷங்கள் ஆகி விட்டன. கோவில் விவகாரம் பூராவும் மணியம் கையில்தான். தர்மகர்த்தா மிட்டாதார் பாலுசாமி ரெட்டியார், சோமு சொன்னபடி ஆடுவார். சோமுவுக்கு மணியம் பொறுப்புடன், தர்மகர்த்தாவின் காரியஸ்தர் வேலையும் ஆனசமயம் அது. கல்யாணமே செய்து கொள்ளாத ஒண்டிக்கட்டை மணியம். தெய்வ சேவையையே முக்கியமாகக் கொண்டவர். ஊரெல்லாம் அவர் நல்ல பெயரெடுத்தார்.





தீபாவளிக் கொண்டாட்டங்களை யொட்டி, சிங்கப்பூர் செட்டியார்கள் கோவிலில் பாரதியார் விழா வெகு சிறப்பாகக் கொண்டாடப் பட்டது. விழாவுக்கு ஆயிரக்கணக்கானவர் வந்திருந்தனர். பாரதியார் பாடல் போட்டியும் நடந்தது. முப்பத்து நான்கு குழந்தைகள் கலந்து கொண்டார்கள். பாடல் போட்டியில் பரிசு பெற்ற பெண்மணிகளையும், டாக்டர் அழகப்பச் செட்டியார் அவர்களைக் கௌரவிக்கும் வகையில் நடந்த தேநீர் விருந்துக் காட்சியையும் மேலே படத்தில் காணலாம்.

தற்போதைய தருமகர்த்தா சிவகுருநாதன், மணியத்தின் ஒன்றுவிட்ட தங்கையின் பேரன்.

தருமகர்த்தா மிட்டாதார் ரெட்டியார் நல்லவர்தான். ஆனால் விதி யாரை விடுகிறது! கெட்ட சகவாஸத்தினால் அவர் குடி வலையில் மயங்கி விழுந்து, பலவிதமாகப் பணத்தை வாரி இறைக்க ஆரம்பித்தார். மிட்டாதார் மகன் வேறு பல வகைகளிலும் உலகத்தைத் தனது இருபதாவது வயதிலே அளக்க ஆரம்பித்தான். சீக்கிரத்தில் தந்தையும் மகனும் நெருக்கடியில் சிக்கிவிட்டார்கள். மகன் மீது கைது வாரண்ட் வரப்போவதாக வதந்தி உலாவியது. மிட்டாதார் மீதும் பல புகார்கள் வழக்குகளாக உருவெடுக்கலாயின. அடகு வைத்துப் பணம் புரட்டப் பொருளுமில்லை; நம்பிக் கொடுப்பாருமில்லை.

பணத்துக்குப் பறந்த மிட்டாதார், கோவில் நகைகள் மீது கண்ணோட்டம் விட்டார். மணியத்தைக் கைக்குள் போட்டுக் கொண்டால் காரியம் முடிந்து விடும். சொக்கேசரை ஏமாற்றினாலும் ஏமாற்றி விடலாம், ஆனால் மணியத்தை ஏமாற்றுவது மிகவும் கஷ்டமான காரியம் என்பது அவருக்குத் தெரியும். இருந்தாலும் முயற்சி செய்து பார்க்க எண்ணினார்.

அப்போதுதான் ரங்கூன் சென்று திரும்பிய சுந்தரம் செட்டியார், ஒரு பெரிய பணமுடிப்பைச் சோமுவிடம் கொடுத்துக் கோவிலுக்கு ஏதாவது செய்து விடும்படி கூறியிருந்தார். இது மிகவும் சகஜம். ரூபாயை மணியக்காரரிடம் கொடுத்து, அதைக் கோவிலுக்குச் செய்கிறாரா, இல்லையா என்றுகூடக் கவனியாமல் ரங்கூன், மலேயாவுக்குத் திரும்பி விடுவார்கள். பணம் கொடுத்ததுகூட ஒருவருக்கும் தெரியாமல் இருக்கும், பல சமயங்களில். மணியக்கார சோமு செட்டியார் மீது எல்லோருக்கும் அவ்வளவு நம்பிக்கை இருந்தது.

சோமுவும் மிகவும் உண்மையானவர். தமது வலது கை செய்யும் காரியங்கள் கூட இடது கை அறியாமல் மிகவும் பொறுப்பாகச் செய்வார். சுந்தரம் செட்டியார் கொடுத்த பணத்தைக் கொண்டு திருநெல்வேலியில் தமக்குத் தெரிந்த ஆசாரி ஒருவரிடம் கொடுத்துச் சுவாமிக்கும் அம்பாளுக்கும் தங்கக் கவசங்கள் செய்வதற்குச் சொல்லி விட்டார். வேலை ஆரம்பமாயிற்று.

அவை செய்து வந்து இரண்டு நாட்கள் ஆயின. ஆனால் ஒருவரும் அறியாவண்ணம் இரவோடிரவாக அவற்றைத் தமது வீட்டிலிருக்கும் பெரிய மரப் பெட்டியில் வைத்துப் பூட்டிவிட்டார். நல்ல நாள் பார்த்து அவற்றை வெளியே எடுத்து ஊருக்குத் தெரியப் படுத்தலாம் என்பது அவர் உத்தேசம். "நல்ல வேளை, நல்ல நாள்" பார்க்காமல் எந்தக் காரியத்தையும் செய்ய மாட்டார் அவர். அது நல்ல பழக்கமோ, கெட்ட பழக்கமோ அது ஒன்றும் அவருக்குத் தெரியாது.

அன்றுதான் மிட்டாதார் திடீரென்று கோவிலுக்கு வந்தார். தருமகர்த்தாவின் திடீர்பக்தி எல்லாரையும் ஆச்சரியத்தில் ஆழ்த்தியது. அந்திகால பூஜை ஆரம்பமாகியது. ரெட்டியார் சொக்கேசர் முன் தொழுது நின்றார். அவரது கை பதறத் தொடங்கியது. கற்பூரம் எடுக்கையில் இன்னொரு விஷயத்தை மணியம் கவனித்தார். மிட்டாதாரின் ஐந்து விரல்களையும் அலங்கரித்த மோதிரங்களில் ஒன்றைக் கூடக் காணோம். கொளுத்திய சூடத்தின் ஒளியிலே மிட்டாதாரின் விரல்கள் வெறிச்சென்று காட்சியளித்தன. முன்னால் அவர் கையை அலங்கரித்த அதே மோதிரங்கள் தற்போது எந்த மார்வாடியின் இரும்புப் பெட்டியை அலங்கரிக்கின்றனவோ, யார் கண்டது!

முஸாபரி பங்களாவில் தங்கியிருந்த மிட்டாதார் முன்பு அன்றிரவு கோயில் மணியம் சோமு செட்டியார் நின்று கொண்டிருந்தார்.

"என்ன செட்டியாரே, சொக்கேசருக்கு நிறையத் தங்க நகைகள் உண்டு இல்லையா!" என்று ஆரம்பித்தார், மிட்டாதார்.

"ஆமாம், மிட்டாதார்வாள்" என்றார் சோமு.

"அவைகளிலே சிலவற்றை எடுத்து விற்று, புது 'பாஷன்' நகைகளாக அம்மனுக்குச் செய்ய உத்தேசம். என்ன சரிதானே" என்றார் ரெட்டியார்.

சோமுவுக்கு விஷயம் விளங்கி விட்டது. கொஞ்சகாலமாக ரெட்டியாரின் நடத்தையைக் கவனித்து வந்த அவர் தர்மகர்த்தாவின் போக்கை அறிந்து கொள்ளத் தவறவில்லை.

சொக்கேசரின் உண்மை பக்தரான செட்டியாரின் மனம் பதறியது. மோதிரங்களை இழந்து வெறிச்சென்றிருந்த மிட்டாதாரின் விரல்கள் அவர் கண்முன் தோன்றி வரப்போகும் அபாயத்தை அறிவித்தன. ஆனால் நிலைமையைச் சமாளிக்கும் தைரியம் அவருக்கு எப்போதும் உண்டு.

# இதோ! உங்களுடைய ரேடியோவிற்கு ஏற்ற அற்புதமான, புதிய ரேடியோ பாட்டரி

# சக்தி நிறைந்தது

விலை குறைவானது
நம்பிக்கைக்குகந்தது
நீடித்து உழைக்கக்கூடியது




பாட்டரி தயாரிப்பதில் முற்றிலும் புதிய முயற்சியின் பயனாக 'எவரெடி' 'மினி-மாக்ஸ்' ரேடியோ பாட்டரி உற்பத்தி செய்யப்படுகிறது. இந்த பாட்டரியின் உள்ளே ஒவ்வொரு கன அங்குல இடத்திலும் மற்றெந்த பாட்டரிகளையும் விட அதிகப்படியான, வேலை செய்யக்கூடிய பொருள்கள் பொருத்தப்பட்டுள்ளன. தட்டையான செல்கள் அமைக்கப்பட்டிருப்பதால் இதன் பரிமாணமும் கனமும் குறைவாயிருக்கின்றன. ஆயினும் இது முழு சக்தியை அளித்து, வெகு நாள் நீடித்து உழைக்கக் கூடியது. இதுவே உங்களுடைய ரேடியோவிற்கு ஏற்ற பாட்டரி!

உங்கள் பணத்திற்கு அதிக மதிப்பு... நீங்கள் செலவழிக்கும் பணம் சக்திக்காக — பாக்கிங் வஸ்துக்களுக்காக அல்ல!




'எவரெடி' 'மினி-மாக்ஸ்' ஏன், எவ்வாறு, இதர பாட்டரிகளை விட நன்றாக வேலை செய்யக்கூடியது என்று உங்களுடைய ரேடியோ வியாபாரியிடம் கேளுங்கள்.

ஒரு நாஷனல் கார்பன் தயாரிப்பு

NCM 3908



"உங்கள் மாப்பிள்ளை சென்னையில் இப்பொழுது என்ன செய்கிறான்?"

"படிக்கிறான், ஸார்! படிக்கிறான்! காலேஜில் படிக்கிறான்....ஆகையினாலே சென்னையில் எங்கள் பாங்கியின் கிளை ஆபீஸ் ஒன்றை உடனே ஆரம்பித்து விடலாம் என்று தீர்மானித்திருக்கிறேன்!"

---

"மிட்டாதார்வாள், நகைகளை மாற்றிச் செய்யலாம். ஆனால் பக்த கோடிகள் செய்ததை மாற்ற நமக்கு அதிகாரம் ஏது!" என்றார்.

சோமுவின் ஆட்சேபணை மிட்டாதாருக்குச் சிறிதும் பிடிக்கவில்லை.

"ரொம்பக் கண்டு விட்டீர் அதிகாரத்தை... சரி, சரி நகைகளை உருக்கினால் பக்த கோடிகள் வருத்தப்படுவார்கள். கவசங்களை உருக்கிவிட்டால் போகிறது" என்றார் மிட்டாதார்.

சோமுவுக்கு உலகமே சுழன்றது. நல்ல வேளையாகப் புதுத் தங்கக் கவசங்கள் அவர் வீட்டில் பத்திரமாக இருந்தன. கோவில் கணக்கில் கூட இன்னும் அவை வரவில்லை. அதுபற்றி ஒருவருக்கும் தெரியாது. இதுவும் சொக்கேசர் அருள்தான். மிட்டாதார் மறுபடியும் பேசினார்.

"என்ன செட்டியார், கடவுளுக்கு நாம் எவ்வளவு செய்கிறோம்! அவரும் நமக்குக் கொஞ்சம் செய்யணுமில்லே. அவசரமாக இருபதினாயிரம் ரூபாய் வேணும். தங்கக் கவசம் எதுவாயினும் இருந்திச்சின்னா அதற்குப் பதில் தங்க மூலாத்தை வைத்துவிட்டு அதை உருக்கிப்பிடலாம்னு நினைக்கிறேன். பின்னாலே பணம் வந்ததும் இரட்டிப்பாய்ச் செய்துட்டாப் போச்சு. என்ன சோமு, உமக்கும் நல்லகாலம் பிறக்கட்டுமே இதோடே" என்று துல்யமாக மணியத்தை எடை போட ஆரம்பித்தார் ரெட்டியார்.

இதைக் கேட்டவுடன் மணியத்துக்குப் பளிச்சென்று ஒரு புது யோசனை தோன்றியது. இது வரை வருத்தத்தைக் காட்டிக் கொண்டிருந்த முகம் பளிச்சென்று ஒளி வீசியது. மிட்டாதாரின் யோசனை அவருக்கு ஒரு வழி காட்டியது.

"செய்யலாம். ஆனால் தங்கக் கவசமே நம்மிடம் கிடையாதே. வெள்ளிக் கவசத்தைக் கொண்டு ஆயிரம்கூடப் புரட்ட முடியாதே" என்றார் சோமு அமைதியாக.

பெரும் தொகை எதுவும் கிடைக்க வழியில்லை என்று கண்ட மிட்டாதார் அந்தப் பேச்சை அப்படியே விட்டு விட்டார்.

★

இது நடந்த ஒரு வாரத்துக்குள் ரெட்டியாரின் மகன் கைது செய்யப்பட்டான். கொஞ்ச காலத்துக்குள் மிட்டாதாரின் மைனர் விளையாட்டுக்கள் அம்பலமாகி விடவே, வேறு ஒரு பிரமுகர் தர்மகர்த்தாவாக நியமிக்கப்பட்டார்.

இதற்குள் சோமு தமது பக்தியைச் செயலில் காட்டி விட்டார். ரெட்டியாரின் நடத்தை அவருக்கு மனிதனின் இயற்கை குணத்தை எடுத்துக் காட்டியது. பொன்னாசை எதற்கும் துணிந்து விடும் என்பதை அவர் அறிந்தார். தங்கக் கவசங்கள் என்றும் ஆபத்தானவை என்பது அவருக்கு நன்றாகத் தெரிந்தது. வீட்டிலுள்ள கவசங்களுக்கு வெள்ளி மூலாம் பூசச் செய்தார்.

மிட்டாதார் கெட்ட எண்ணத்துடன் வெள்ளியைத் தங்கமாக, ஆக்க எண்ணினார். ஆனால் மணியம் நல்ல எண்ணத்துடன் தங்கத்தை வெள்ளியாக்கி விட்டார்! எப்படியானால் என்ன! ஒருவர் உலகத்தை மயக்கிக் கடவுளைக்கூட ஏமாற்ற எண்ணினார். இன்னொருவர் அதே உலகத்தை மயக்கி அந்தக் கடவுள் காட்சி யளிக்கும் கோவிலின் சொத்தைக் காப்பாற்ற எண்ணினார்.

அப்படியே சொக்கேசருக்கும் அம்பாளுக்கும் நான்கு புது வெள்ளிக் கவசங்கள் சேர்ந்தன. ஆனால் இந்தப் புது கவசங்களை மட்டும் நகைகள் வைக்கும் உள் அறையிலேயே வைத்து விட்டார், மணியக்கார சோமு. வெள்ளிக்குள் தங்கமிருக்கும் என்பதை ஒருவரும் சந்தேகிக்கவில்லை; சந்தேகித்திருக்கவும் முடியாது.

பல்லை இளிக்கும் வெள்ளியைத் தங்கமாக ஆக்கப் பாடுபடும் இந்த உலகம், கண்ணாடியைத் தங்கம் போல் காட்டும் இந்த நாகரிகம், எட்டணாக் காசை எட்டு லட்ச ரூபாய் போட்டிப் பரிசாக மாற்ற அலையும் இந்த மனித உள்ளம், செட்டியாரின் புது விதமான ரஸவாதத்தைப் பற்றி ஐம்பது ஆண்டுகள் ஒன்றும் சந்தேகிக்கவில்லை. பல மனிதர்களின் கெட்ட போக்கைத் திருப்புவதற்காக ஒரு மனிதனால் ரகசியமாகச் செய்யப்பட்டது. அந்த ரகசியத்தைக் கோவிலுக்குள் சொக்கேசரும் வெளியில் செட்டியாரும்தான் அறிவார்கள்.

★

சிவ சொத்தைக் காக்க வேண்டுமென்று செட்டியார் செய்த ஏற்பாடு பல ஆண்டுகளுக்குப் பின் உடைவிடப்பட்டபோது உருகித் தங்கமாக ஜ்வலித்தது. "சொக்கேசா! உன் சொத்து உனக்கே பத்திரமாய்ச் சேர்ந்து விட்டது" என்று மட்டும் கூறிக் கொண்டிருந்தார். அவர் கண்களில் ஆனந்த பாஷ்பம் பொங்கியது.

புதிய துவஜஸ்தம்பத்தை உருவாக்கி அமைக்கும் முயற்சியில் ஊரெல்லாம் ஈடுபட்டிருந்தது. ஆனால் அந்தத் திருப்பணிக்கு உண்மையான காரண கர்த்தாவான, பல ஆண்டுகளுக்கு முன் ரஸவாதம் செய்த செட்டியாரைப் பற்றி அறியவில்லை எவரும்.

ஆனால் எல்லாமறிந்த சொக்கேசர் மட்டும் ஆனந்த மயமாக விளங்கினார். "டாண், டாண்" என்று ஆலாட்சி மணி முழங்கியது. கடவுளிடம் பிரதிபலித்த அதே ஆனந்தமான அமைதியுடன் "டக் டக்" கென்று வெற்றிலை பாக்கை இடித்துக் கொண்டிருந்தார் செட்டியார்.

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press, No. 20 Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras 10.

REGISTERED No. M. 4392
*Registered as a newspaper in Ceylon*

"வெண்மையான, சுத்தமான
லக்ஸ் டாய்லட் சோப்பின்
நுரை மிகவும் மிருதுவானது, நறுமணம் கமழ்வது..."
என்கிறார்
பத்மினி




இந்தியாவில்
தயாரித்தது

லக்ஸ் டாய்லட் சோப் தயாரிக்க மிகவும் சுத்தமான எண்ணெய்கள் மட்டும்தான் உபயோகிக்கப்படுகின்றன. அதனால்தான் எப்பொழுதும் அது அவ்வளவு வெண்மையாக இருக்கிறது. பத்மினி கூறுவதாவது: ''லக்ஸ் டாய்லட் சோப்பின் செழிப்பான, வெண்மையான நுரை சருமத்துவாரங்களுக்குள் ஆழப்புகுந்து என் வதனத்தை மிருதுவாகவும், அழகாகவும் வைத்துக்கொள்கிறது. அன்றியும் அதன் நீடித்திருக்கும் நறுமணத்தை நான் மிகவும் விரும்புகிறேன்!''



முக்கிய செய்தி!

தலைமுதல் கால்வரை
கவர்ச்சி அளிக்க
புதிய பெரிய சைஸிலும்
இப்பொழுது கிடைக்கிறது!
இன்றே வாங்கி உபயோகியுங்கள்!

"...அதனால்தான்
என் வதனத்தை
கவர்ச்சியோடு வைத்திருக்க
லக்ஸ் டாய்லட் சோப்பை
உபயோகிக்கிறேன்!"

 சினிமா நட்சத்திரங்களின் அழகு தரும் சோப் 

LTS. 431-50 TM